1 – 25-2

பிலவ, மாசி 14 — பிப்ரவரி 25, 1962




## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.









வர்ஜீனியா புகையிலை இறக்குமதியாகும் விதேசிப் பண்டமென்றே கருதப்படுகிறது. உண்மையில், நிலமும் சீதோஷ்ண நிலையும் ஒத்துக்கொள்ளுமேயானால், உலகின் எப்பகுதியிலும் உற்பத்தி செய்து கொள்ளக்கூடிய ஒருவகைப் புகையிலையே வர்ஜீனியா. இன்று சிகரெட் உற்பத்தியில் முதன்மையான நாடுகள் இந்தியப் புகையிலையைப் பெருமளவில் வாங்கிச் செல்வதைப் பார்க்கையில், இந்தியாவின் வர்ஜீனியா புகையிலை அதி உன்னதமானது என்பது நிரூபணமாகிறது.

## புகையிலையின் வரலாறு...6

Panama

20

CIGARETTES



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

## பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.706 TM

Greens' Advtg



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 30

# ஆபத்தை உணருங்கள்!

'சோஷலிஸம்தான் இந்த நாட்டுக்கு விமோசனம் அளிக்கும். அதில் சிறிதளவு ஐயம் கொண்டவர்களும் கூடக் காங்கிரஸை விட்டு விலகிச் சுதந்திரக் கட்சிக்குப் போய்ச் சேருங்கள்' என்று பிரதமரவர்கள் மீண்டும் மீண்டும் கடுமையாகப் பேசி வருகிறார். காங்கிரஸ் கட்சி மற்றொரு முறையும் பாராளுமன்றத்தில் கணிசமான எதிர்ப்பு இல்லாத பெரும்பான்மை அந்தஸ்தைப் பெறுமானால் அதனால் எவ்வளவு கேடு விளையும் என்பதை இப்போதாவது உணர வேண்டும்.

மந்திரி பதவிக்காகவே மக்கள் சபைக்குத் தாம் 'தேர்ந்தெடுக்கப்பட்டதாக' எண்ணும் தமிழ் நாட்டுப் பிரமுகர் ஒருவரும், காங்கிரஸ் கட்சி இம்முறையும் நாட்டைச் சர்வமானியமாக்கிக் கொண்டால் முழுமூச்சுடன் கண்ட்ரோலும் ரேஷனும் மறுபடியும் வரும் என்று குறிப்பு காட்டுகிறார். சர்க்காரின் இரும்புப் பிடி மக்களை இன்னும் கொடூரமாக நெரிக்கத் தொடங்கும்; கருப்புச் சந்தையும், சலுகை ஆட்சியும், லஞ்ச ஊழலும் கேட்பார் இல்லாமல் தன்னிச்சையாகக் கொண்டாட்டம் போடும்.

'சுதந்திரக் கட்சி கூறும் அரசியல் கொள்கை அமுலானால் அரசாங்கமே இராது; அராஜகம்தான் நிலவும்' என்கிறார் இப்பிரமுகர். தவறு. இவர் கூறும் கண்ட்ரோல் ஆட்சி ஏற்பட்டாலோ அரசாங்கம் ஒன்றுதான் பூரணபலத்துடன் இருக்கும்; மக்கள் எல்லோரும் உயிர்த் துடிப்பை இழந்து விடுவார்கள் என்று எச்சரிக்கிறோம்.

உலக மகாயுத்தத்தால் உருக்குலைந்துபோன ஜெர்மனியும், ஜப்பானும், சோஷலிஸத்தைப் புறக்கணித்துச் சுதந்திரப் பொருளாதாரத்தின் வழியேதான் சுபிட்சம் கண்டன. சோஷலிஸத்தைக் கைக்கொண்ட இதர ஜனநாயக நாடுகளில் இங்கு நடப்பது போல் நியாயமான நஷ்ட ஈடு கொடுக்காமல் சொத்துக்களை அரசாங்கம் பறிமுதல் செய்யவில்லை; நீதி நிர்வாகத்தின் அதிகாரத்தை மனம் போனபடி சிதைக்கவில்லை.

'சர்க்காரின் வேலை முறைகளை இன்னும் அதிகமாக்குவோம்; மேலும் வரிகள் போடுவோம்; நிலத்தைப் போலவே இதர சொத்துக்களுக்கும் வரம்பு விதிப்பது பற்றி யோசிப்போம்; மேலும் பல தொழில்களைச் சர்க்கார் வசமாக்குவோம்; கண்ட்ரோல்களை அதிகரிப்போம்; பாட திட்டங்களை எங்கள் இஷ்டப்படியே அமைப்போம்; சமூகப்பணி முழுவதையும் சர்க்கார் கண்காணிப்பின் கீழ் கொண்டுவருவோம்' என்றெல்லாம் கூறும் காங்கிரஸ்காரர்களுக்கு வோட்டளிப்பது எத்தனை அபாயம் என்பதை மக்கள் உணர வேண்டும். 'நிலங்களையெல்லாம் கூட்டுப் பண்ணையாக்குவோம்; என்றாலும் சொந்தக்காரர்களின் உரிமையைத் தொடமாட்டோம்' என்கிறார்களே இதைப் போன்ற ஓர் அபத்தமான முரண்பாட்டை எங்காவது கண்டதுண்டா?

ராஜாஜி இந்த மறைமுகமான கம்யூனிஸ ஆபத்தைப் பற்றித்தான் எச்சரிக்கிறார்.

சில முதலாளிப் புலிகள் ராஜாஜியின் பின்னால் நின்றுகொண்டு அவரை இயக்குவதாக ஸ்ரீ டி. டி. கே. அவர்கள் கூறுகிறார். காந்தி மகானுக்காகக்கூடத் தாம் சரி என்று தீர்மானமாக நம்பிய கொள்கைகளை விட்டுக் கொடுக்காதபடி தனித் தன்மையும் குன்றாத நெஞ்சுரமும் பெற்றிருந்த ராஜாஜியைச் சில தனவந்தர்கள் தம் வசப்படுத்திக் கொண்டிருப்பதாகக் கூறப்படும் அபவாதத்தை யாரும் சட்டை செய்ய மாட்டார்கள். உண்மையில் இந்நாட்டை விழுங்கக் காத்திருப்பது கம்யூனிஸப் புலி - அல்லது கரடி - தான்,

சோஷலிஸம் என்ற மாறு வேஷத்தில்—காங்கிரஸ் என்ற பெயரில்—அது பிரவேசிக்கப் பார்க்கிறது.

'ஸ்ரீ கிருஷ்ண மேனனிடம் நம்பிக்கையில்லாதவர்கள் சுதந்திரக் கட்சியில் சேருங்கள்' என்று ஸ்ரீ நேரு முழங்கியிருக்கிறார். சுருக்கமாகவும், அப்பட்டமாகவும் சொல்லப்போனால் ஸ்ரீ மேனன் ஒரு கம்யூனிஸ்ட் ஆதரவாளர். சோஷலிஸ்ட் கட்சிகள் கூட அவரை ஆதரிக்காத போது கம்யூனிஸ்ட் கட்சி ஏன் அவரைப் பகிரங்கமாக ஆதரித்து வருகிறது? இது ஒன்றே மக்களின் கண்களைத் திறந்துவிடப் போதுமே!

இதைக் கண்டுதான் ஸ்ரீ ஜயப்பிரகாஷ் அபாயச் சங்கு ஊதுகிறார்.

'என்னை அரைக் கம்யூனிஸ்ட் என்று ராஜாஜி சொல்கிறார். நாட்டுக்கு அநுகூலம் ஏற்படுமானால் முழுக் கம்யூனிஸ்டாகவும் ஆவேன்' என்று கூறியுள்ள நேருஜி அதனை மெய்ப்பித்துக் காட்டிவிடுவாரோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது.

யாவரும் சர்க்காரின் உடைமையாகி அது அளிக்கும் உணவையும், தொழிலையும் பெற்று, அடிமை வாழ்வு வாழ்வதற்கு வாக்காளர்கள் சம்மதிக்க மாட்டார்கள். ஆகையால் காங்கிரசுக்குப் பெரும் எதிர்ப்பு உண்டாக்க வேண்டியது மிக மிக அவசியமாகும். தேர்தல் நடைபெறவிருக்கும் தொகுதிகளிலுள்ள மக்கள் விழித்தெழுவார்களாக!

# வாதங்களைக் கேளாமல் தீர்ப்புக் கூறவா?

மத்திய அரசாங்க உள் துறை மந்திரி சர்க்கார் ஊழியர்களுக்கு ஒரு 'யோசனை' கூறியிருக்கிறார். அரசியல் கட்சிகள் நடத்தும் தேர்தல் கூட்டங்களில் அரசாங்க ஊழியர்கள் எவ்விதத்திலும் தொடர்பு கொள்ளலாகாது என்பதே இந்த யோசனை. யோசனை, புத்திமதி, அறிவுரை என்ற பெயர்களைச் சொன்னாலும் இவ்வளவு பெரிய இடத்திலிருந்து, அதற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவர்களுக்கு அனுப்பப் படும் தாக்கீதுகளை உண்மையில் கட்டளையாகத்தான் கருத வேண்டும். உள்துறை மந்திரியின் யோசனையைப் புறக்கணிப்பது பற்றி ஊழியர்கள் சிறிதேனும் எண்ணித்தான் பார்க்க முடியுமா? உத்தரவு என்பதாக வெளியிட்டால் சர்க்கார் சிப்பந்திகளின் ஜனநாயக உரிமைகளைப் பறித்ததாகப் பேச்சு எழும் என்பதாலேயே 'யோசனை' தான் என்று கூறி மழுப்பப் பார்க்கிறது அரசாங்கம்.

ஆம், இந்த உத்தரவு உண்மையில் பிரஜைகளின் அடிப்படை உரிமைகளையே பாதிப்பதாகும். சர்க்கார் ஊழியரும் இந்நாட்டுப் பிரஜைகள்தாம். அரசியலில் நேரடியாக அவர்கள் ஈடுபடுவதால், எந்தக் கட்சி வந்தாலும் போனாலும் நிலைத்து நிற்க வேண்டிய நிர்வாகத்துக்குத் தீமை ஏற்படும் என்பது யாரும் ஒப்புக் கொள்ளக் கூடியதே. ஆனால் அவர்களும் மற்றவர்களைப் போல் வாக்குரிமை பெற்றிருக்கிறார்கள். தங்களது அலுவல்களில் அரசியலைப் புகவிடக் கூடாதெனினும் தனி மனிதர்கள் என்ற முறையில் எந்தக் கட்சியையும் தேர்வு செய்ய உரிமை பெற்றிருக்கிறார்கள். இந்த உரிமையை இன்று வரை காங்கிரஸ் சர்க்கார் பறிக்கவில்லை. எனவே இன்னாருக்கு வோட் செய்யலாம் என்பது குறித்து முடிவு செய்வதற்கு அவர்களும் மற்ற எல்லாரும் பெற்றுள்ள வாய்ப்புக்களைப் பெற வேண்டியது அவசியமல்லவா? ஆனபடியால் தேர்தல் கூட்டங்களில் பல அரசியல் கட்சிகளும் தங்கள் கருத்துக்களைக் கூறுவதால் அவற்றைக் கேட்டு ஒரு தீர்மானத்துக்கு வர அரசியல் ஊழியர்களும் அநுமதிக்கப்பட வேண்டும். 'வாதப்பிரதிவாதங்களைக் கேட்கக் கூடாது; ஆனால் தீர்ப்பு மட்டும் கூறலாம்' என்ற குதர்க்கத்தைத்தான் அரசாங்க யோசனை காட்டுகிறது.

இது வன்மையாகக் கண்டிக்க வேண்டிய ஒரு செயலாகும். இன்று பேச்சுக்களைக் கேட்கக் கூடாது என்பது போல் நாளைக்கே அரசியல் ஊழியர்கள் புத்தகங்களும் பத்திரிகைகளும் படிக்கக் கூடாது என்று சர்க்கார் 'அறிவுரை' கூறாது என்பது என்ன நிச்சயம்? அடக்குமுறை எந்த உருவில் எவ்வளவு மறைமுகமாகப் பிரயோகமானாலும் அதை எதிர்த்தே தீர வேண்டும்.

இந்த நடவடிக்கையிலிருந்து அரசாங்கத்தை நடத்திவரும் காங்கிரஸ் கட்சியானது அந்த அரசாங்கத்திலேயே பணிபுரியும் ஊழியர்களின் ஆதரவைப் பற்றி ஐயப்படுவதாகவே ஊகிக்கலாம். அதற்காக இவ்வித நடவடிக்கைகளை மேற்கொள்வது எவ்விதத்திலும் நன்மை அளிக்காது.

# பொருளற்ற சவால்

'கடந்த பதினைந்து ஆண்டுகளில் நாங்கள் இத்தனை பாலங்கள் கட்டியிருக்கிறோம், அணைகள் எழுப்பியிருக்கிறோம், சாலைகள் போட்டிருக்கிறோம். எதிர்க்கட்சிக்காரர்கள் என்ன செய்தார்கள்?' என்று காங்கிரஸ்காரர்கள் கேட்கிறார்கள்; எழுதுகிறார்கள்; சினிமாப் படம் போட்டும் காட்டுகிறார்கள்.

அதுவும் தேர்தல் சமயத்தில் இவ்வித அபிவிருத்திப் பணிகள் மிகவும் வேகமாக நடந்து வருகின்றன. சில மந்திரிமார்களின் தொகுதிகள் புது இருப்புப் பாதைகளைப் பெறுகின்றன. வேறு சில, குடி நீர் வசதி அடைகின்றன. மற்றும் சில ஊர்களில் பாதாளக் கழிவுகால்கள் அமைக்கப்படுகின்றன. தேர்தல்கள் ஆண்டுக்கொரு முறை நடைபெற்றால் எவ்வளவோ நன்றாக இருக்குமே என்று கூட எண்ணத் தோன்றுகிறது.

ஆனால் அதே சமயத்தில் இந்தச் சமூக நலப் பணிகளைக் காட்டி ஆளும் கட்சி வோட்டு கேட்கும் மடமையும் தெரிகிறது. காங்கிரஸின் வாதப்படி, மேட்டூர் அணை கட்டியதால் ஆங்கிலேயர்கள் இன்று சேலம் ஜில்லாவில் ஆட்சி செலுத்த உரிமை கேட்கலாம்; ஏன், நாடு முழுதும் ரயில் போட்டிருப்பதால் இந்தியாவுக்கே ஆங்கிலேயர் உரிமை கொண்டாடலாம்.

சமூக நலன்களைச் செய்ய வேண்டியது சர்க்கார் கடமைகளில் ஒன்றாகும். கடமையைச் செய்வதற்குப் பிரதி ஏதுமே எதிர்பார்க்கக் கூடாது. நல்ல முறையில் கடமையை ஆற்றினால் மக்களே அந்தச் சர்க்கார் அமைப்பைத் தொடர்ந்து நிலை நாட்டுவார்கள். மக்களுக்கு அத்தியாவசியமான உணவு, உடை, வீட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்யாமல் நாளுக்கு நாள் விலைவாசிகளை உயர்த்தும் கொள்கைகளைக் கடைப்பிடித்து வரும் காங்கிரஸ் சர்க்கார் தன் கடமையைத் திறம்படச் செய்யவில்லை என்பது கண்கூடு. எனவே அங்கொன்றும் இங்கொன்றுமாக நடைபெற்றுள்ள முன்னேற்றப் பணிகளைக் கட்டிக்காட்டி வோட்டுப் பெறப் பார்க்கிறது அது. காங்கிரஸ் திட்டப்படி அடுத்த ஐந்தாண்டிலும் வரிகள் மேலும் உயரப் போகின்றன. பண வீக்கமும் வலுப்பெறத்தான் போகிறது. அதாவது விலைகள் ஏறிக்கொண்டேதான் இருக்கும். மக்களின் ஆதாரத் தேவைகளை நிறைவு செய்யப் புதுத் திட்டத்திலும் வழி கிடையாது. இதற்குக் காங்கிரஸ்காரர்கள் என்ன சமாதானம் சொல்கிறார்கள்?

இன்னொரு விஷயம். இன்றைய அபிவிருத்தித் திட்டங்கள் மக்கள் தரும் வரிப் பணத்திலிருந்து, அல்லது அந்த வரிப் பணத்தைக் கொண்டு அடைக்கப் போவதாகக் கருதப்படும் கடன்களிலிருந்துதான் உருப்பெற்றவை. காங்கிரஸ் கஜானாவிலிருந்து இவற்றுக்காக



ஒரு காசுகூடச் செலவிடப்படவில்லை என்பதை மக்கள் நினைவில்கொள்ளவேண்டும்.

''எதிர்க் கட்சிக்காரர்கள் என்ன செய்தார்கள்?'' என்ற கேள்வி அறிவற்றதாகும். எதிர்க் கட்சிக்காரர்களுடன் சட்டசபைகளில் விவாதித்தபின்தான் இந்தத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. எதிர்க் கட்சியைப் போலவே காங்கிரஸ்காரர்களும் விவாதத்தில்தான் ஈடுபட்டார்கள். ஓர் அங்குலம் பாதையோ, ஒரு சாண் உயர அணையோகூட அவர்கள் தங்கள் உழைப்பை உபயோகித்துப் போடவில்லை. சட்டசபையில் பெரும்பான்மையினர் ஆதரித்த திட்டங்களை, ஊழியர்களைக் கொண்டும் மக்கள் தரும் வரிப் பணத்தைச் செலவிட்டும் நிறைவேற்றி வருகிறார்கள். எதிர்க் கட்சிக்காரர்கள் ஆட்சியிலிருந்தால் அவர்களும் இவற்றில் பல திட்டங்களை நிறைவேற்றியிருப்பார்கள். சிலவற்றை நீத்து அவற்றைவிட நாட்டுக்கு உபயோகமான வேறு திட்டங்களைக்கூட வகுத்திருப்பார்கள். அதன்றி, இந்த நாட்டின் எந்தப் பகுதியிலும் ஆட்சியில்லாத கட்சிகள் செயலுருவில் என்ன செய்தன என்று கேட்பது பேதைமையாகும்.

அபிவிருத்தித் திட்டம் என்று கூறப்படும் இவற்றில் பல, நாட்டை நலிவுறத்தான் செய்யும் என்பது சுதந்திரக்கட்சியின் கொள்கையாகும். சமீப காலத்தில் பயன் தர முடியாத இந்தத் திட்டங்களுக்காக வரிப் பணத்தை ஏராளமாகச் செலவிடுவதை அது எதிர்க்கிறது. இவையெல்லாம் கொள்கைகளை அடிப்படையாக வைத்து அவற்றின் மீது பரிசீலனை செய்ய வேண்டிய விஷயமாகும். ஆனால் காங்கிரஸோ தனது ஏட்டுச் சுரைக்காய் கொள்கையாகிய சம விநியோகத்தைப் பற்றியோ, சட்டங்களைப் புறக்கணித்துச் சொத்தைப் பறிக்கும் சித்தாந்தத்தைப் பற்றியோ அதிகம் பேச முடியாததால் எந்த அரசாங்கமும் ஆற்ற வேண்டிய அபிவிருத்திப் பணிகளைப் பெரிதுபடுத்திக் காட்டி ஏமாற்றுகிறது.

## மலையும் மடுவும் ஒன்றாகுமா?

'ஐ. ஏ. எஸ். அதிகாரி இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் பெறுகிறார்; பியூன் ஒருவர் ஐம்பது ரூபாய் சம்பளம் பெறுகிறார். ஆகக் கூடி இருவரும் சம்பளம் பெறுபவர்கள்; எனவே அவர்களுக்குள் அதிக வேறுபாடு இல்லை.'

'கோடீசுவரர் ஒருவர் மாட மாளிகையில் வசிக்கிறார்; ஏழை ஒருவன் குடிசையில் வாழ்கிறான். எப்படியோ இருவருக்கும் குடியிருப்பு இருக்கிறது. ஆகவே அவர்களுக்குள் ஏதும் வேறுபாடு இல்லை.'

இதுபோன்ற அற்புதமான வாதங்கள் வேண்டுமானால் காங்கிரஸின் பிரசாரங்களைப் படிக்க வேண்டும். மலையையும் மடுவையும் ஒன்றாகக் காணும் அரசியல் அத்துவைத ஞானிகளும் இருக்கிறார்கள் என்றறிந்து வியக்கிறோம்.

'காங்கிரஸைப் போல் சுதந்திரக் கட்சியும் திட்டம் போடுமாம், வரி விதிக்குமாம், கடன் வாங்குமாம், அதன் ஆட்சியிலும் சர்க்கார் கட்டுப்பாடுகள் இருக்குமாம். எனவே காங்கிரசுக்கும் சுதந்திரக் கட்சிக்கும் வித்தியாசம் இடையாது' என்று ஒரு வாதம்.

நாட்டுக்கு எது முடிந்தது, எது உதவுவது, எது உகந்தது என்று பார்த்துத் திட்டமும் வரியும் போடுவதும், கடன் பெறுவதும், மக்கள் சுதந்திரம் அநாவசியமாகப் பாதிக்கப்படாமல் கட்டுப்பாடு விதிப்பதுமே சுதந்திரக் கட்சியின் கொள்கை. இவற்றுக்கு முற்றிலும் மாறான முறையில் நமது சக்தியைச் சற்றும் கருதாமல் திட்டங்கள், வரிகள், கடன்கள், கட்டுப்பாடு ஆகியவை குறித்துத் தனது கொள்கைகளை உருவாக்கியிருக்கிறது காங்கிரஸ்.

வரியே வாங்கக் கூடாது. முன்னேற்றத்துக்குத் திட்டமே போடக் கூடாது என்னும் ஒரு கற்பனைக் கட்சியை—அதிகாரமேயில்லாத சர்க்கார் வேண்டும் என்கிற ஒரு மானசிகக் கட்சியை மட்டுமே காங்கிரஸ் பிரசாரகர்கள் தங்களுக்கு எதிர்க்கட்சி என்று கருதுவார்கள் போலும்!

## படகைப் பிளக்கிறார்கள்

இந்தி என்ற ரம்பத்தைக் கொண்டு காங்கிரஸ் சர்க்காரானது இந்தியா என்ற படகை வடநாடு என்றும் தென்னாடு என்றும் பிளப்பதாக 11-2-1962 கல்கி இதழில் ஒரு படம் வெளியிட்டிருந்தோமல்லவா? நாம் எதிர்பார்த்து

எச்சரித்து எவ்வளவு விரைவில் பலித்து விட்டது, பாருங்கள்!

நாற்பத்தைந்து வயதுக்குக் கீழுள்ள மத்திய சர்க்கார் ஊழியர்கள் யாவரும் அலுவலகங்களில் நடத்தப்படும் இந்தி வகுப்புகளுக்குக் கட்டாயமாகச் செல்ல வேண்டுமெனத் தில்லி உள்துறை மந்திரி இலாகா உத்தரவு பிறப்பித்திருக்கிறது. அவ்விதம் செல்லாவிட்டால் கடமையி லிருந்து தவறியதாக அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என் றும் அச்சுறுத்தியிருக்கிறது. இந்தி கற்க வேண்டும் என்பது அரசாங்க ஊழி யர்கள் கடமை என்று யார் விதித்திருக் கிறார்கள் என்பதுதான் தெரியவில்லை!

எல்லோரும் இந்தி படிக்க வேண்டும்; இந்தி பரீட்சையும் எழுத வேண்டும்; ஆனால் இதில் பாஸாக வேண்டியதில்லை என்கிறது உத்தரவு. அப்படியானால் பய னற்ற ஒரு விஷயத்துக்காக ஊழியர்கள் காலத்தை விரயமாக்க வேண்டுமென்று சர்க்கார் கருதுகிறது? அல்லவே அல்ல! இப்போது தளர்த்தி விருப்பதாகத் தோன்றும் ஒவ்வொரு விதியும் நாளா வட்டத்தில் இறுகிக் கொண்டே தான் வரப் போகிறது. இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டுள்ள ஊழியர் களைவிடப் பிற மொழியினர் நிச்சய மாகப் பிரதிகூலமான நிலைமையில்தான் இருக்கப் போகிறார்கள்.

## அண்ணலின் ஐந்தாவது தனயர்

“தேசியக் கொடியா, கட்சிக் கொடியா என்று வித்தியாசம் தெரியா மல் இத்தனை கொடிகளைப் பறக்க விட் டிருக்கிறோமே! இது சரிதானா?'' என்று மதுரை காங்கிரஸ் மகாநாட்டில் அசா தாரணத் துணிவுடன் கேட்ட ஒரு நியாய புத்தி படைத்த காங்கிரஸ்காரர் ஸ்ரீ கமல நயன பஜாஜ் அவர்கள். ஸ்ரீ கிருஷ்ண மேனனை வட பம்பாய் காங்கிரஸ்அபேட் சகராக நிறுத்தியிருப்பது கம்யூனிஸத் துக்கு அடிகோலும் என்று கூறிக் காங் கிரஸிலிருந்து விலகி, யுவர் காங்கிரஸில் தாம் வகித்து வந்த பதவிகளையும் உத றித் தள்ளியவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பஜாஜ் அவர்கள். இவ்விருவரையும் பெற்றவர், மகாத்மாஜி தமது ஐந்தா வது புதல்வர் என்று உரிமை பாராட்டி யுள்ள ஸ்ரீ ஜமுனாலால் பஜாஜ் அவர்கள்.

பம்பாய் வர்த்தகப் பிரமுகராகிய ஸ்ரீ ஜமுனாலால் பஜாஜ் தமது ஏராளமான சொத்துக் களை மட்டுமின்றி, உட லையும் உள்ளத்தையும் காந்தி மகானிடம் ஒப் படைத்த தியாக சீலர். தனவந்தராகிய இவர் சத்தியாக்கிரகப் போர் களில் ஈடுபட்டுச் சிறை புகுந்ததைக் கண்டு அன் றைய இந்தியா அதிசயித்த துண்டு. 1934லிருந்து பன் னிரண்டாண்டுகளுக்கு இந்தியாவின் அரசியல் தலைநகராக இருந்த வார் தாவுக்குக் காந்திஜியை வரவழைத்துச் சகல வசதி களும் செய்தளித்தவர் ஸ்ரீ பஜாஜ் அவர்கள்தாம்.



ஜமுனாலால் பஜாஜ்

காங்கிரஸில் இருபது ஆண்டுகளுக்கு மேலாகப் பொருளாளராகப் பணி யாற்றியதொன்றே இவர் எவ்வளவு சிக்கனமாகவும் திறமையாகவும் நிதி களை நிர்வகிக்கக் கூடியவர் என்பதற்கு எடுத்துக்காட்டாகும்.

ஸ்ரீ பஜாஜ் அவர்கள் பொருள்தனைப் போற்றி வாழ்ந்தது அச்செல்வம் நாட் டுக்கெல்லாம் நல்ல முறையில் பயனாக வேண்டும் என்பதற்காகத்தான். அதிகம் கல்வி பெற்றிராத பஜாஜ் திருமகள் தமக்களித்திருந்த அருளைக் கலைமகள் பணியிலேயே முக்கியமாகச் செலவிட் டார். தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபை உள்ளிட்ட பலகல்வி நிலையங்களின் தோற்றத்துக்கு அவர் காரண புருஷர்.

இம்மாதம் பதினோராம் தேதி ஸ்ரீ பஜாஜ் அவர்களின் இருபதாவது மறைவு நாள். இதையொட்டி, அவ ருடைய தர்மச் சொத்துக்களைப் பரி பாலித்து வரும் அவரது குமாரர்கள் பம்பாய் பல் கலைக் கழகத்துக்குப் பத்து லட்சம் ரூபாய் வழங்கி யிருக்கிறார்கள்.

இந்த நன்கொடையைக் கொண்டு தொழில் நிர் வாகப் படிப்புக்காக ஒரு கல்வி நிலையம் நிறுவப் படுமென அறிந்து மகிழ் கிறோம். 'ஆதரிசவணிகர்' என்று காந்திஜி செல்லப் பெயரிட்டழைத்த ஸ்ரீ ஜமுனாலால் பஜாஜ் அவர் களின் நினைவுக்கு இது ஒரு தக்க சின்னமாக விளங்குமென நம்பு கிறோம்.

# தவமுனிவர் கண்ட தாசரதி

தட்சிணேசுவரத்தில் பாவன கங்கா தேவி ஓடிக் கொண்டிருப்பாள்.

காலமும் ஓடிக் கொண்டிருக்கும்.

ஆனால் காலத்தையோ, இடத்தையோ பற்றிய சிந்தனையே இல்லாமல், எவ்விதமான எண்ண ஓட்டமுமின்றி இரு தவ யோகிகள் கங்கைக் கரையோரத்தில் அமர்ந்திருப்பார்கள். அவர்களுடைய புறக் கண்களும் அகக் கண்களும் ராமபிரான் குழந்தையாகக் காட்சி தரும் பிரதிமை ஒன்றின் மீதே பதிந்திருக்கும்.

அவர்களில் ஒருவர் ஜடாதாரி என்ற சுவாமியார். உலகெல்லாம் உடைமையாகக் கொண்ட ராமபிரானின் இந்த உலோக விக்கிரகம் அவருடையதுதான். அவர் தட்சிணேசுவரத்துக்குப் புதியவர்.

ஆனால் நாளடைவில் அந்தப் பாலராமன் அவருடைய ஆதீனத்தை விட்டு விட விரும்பியதுபோல் தோன்றியது. தன் அன்பையெல்லாம் அந்த இன்னொருவரின் மீதே அவன் பொழிவதாகத் தோன்றியது.

அந்த இன்னொருவரான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கே இது அதிசயமாகத் தானிருந்தது. அப்போது அவர் தட்சிணேசுவர ஆலயத்தில் பவதாரிணியாகிய ஜகன்மாதாவை ஆராதித்து வரும் இருபத்தெட்டு வயது இளைஞர்; ஆனால் அநுபவத்தில் அதற்குள்ளாகவே எவ்வளவோ முதிர்ச்சி பெற்று விட்டார். அந்த அநுபவவாயிலாகக் கண்டதில், ஜடாதாரி அந்த விக்கிரகத்தில் செம்பையும், வெள்ளியையும், பொன்னையும் காணவில்லை; சதையும், தசையும், நரம்பும், எலும்பும் கொண்ட ஓர் உயிருள்ள மெய்ப் பொருளையே கண்டு வருகிறார் என்பதனை உணர்ந்திருந்தார் பரமஹம்ஸ தேவர். எனவேதான் அவருக்குக் கௌஸல்யாநந்தனன் தன் மீது அதிகப் பரிவு காட்டுவது அதிசயமாயிருந்தது.

அதிசயமானாலும் அந்த இளம் பிள்ளைக்கு ராமகிருஷ்ணரிடம் பாசம் என்னவோ வளர்ந்து கொண்டேதான் வந்தது! நேரம் போவது தெரியாமல் ஒரோரு சமயத்தில் ஜடாதாரியும் அவரும் ஒரு முழு நாள்வரை கூட அந்தத் தசரத குமாரனை நோக்கியபடி இருப்பதுண்டு. அதன் பின்னர் ராமகிருஷ்ணர் தமது இருக்கைக்குத் திரும்பினால்....

அப்போதும் அந்த இளவரசன் அவரைத் தொடர்ந்து வருவான்.

வேதமும், வேத முடியும் பின் தொடர முடியாதபடி எட்டாத உயரத்தில் நிற்கும் பரமன் ராமகிருஷ்ணரைப் பின்தொடர்வான். ஆனால் தான் என்பதை அறவே கரைத்துத் தியாகசீலராக விளங்கிய அவரோ அவனைப் பின் தொடராதே என்பார். "நீ ஜடாதாரிக்கு உரியவனல்லவா? அவர் உன் மீது எல்லையற்ற பற்று கொண்டிருக்கும்போது, ஏன் என் மீது உன் அன்பை எல்லாம் செலுத்துகிறாய்? அந்தப் பரம பக்தனிடமே போ" என்பார்.

தேடி வந்த தெய்வத்தைத் திரும்பிப் போகச் சொல்பவர்களும் இருக்க முடியுமா? அதுவும் தெய்வத்துடன் ஒன்றி வாழ்வதே குறிக்கோளாகக் கொண்ட ஒரு யோகி அவ்விதம் கூற முடியுமா? பெரிய பெரிய உடைமைகளைத் தியாகம் செய்த பலரைப் பற்றிக் கேட்டிருக்கிறோமே; தெய்வத்தையே தியாகம் செய்யும் ஒருவரைப் பற்றிக் கேள்விப்பட்டது உண்டா? இப்படியும் ஒரு சுய உணர்வற்ற நேர்மை இருக்க முடியுமா?

* * *

உதறித் தள்ளினாலும் விடுபவனாக இல்லை தாசரதி. ராமனுடைய பிடிவாதம் தான் உலகம் அறிந்ததாயிற்றே! அந்த உறுதியுடன் ராமகிருஷ்ணரின் இருக்கைக்கு வருவான் அவன். முன் போல் அவருக்குப் பின்னால் வருவதில்லை. அவருக்கு முன்பாகவே குதித்துத் தளர்நடை இட்டபடி சுவாதீனமாக அவரை அவரது அறைக்கு அழைத்துவருவான் அவன்!

இப்படியெல்லாம் குதித்துக் கும்மாளம் போடுபவன் அறைக்குள் வந்ததும் அவர் தன்னை மடியில் படுக்க வைத்துக் கொள்ள வேண்டுமெனச் சிணுங்கத் தொடங்குவான். ராமகிருஷ்ணரோ அவனை அவ்வளவு எளிதில் தம்மிடம் சேர்த்துக் கொள்ள மாட்டார். பிறருடைய உரிமைப் பொருள் என்றே அவர் அவனைக் கருதி வந்தார். கடைசியில் அவருக்காகவே பரிதாபம் பிறந்து குழந்தை ராமனை வாரி எடுக்கச் செல்லும்போது அவன் அவரிடமிருந்து திமிறிக் கொண்டு ஓட்டமாக ஓடி விடுவான். ராமகிருஷ்ணரும் அவன் பின்னால் ஓடுவார்.

அப்பப்பா! அதெப்படித்தான் அம்மாதிரி அவனால் பம்பரமாகச் சுழல முடியுமோ? இத்தனை பெரிய அண்ட சராசரங்களையும் ஓயாமல் சுற்றிச் சுழலச் செய்யும் வல்லமைதான் காரணமோ? ஒரு விநாடி கங்கைத் தண்ணீரைத் 'தொப்' 'தொப்' பென்று அடித்து மகிழ்வான்; அடுத்த நொடியே தோட்டங்களில் பூத்துக் குலுங்கும் மலர்களிடையே மலர் முகமும், மலர் விழியும், மலர்ச் சிரிப்புமாக மலர்ந்து நிற்பான். ராமகிருஷ்ணரின் மனம் மட்டும் மலராது. அதில் முள்ளைக் குத்தியதுபோல நோவுதான்காணும். ஏனென்றால் தோட்டத்தில் இப்படித் துள்ளித் திரியும் ராகவன் அதற்குள் பூம்பாதம் முழுதும் முள்ளைப் பொத்திக் கொண்டு வாடி நிற்பான்.

"ராம லாலா! ராமலாலா! இப்படியெல்லாம் செய்யாதேயடா! நீ பூப்பறித்துத் தரவில்லை என்று யார் அழுதார்கள்? காலெல்லாம் நெருஞ்சி முள்ளைத் தைத்துக் கொண்டு என்னை ஏன் அழ வைக்கிறாய்?" என்று துயரமும், ஆத்திரமுமாகக் கேட்பார் பரமஹம்ஸர்.

"இந்தக் கொளுத்துகிற வெயிலில் ஏன் இப்படித் திரிகிறாய்? காலெல்லாம் கொப்புளம்



ஆக்கத் திறமைக்கும், வாக்குவன்மைக்கும் பெயரெடுத்து, தேவர் குலம் கண்ட சிங்கம் எனப் புகழ் பெற்ற பார்வர்டு பிளாக் தலைவர் பசும்பொன் திரு உ. முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் உருவப் படத்தைப் பம்பாய் திரு உ. முத்துராமலிங்கத் தேவர் கலா மன்றத்தில் ஆச்சாரிய கிருபளானி அவர்கள் சமீபத்தில் திறந்து வைத்தார்கள். கலா மன்றத்தினரின் இரண்டாவது படைப்பாகிய 'பகதூர் வெள்ளையத் தேவர்' என்ற சரித்திர நாடகத்தின் அரங்கேற்றத்தின்போது இந்தத் திறப்பு விழா நடைபெற்றது.

---

கொப்புளமாகக் கண்டிருக்கிறதே. ஏன் இப்படி என் இதயத்துக்குச் சூடு இழுக்கிறாய்?''

''வெயில் கூடாதென்றால் அதற்காகத் தண்ணீரில் அளையலாமா ராமலாலா? இவ்வளவு பெரிய கங்கையில் நீ இறங்கலாமாடா? இத்தனை நாழிகை ஊறத்தான் செய்யலாமா? சளியும், மண்டையிடியும், காய்ச்சலும் வந்து விடுமே ஐயா'' என்பார் வியாதிகளோடு வினையையும் தீர்த்து வைக்கும் வேதநாயகனிடம்.

அவர் வார்த்தைகளை அவன் பொருட்படுத்திய நாளே கிடையாது. தன் சேஷ்டைகளை இஷ்டப்படி செய்து கொண்டே தான் இருப்பான். சில சமயம் அவர் கண்டிக்கும்போது தன் நீலநயனங்களால் அவரை அழகொழுக, அழுதொழுகப்பார்த்தே 'சரிகட்டி' விடுவான். சில சமயங்களில் 'வொங்கு' 'வொங்கு' என்று தன்னைப் பின் தொடரும் அவரை இலட்சியமே செய்யாமல் தனது மெல்லிய சிறிய செம்பவள உதடுகளை முத்துப் பற்களால் கடித்து அழகும் காட்டுவான்.

'அயோக்கியப் பயலே வருகிறேன் இரு. உன்னை அப்படியே நொறுக்கிவிடுகிறேன் பார்' என்று சத்துவ முனி கோபம் கொண்டு வையும் அளவுக்கு அவருடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வான்.

'இந்தச் சம்பவங்களை உங்கள் சித்தம் எவ்வளவுக்கு ஜீரணித்துக் கொள்ள முடியுமோ அவ்வளவுக்கு ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறுகிறார் குருமகாராஜின் புனித சரிதையில் இக்கட்டத்தை விவரிக்கும் ஸ்வாமி சாரதானந்தர். நம் அறிவினால் ஏற்றுக் கொள்ளக் கூடியவை மட்டும் உண்மை அல்ல; உள்ளம் அநுபவித்துச் சுவைக்கும் சம்பவங்களும் உண்மையே என்று கருதும் பாக்கியம் பெற்றவர்கள்தான் இந்த நிகழ்ச்சிகளை நன்கு நுகர முடியும். பரமஹம்ஸரையும், ஜடாதாரியையும் போல் பக்தி செய்யப் பழகாத நாம், அவர்கள் பெற்ற அநுபவங்களைப் பற்றி மட்டும் ஏன் ஐயம் கொள்ள வேண்டும்?

ஃ ஃ ஃ

சாம தான பேத தண்டம் எல்லாவற்றையும் குழந்தை ராமனிடம் குருதேவர் கையாண்டதுண்டு. அவனைக் 'கையாளும்' சமயங்களில் ஆக்ரோஷத்துடன் அவருக்கு 'வெவ்வெவ்வே' காட்டுவான் இக்ஷ்வாகு குல வர்த்தனன். அவனுடைய கனை கனையான கண்களின் மூலையில் அப்போது துளித்துளியாக அரும்பு கட்டி நிற்கும் முத்துக்களைக் காணும் போது பரமஹம்ஸரின் உள்ளம் உருகிக் கரைந்து விடும். அவனை மடியில் அள்ளிப் போட்டுக் கொண்டு, கோமளமான அந்தச் சிறிய முதுகையும், அலை புரளும் பட்டுக் கருங்குழலையும் தடவிக் கொடுத்து ஆசுவாசம் செய்வார்.

பல சந்தர்ப்பங்களில் தானம் கொடுக்கும் ராமனைத் தனக்கு மசிய வைத்திருக்கும் பரமஹம்ஸரிடம் அவனாகவே ஒரு நாள் தானம் கேட்க வந்தான். தின்பதற்கு ஏதேனும் வேண்டும் என்று குஞ்சுக் கையை நீட்டி யாசித்தான் பிரபஞ்சத்துக்கெல்லாம் பசி தீர்க்கும் பரம்பொருள். பரமஹம்ஸரிடம் அவனுக்குத் தர ஏதுமே இல்லை. அவனுடைய அடமோ வலுத்தது. கடைசியில் அந்த அறையில் கிடைத்த அவலை அவனுக்குக் கொடுத்து வைத்தார் பரமஹம்ஸர். கண்ணனுக்குத்தான் அவல் பிடிக்கும் என்பார்கள். ஆனால் ராமகிருஷ்ணரிடம் வந்து பின் ராமனும் கிருஷ்ணாவதாரக் காரியங்களில் இறங்கி விட்டான். அவன் தீராத விளையாட்டுப் பிள்ளையாக அவரைப் படுத்திய பாடுகளே கண்ணன் லீலைகளைத் தானே நினைவூட்டுகின்றன!

அவலை அள்ளிப் போட்டுக் கொண்டு அரிசிப் பற்களும், பிஞ்சுக் கன்னமும் வலிக்க வலிக்க அதை மெல்லத் தொடங்கினான் அந்த மெல்லியலான். பரமஹம்ஸருக்கு நெஞ்சை உறுத்தியது. ராமலாலாவின் நெஞ்சில் அவலுடன் கலந்திருந்த தவிடு உறுத்தியதுதான் காரணம். அவனது நக்க பொறுக்காமல் உமியும் தவிடும் புடைக்காத அவலை அல்லவா அவனுக்குக் கொடுத்து விட்டார்?

குழந்தையைத் தம் மீது சாய்த்து கொண்டு கதறி விட்டார் ராமகிருஷ்ணர்.

ராஜாப் பயல் அல்லவா அவன்? அதுவு தசரத மகாராஜன் ஆயிரமாயிரம் ஆண்டு தவமிருந்து பெற்ற புத்திர பாக்கியமாயிற்றே, அவனுக்காக கௌஸல்யா தேவி அமுதத்துப்

நீகரான தூய பாலாடையையும், வெண்ணெயையும் வைத்துக் கொண்டு காத்திருப்பானே! அவன் ஏன் இந்த ஏழையிடம் வந்து பிஞ்சு நெஞ்சு அடைக்க, வாய் வலிக்க, கன்னமும் கண்களும் தெறிக்கும்படி இந்த அரை வேக்காட்டு அவலை வாங்கிக் குதப்பவேண்டும்?

ஃ ஃ ஃ

கௌசல்யா தேவி கிடக்கட்டும். இதோ இங்கேயே தட்சிணேசுவரத்தில் அவனுக்காக உணவு வகைகளைச் சமைத்து எடுத்துக் கொண்டு ஜடாதாரி வருகிறாரே! ஸ்ரீராமனும் நாமும் மறந்துவிட்ட போதிலும் நேயம் மறக்காத நெஞ்சத்தினராக அவனுக்கு அமுது படைக்க வந்திருக்கிறாரே!

ஆனால் ஏனோ அவரை இலட்சியமே செய்ய மாட்டான் ராமலாலா. தன் பாட்டில் பரமஹம்ஸரிடமே விளையாடிக் கொண்டிருப்பான். ஜடாதாரியின் உள்ளம் புண்ணாகும்.

''உனக்காக நான் எத்தனையோ சிரமப்பட்டு உணவு தயாரித்து ஊரெல்லாம் தேடி விட்டு இங்கு வந்தால் நீ அலட்சியமா செய்கிறாய்? எப்போது பார்த்தாலும் இங்கே என்ன வேலை உனக்கு? உன்னிடம் நான் வைத்திருக்கும் பாசமும் பிரேமையும் உனக்குப் பெரிதாகத் தெரியவில்லையா? உன் குணமே அப்படி! அப்பா மரணப் படுக்கையில் கிடக்கும் போது பிடிவாதமாக அவரை விட்டுக் காடு போனவனல்லவா, நீ! அவர் மனமுடைந்து செத்தது போல்....'' என்று சொல்லம்புகளைப் பொழியத் தொடங்குவார் ஜடாதாரி.

பிறகு ராமலாலாவின் கரங்களைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு செல்வார். அப்போது அவர் பரமஹம்ஸரைப் பார்க்கும் பார்வை இதயத்தைப் பிளப்பதாக இருக்கும். தன் இடத்துக்குக் குழந்தையை இட்டுச் சென்ற பின் மிரட்டி உருட்டி உணவூட்டுவார்.

இருந்தாலும் ஜடாதாரி தட்சிணேசுவரத்தை விட்டு மட்டும் புறப்படவேயில்லை. தன் உயிருக்கு உயிராக மதித்த பாலராகவன் தன்னைப் புறக்கணித்து ராமகிருஷ்ணரிடம் 'ஒண்டி'க் கொள்வதைக் கண்ட பின்னும் அவர் அங்கேயேதான் இருந்து வந்தார். விந்தையாகத் தானே இருக்கிறது? ஆம், சாதுக்களின் மகிமை விந்தையிலும் விந்தைதான். ஜடாதாரியின் ராமனைக்கவர்ந்துவிட்ட அந்தப் பரமஹம்ஸரே ஜடாதாரியின் உள்ளத்தைக் கவர்ந்து விட்டார்! அதை இருவருமே அறியவில்லை. ராமனை விட்டு நீங்க முடியாதது போல ராமகிருஷ்ணரை விட்டும் நீங்க முடியாது என்று உணரலானார் ஜடாதாரி.

ஃ ஃ ஃ

ஒருநாள் ராமகிருஷ்ண முனிவர் கங்கையில் ஸ்நானம் செய்யச் சென்ற போது குழந்தை ராமனும் பிடிவாதமாக அவருடன் சென்றான். அவருடனேயே நீராடினான். ஆனால் எவ்வளவோ நாழிகை ஆகியும் நதியிலிருந்து வெளியேற மறுத்தான். ராமகிருஷ்ணர் கெஞ்சியும், கொஞ்சியும் பார்த்தார். அணுவளவும் பயனில்லை. அவருக்கு எரிச்சல் வந்துவிட்டது. 'மனம் கொண்ட மட்டும் ஆற்றிலேயே முழுகிக்கிட' என்று கூறியபடி ராமச்சந்திரனை ஒரே அழுத்தாக நீருக்குள் அமிழ்த்திவிட்டார். பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமன், கருணை வெள்ளத்தில் அடியார்களை முழுக்காட்டும் ஆராவமுதன் ஒரு கண நேரம் மூச்சுக்குத் தத்தளித்தான்.

வேதங்களைப் பிறப்பிக்கும் அந்த சுவாசம், உலகுக்கெல்லாம் உயிரளிக்கும் அந்த மூச்சுக் காற்று நின்று போவதாகக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாதே! அப்படியானால் மெய்யடியார் ஒருவரின் பரிவில் பிறந்த கோபத்துக்கு அத்தனை சக்தி உண்டா? பரமஹம்ஸர் விம்மி விதிர் விதிர்த்துப் போனார். ராமனை வாரி எடுத்துத் தோள் மீது சாத்திக் கொண்டு திரும்பினார்.

''என்ன காரியம் செய்து விட்டேன்? யோகிகளும், ஞானிகளும், முனிவர்களும், பக்த மணி



களும் ஆசிரயிக்கும் இந்த மூலப் பொருள் ஏன் கொடுமைப் படுத்தும் என்னை ஆசிரயிக்க வேண்டும்?" என்று இரத்தக் கண்ணீர் வடித்தார்.

ஃ ஃ ஃ

"என்ன காரியம் செய்துவிட்டேன்? இந்த ராமன் உங்களுக்கு உரியவன்தான்!" என்றார் ராமகிருஷ்ணரின் அறைக்கு வந்த ஜடாதாரி. அவர் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தோடியது. ஆனால் துயரத்தில் பிறந்த கண்ணீரல்ல அது. உள்ளத்தில் மலர்ந்த ஆனந்தம் நயனங்களின் வழியாகப் பெருக்கிய தேனே அது.

நாத் தழுதழுக்க ஜடாதாரி கூறினார்:

"இதுவரை என்றும் தரிசித்திராத திருக்கோலத்தில் இன்றுதான் ராமலாலாவைக் கண்டேன். பிறவி எடுத்ததன் பயனைப்பெற்று விட்டேன். இங்கிருந்து நான் வரமுடியாது என்கிறான் ராமன். அதைக் கேட்கத்தான் எனக்கு என்ன மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா? உங்களோடு, உங்களில் அவன் பரமானந்தமாக வாழ்கிறான். அந்த ஆனந்தத்தை எண்ணுவதிலேயே நானும் இதுவரை கண்டிராத உவகையும், பூரிப்பும் கொள்கிறேன். ஆம்! அவனுடைய இன்பத்தில்தான் என் இன்பத்தைக் காண முடியும் என்பது இப்போது தான் எனக்குத் தெரிகிறது. ஆகையினால் இனிமேல் உங்களிடமே அவனை விட்டு விட்டுப் போகலாம்."

தன்னுடைய தனிப்பெரும் சொத்தாகிய ராமலாலாவின் பிரதிமையை ராமகிருஷ்ணரிடம் ஒப்படைத்தார் ஜடாதாரி.

ஃ ஃ ஃ

"அதன்பின் இன்றுவரை நான் அவரைப் பற்றி ஏதுமே கேள்விப்படவில்லை" என்றார் பரமஹம்ஸர், பல ஆண்டுகளுக்குப் பின் இந்தச் சம்பவங்களைத் தமது சீடப் பிள்ளைகளுக்கு எடுத்துச் சொல்லும்போது.

தட்சிணேசுவரம் ராதாகாந்தன் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த அந்த ராமமூர்த்தியின் திருமூர்த்தம் என்னவாயிற்று, எங்கு போயிற்று என்பதும் இன்று யாருக்கும் தெரியாது.

தந்தை சொல்லுக்காக நாட்டைத் தியாகம் செய்த அந்தத் தியாக மூர்த்தியைத் தியாகம் செய்ய முயன்றார் ராமகிருஷ்ணர். ஆனால் கொள்ளவும் தள்ளவும் முடியாத ராமபிரான் அந்த எண்ணம் ஈடேற அனுமதிக்க வில்லை. தன்னையே கதியெனப் பற்றிக் கொண்டிருந்த ஜடாதாரியின் உள்ளத்தைப் பழுக்க வைத்து, காம்பிலிருந்து பழம் பிரிவதுபோல் அங்கிருந்து விடுபட்டான். எங்கும், எதனிலும் அவர் ராமானந்தத்தையும், அந்த ஆனந்தக் கனி பலித்த கற்கண்டாகிய ராமகிருஷ்ணரையும் காணுமாறு செய்துவிட்டான்; அந்த உணர்வில் ராமனையே தியாகம் புரியுமாறும் செய்து விட்டான்.

பெரிய பெரிய உடைமைகளைத் தியாகம் செய்தவர்களைப் பற்றியெல்லாம் கேட்டிருக்கிறோம். ஆனால் தெய்வத்தையே தியாகம் செய்யும் மகா பெரியவர்களும் இருக்கமுடியும் என்று இப்போது தெளிவாகிறதல்லவா?

ஃ ஃ ஃ

தன் நடத்தை மூலம் மனித வாழ்வுக்கு இலட்சியமாக விளங்கிய ராமனும், தன் போதனை மூலம் அவர்கள் அமர வாழ்வுக்கு வழிகாட்டிய கிருஷ்ணனும் ஒன்று சேர்ந்த திரு உருவமாகவே ஸ்ரீராம கிருஷ்ணரைக் கருதும் அடியார்கள் உண்டு. அவர் அவதாரம் செய்து ஒன்றேகால் நூற்றாண்டு நிறைவு பெறும் இத்தருணத்தில் ராமனை கிருஷ்ணலீலை செய்து அவருடன் இணைந்து வாழ்ந்த இந்த இனிய வரலாற்றை இதயத்தில் நிரப்பிக் கொள்வோம்.

—கணபதி

# சுதந்திர நிதி

(11—2—62 லிருந்து 15—2—62 வரை)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எஸ். தெம்பரகிருஷ்ணன் | 1 | 00 | ஆர். எஸ். ஜானகிராமன் | 26 | 00 |
| எஸ். ஆராவமுதாச்சாரி | 5 | 00 | எஸ். டி. எஸ். கோபன் | 10 | 00 |
| பி. ஈ. சப்பன் | 25 | 00 | ஓர் அனுதாபி | 30 | 00 |
| வி. வி. சாஸ்திரி | 5 | 00 | ஓர் அன்பர் | 5 | 00 |
| எம். கே. என். கணேசபிள்ளை | 50 | 00 | வி. எஸ். மாசிலாமணி | 5 | 00 |
| எம். மகாதேவன் | 25 | 00 | ஒரு மிராசுதார் | 2000 | 00 |
| புனர்வஸு | 5 | 00 | ஒரு சென்னை அன்பர் | 2000 | 00 |
| ம. ராமகிருஷ்ணன் | 5 | 00 | 10-1-61லிருந்து 10-2-62 வரை | 35958 | 42 |
| ஓர் அன்பர் | 251 | 00 | | | |
| பி. எஸ். ரத்தினகிரி | 10 | 00 | | 40418 | 42 |
| டி. சீனிவாசன் | 2 | 00 | | | |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி c/o கல்கி காரியாலயம், சென்னை - 10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# மணிபல்லவம்

## 2. குலபதியின் விருந்து

நானும் இளங்குமரனும் குலபதியின் மாளிகைக்குள் அவனோடு செல்வதற்கு முன்னால் முன்னேற்பாடாக வளநாடுடையார் வேறொரு காரியம் செய்தார். பின்புறம் வீதியில் தங்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த ஓவியன் மணிமார்பனையும் அவன் மனைவி பதுமையையும் தங்களிடமிருந்து பிரித்துத் தனியே அனுப்பி விட்டார்.

''மணிமார்பா! நீயும், உன் மனைவியும் உங்கள் மனம் விரும்பியபடி இன்று மாலைப் போது வரை இந்த நகரத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுக் கப்பலுக்கு நேரே திரும்பிப் போய் விடலாம். இந்த இரத்தின வாணிகருடைய மாளிகையில் எங்களுக்குச் சில அவசரமான காரியங்கள் இருக்கின்றன. எங்களோடு வந்தால் நீயும், உன் மனைவியும் இந்த நகரத்தைச் சுற்றிப் பார்க்க முடியாமலே போய் விடலாம். மேலும் இந்த மாளிகையில் நாங்கள் கவனிக்க வேண்டிய காரியங்களுக்கு எவ்வளவு போதாகும் என்று உறுதியும் சொல்ல முடியாது. கப்பல் தலைவன் இன்று மாலையே பக்கத்திலிருக்கும் மணிபல்லவத் தீவுக்குப் புறப்பட்டு விட வேண்டுமென்று சொல்லியிருக்கிறான். நாங்கள் இருவரும் குலபதியின் இந்த மாளிகையிலிருந்து புறப்படுவதற்கு இரவு நடு யாமத்துக்கு மேலும் ஆனாலும் ஆகிவிடலாம். ஒருவேளை புத்த பூர்ணிமைக்காக மணிபல்லவத்துக்கே நாளைக்குக் காலையில் புறப்பட்டு வந்து சேரும்படியும் ஆகலாம். நீயும் எங்க

நா.பார்த்தசாரதி



ளோடு காத்திருக்க வேண்டு மென்ற
அவசியமில்லை. நாங்கள் வருவதற்குத்
தாமதமானாலும் நீ முன்னால் புறப்பட்
டுப் போய் விடுவது நல்லது'' என்று
தன்னிடம் வளநாடுடையார் சொல்லி
வேண்டிக் கொண்டபோது ஓவியன்
மணிமார்பனுக்கும் தான் அவ்வாறு
செய்வதே நல்லதென்று தோன்றியது.
மணிநாகபுரத்தின் அழகிய வீதிகளையும்,
காட்சிகளையும் சுற்றிப் பார்க்கவேண்டும்
என்ற ஆவலோடு அவனும் விடை
பெற்றுக் கொண்டு தன் மனைவியோடு
சென்றான்.

முதலில் மாளிகை மாடத்திலிருந்து
கீழே இறங்கி வந்த குலபதியோடும்
இளங்குமரனோடும் உள்ளே போகத்
தொடங்கியிருந்த வளநாடுடையார்
பின்னால் ஓவியனும் அவன் மனைவியும்
வந்து கொண்டிருப்பதை நினைவுகூர்ந்த
வராகத் தான் மட்டும் மறுபடி வீதிக்
குத் திரும்பிச் சென்று இவ்வாறு அவர்
களைத் தங்கள் குழுவிலிருந்து பிரித்து
அனுப்பிவிட்டார். அவரது இந்தச் செய்
கைக்காக இளங்குமரன் தனக்குள் வருந்
தினான். எனினும் தனக்குப் புதியவனான
குலபதி என்னும் இளைஞனை அருகில்
வைத்துக் கொண்டு வளநாடுடையா
ரைக் கடிந்து பேசுவது நாகரிகமா
யிராது என்று கருதி இளங்குமரன் தன்
வருத்தத்தை மனத்துக்குள்ளேயே
புதைத்துக் கொண்டு விட்டான். மனி
தர்களையும், அவர்களுடைய உணர்வு
களையும் சமமாகப் பாவித்து மதிக்கத்
தெரியாதவர்கள் உலகப் படைப்பையும்
படைத்தவனையுமே அவமானப்படுத்து
வதாக எண்ணி வேதனைப்படுவது அவன்
வழக்கம். பழைய நாட்களில் தனக்கு
முன் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்
திருந்தால் சிறு குழந்தையின் துன்பத்
தைப் போல் சொல்லினும் உணர்வுகளி
லும் வெளிப்படுத்திக் குமுறியிருப்பான்.
மனம் முதிர்ந்து பக்குவப்பட்டு விட்டது
என்பதற்கு ஒரே பயன் கணந்தோறும்
கண்களுக்கு முன் தென்படுகிற உல
கத்துத் துன்பங்களுக்காக இதயத்தி
லேயே அழுது புலம்புவதுதான். எப்
பொழுதும் விடலைப் பருவத்துப் பிள்ளை
யைப் போல மனத்தினால் குமுறிக் கண்
களால் அழுது கைகளால் எதிர்க்க முடிவ
தில்லை. ஆனால் கண்களால் அழுகிறவர்
களைத்தான் உலகம் துக்கம் உடையவர்
களாகப் புரிந்து கொள்கிறது. மனத்தி
னால் அழுது கொண்டிருப்பவர்களைப்
புரிந்து கொள்ள உலகத்துக்கு நீண்ட
காலமாகிறது. இப்படி ஒவ்வொரு கண
மும் ஒவ்வோர் இடத்திலும் கண் முன்
தெரியும் உலகத்துத் துன்பங்களுக்காக
மனத்தினால் அழுது தனக்கே அந்தத்
துன்பம் வந்தாற்போல முடிவு தேடித்
தவிக்கும் பரந்த சோக அநுபவத்தை
இளங்குமரன் பல முறைகள் அடைந்
திருக்கிறான்.

நாளங்காடிப் பூத சதுக்கத்தில் முதன்
முதலாக இதே ஏழை ஓவியனைச் சந்
தித்தபோது இவனுக்கு இரங்கவேண்டும்
என்று தன் மனம் நெகிழ்ந்ததை இந்தக்
கணத்தில் நினைக்கத் தோன்றியது இளங்
குமரனுக்கு. இலஞ்சி மன்றத்துப் பொய்
கைக் கரையிலும், உலக அறவியின் நிழ
லிலும் நிறைந்து கிடந்து உழலும் ஏழை
களையும், நோயாளிகளையும் பார்க்க நேரி
டும்போதும், நினைக்க நேரும்போதும்
மனத்தினால் அழுது வருந்தி யிருக்கிறான்
அவன். இந்திர விழா நிறைவு நாளில்
கழார்ப் பெருந்துறை நீராடலின்போது
சுரமஞ்சரியைக் காப்பாற்றிக் கப்பல்
கரப்புத் தீவில் அவளிடம் கருணை
கொண்ட போதும், திருநாங்கூரில்
குருகுலவாசம் செய்துகொண் டிருந்த
போது தன்னுடைய பிறந்த நாள் மங்க
லத்துக்காக அழைத்துச் செல்வதற்கு
வந்திருந்த முல்லையிடம் மனம் நெகிழ்ந்து
பேச முடியாமற் போன போதும், 'உங்
களுடைய ஞானத்தையும், சான்றாண்
மையையும் பார்த்துப் பெருமைப்பட
உங்களைப் பெற்றவள் இப்போது அருகில்
இருக்க வேண்டும்' என்று விசாகை
பூம்பொழிலில் ஒரு நாள் தன்னிடம்
கூறிய போதும், இளங்குமரன் மனம்
நிறையக் கண்களாய் மாறிக் கலங்கி
அழுதிருக்கிறான். அறிவு முதிர்ந்த வழி
யில் நடந்து போகிறவனின் ஞான யாத்
திரையில் கடைசியாகக் கால்கள் நிற்கு
மிடம் மனத்தின் அழுகையாகிய இந்தக்
கருணைதான். எல்லார் மேலும் பரிவும்
பாசமும் கொண்டு எல்லாருடைய துக்
கத்துக்காகவும் மனத்தால் அழுது தவிக்
கும் இந்தப் பரந்த தாய்த் தன்மையே
மனிதனுக்கும் அவன் வணங்கும் பரம்
பொருளுக்கும் நடுவிலிருப்பதாகச் சொல்
லப்படும் தொலைவைக் குறைத்து இரு
வரையும் அருகருகே நெருங்கச் செய்
கிறது. தன்னுடைய மனத்தின் எல்லை
யெல்லாம் நிறைந்திருந்த இந்தப் பரந்த
கருணையை அழ வைத்துப் புண்படுத்து
வது போல் வளநாடுடையார் மணிநாக
புரத்து வீதியில் ஓவியனைத் தனியே
பிரித்து அனுப்பியபோது இளங்குமரன்
பெரிதும் புண்பட்டான். ஓவியனிடம்
தனக்குள்ள கருணையை அப்போது
வெளிப்படுத்துவதனால் குலபதியும், வள
நாடுடையாரும் வருந்த நேரிடுமே
என்று எண்ணி அழுது புலம்பும் மனத்
தோடும் சிரித்து மலரும் முகத்தோடும்
நின்றான் இளங்குமரன். அந்த நிலையில்
குலபதி அவனிடம் தானே பேசலானான்:

"ஐயா! இந்த முத்துமாலை மேலேயிருந்து உங்கள் தோளில் விழுந்தபோது காண்பதற்கு அந்தக் காட்சி எவ்வளவு நன்றாயிருந்தது தெரியுமா? பொன்னிற் செய்து பின்பு மெருகிட்டுப் புனைந்தாற் போன்ற உங்கள் தோள்களிலேயே மறுபடி இதைக் காண வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது எனக்கு. தயை கூர்ந்து இந்த மாலையை இப்படிக் கையில் வைத்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாகக் கழுத்தில் அணிந்துகொள்ள வேண்டும் நீங்கள்....."

அப்போது அந்த விநாடி வரை வீதியில் வளநாடுடையார் மணிமார்பனிடம் பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த இளங்குமரன் குலபதியின் இந்தச் சொற்களைக் கேட்டுத் திரும்பினான். இம்முறைதான் முதன் முதலாய்க் கூர்ந்து கவனிப்பது போல் அந்த மணிநாகபுரத்து இளைஞனை நன்றாகப் பார்த்தான். நீண்டு வளர்ந்திருந்த குடுமியை முடிப்பாக அள்ளிச் சொருகியிருந்த தோற்றம் அந்த நாக நாட்டு இளைஞனின் முகத்துக்கு மிகவும் அழகாயிருந்தது. இளமை அரும்பும் பருவத்து முக அழகு தவிர நீண்டு வடிந்த அளவான செவிகளில் நாகரத்தினங்கள் பதித்த காதணிகளையும் அழகுற அணிந்திருந்தான் அவன். ஆண்மகனாக இருந்தாலும் அவன் சிரிக்கும் போது முத்துதிர்வது போல நளினமானதொரு கவர்ச்சியும் அந்த முகத்தில் வந்து பொருந்தியது. தோற்றத்தில் அதிக உயரம் இல்லாவிட்டாலும் அவனுக்கு அமைந்த உயரமே அவனை அழகனாகத்தான் காண்பித்தது. சில நிழல் மரங்களைப் பார்த்தால் உடன் அங்கே உட்கார வேண்டும் என்று ஆசை வருவதைப்போல் குலபதியின் முகத்தை ஒரு முறை பார்க்கிறவர்களுக்குச் சிறிது நேரம் வேறு காரியங்களை மறந்து அந்த முகத்தை மட்டுமே பார்க்கலாம் என்று தோன்ற முடியும் எனப் புரிந்து கொண்டான் இளங்குமரன். தன் முகத்தை இளங்குமரன் பார்த்துக் கொண்டிருந்த வேளையில் குலபதி சுறுசுறுப்பாக வேறு ஒரு காரியம் செய்தான். இளங்குமரனுடைய கையிலிருந்த முத்து மாலையை அவனது விரல்களின் பிடியிலிருந்து சிரித்துக் கொண்டே மெல்ல விடுவித்துத் தன் கைகளாலேயே அவனுடைய கழுத்தில் அணிவித்தான். இளங்குமரனால் அந்தப் பிள்ளையின் செயலை மறுக்க முடியவில்லை.

"வாருங்கள்! இனி நாம் உள்ளே போகலாம்" என்று சொல்லிக்கொண்டே அப்போது வளநாடுடையாரும் வீதியிலிருந்து திரும்பி வந்தார். மீண்டும் மூன்று பேருமாக அந்த மாளிகைக்குள் நுழையும் போது வளநாடுடையார் கூறினார்:

"இளங்குமரா! இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நீ திருநாங்கூரில் இருந்த காலத்தில் நான் வந்து உன்னை மணிபல்லவத்துக்கு அழைத்த போதே, நீ இங்கு வந்திருந்தால் நம்முடைய குலபதிக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கும். அப்போது நீ வராததனால் நான் மட்டும் தனியாக இந்தத் தீவுக்கு வந்திருந்தேன். குலபதியையும் அவனுக்கு மிகவும் வேண்டியவராகிய மற்றொருவரையும் இங்கே சந்தித்தேன். அப்படிச் சந்தித்த போது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொற்களில் அடக்க முடியாது. அதே மகிழ்ச்சியை இன்னும் சிறிது நேரத்தில் நீயும் அடையப் போகிறாய்."

இப்படிப் பேசிக்கொண்டே அவர்கள் மாளிகையின் நடுக்கூடத்தை அடைந்திருந்தார்கள். தளத்தில் எங்கு நோக்கினும் முத்தும், மணியும், பவழமுமாகப் பதித்திருந்ததனால் அந்த மாளிகையின் ஒவ்வோர் அணுவிலும் அது ஓர் இரத்தின வாணிகருடையது என்பதை நினைவூட்டும் அழகு அமைந்திருந்தது. இரத்தின வாணிகன் குலபதியைப் பற்றியும், மணிநாகபுரத்தில் அவனுக்குள்ள பெருமைகளைப் பற்றியுமே வளநாடுடையார் விவரித்துச் சொல்லிக் கொண்டு வந்தாரே ஒழிய இன்ன வகையில் அவனுக்கும் தனக்கும் நட்பு ஏற்பட்டதென்றோ, அவன் இன்னான் என்றோ விவரமாகக் கூறவில்லை. குலபதியின் அந்த மாளிகையைச் சுற்றிப் பார்த்த போது தன்னோடு மணிமார்பனும் அங்கு வந்திருக்க வேண்டும் என்று அதன் அழகுகளை நோக்கிக் கொண்டே எண்ணினான் இளங்குமரன். ஓர் ஓவியன் தன்னுடைய கண்கள் நிறையக் கண்டு மகிழ வேண்டிய பேரெழில் மாளிகையாயிருந்தது அது. மணிமார்பன் தன் உடனில்லையே என்பதை ஒவ்வொரு கணமும் இளங்குமரன் அங்கு உணர முடிந்தது.

அந்த மாளிகையின் முற்றத்தில் உள்ள பூங்காவிலிருந்தே நாகதெய்வக் கோட்டத்துக்குள் போவதற்கான வழி ஒன்றும் அமைந்திருந்தது. இளங்குமரனும், வளநாடுடையாரும் நீராடித் தூய்மை பெற்றபின் அவர்களை நாக தெய்வ வழிபாட்டுக்கு அழைத்துக் கொண்டு போனான் குலபதி. அந்த வழிபாட்டை முடித்துக் கொண்டு மாளிகைக்குத் திரும்பியதும் குலபதி இளங்குமரனுக்கும் வளநாடுடையாருக்கும் அறுசுவை விருந்து படைத்தான். பொன்னும், மணியும், முத்துக்களும்,

இரத்தினமுமாகப் பார்க்கும் இடமெல்லாம் ஒளி நிறைந்து தோன்றினாலும் அந்த மாளிகையில் ஏதோ ஒரு குறை இருப்பதாய்ப் புறத் தோற்றத்தில் தெரிந்தும், தெரியாததான ஒருநிலையை இளங்குமரன் உணர்ந்தான். அந்தக் குறையைப் பற்றி அவன் சிந்திக்கத் தொடங்கிய நேரத்தில், ''இளங்குமரா! இந்த உணவு விருந்தைக் காட்டிலும் பெரிய விருந்து ஒன்றை இன்னும் சிறிது நாழிகையில் குலபதி உனக்கு அளிக்கப் போகிறான். பல நாள் பசியைத் தீர்க்கப் போகிற உணவு அது!'' என்று பேச்சைத் திருப்பிப் புதிய கவனத்துக்கு மாற்றினார் வளநாடுடையார். அது வரை மௌனமாய் அமர்ந்து பசியாறிக் கொண்டிருந்த இளங்குமரன், ''அது என்ன அப்படிப் புதுமையான உணவு?'' என்று அவரைக் கேட்டான். அவனுடைய கேள்விக்கு வளநாடுடையார் மறுமொழி கூறவில்லை. அதற்குள் குலபதியே முந்திக் கொண்டு கூறினான் :

''விருந்து என்றாலே புதுமையானதென்றுதான் பொருள். உண்ணும் பொருளும், பசியும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மனிதருக்கும் உள்ள பழைய பழக்கம்தான். அதுவே பழகிய பழக்கமும் ஆகிறது. ஆனால் உண்கிற இடமும் உபசாரம் செய்கிற மனிதர்களும் புதுமையாக இருந்தால் அதை விருந்து என்கிறோம். நானே இன்று புதுமையான பொருள்களையே உங்களுக்குக் காட்டப் போகிறேன். அந்தப் புதிய பொருள்கள் உங்களுடைய பழைய விருப்பங்களைத் தீர்க்கிறவையாகவும் அமையலாம். இந்தப் பழம் பெரும் மாளிகையில் ஓவிய மாடம் என்று ஒரு பகுதியிருக்கிறது. அதில் இந்த மாளிகைக்குள் ஒவ்வொரு காலத்திலும்ஒவ்வொருவர் சமாகவாழ்ந்து முடிந்தவர்களின் ஓவியங்களும்வாழ்க்கை நிகழ்ச்சிகளும் வாழும்போது புனைந்து கொண்ட பொருள்களும் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த மாளிகையின் ஓவிய மாடத்தில் ஓவியங்களாக இருப்பவர்களில் ஒருவர் கூட இந்தத் தீவின் எல்லையில் இறந்ததில்லை. துயரம் நிறைந்த வாழ்க்கையின் பழைய தலைமுறை நினைவுகளையும், பழையவர்கள் சேர்த்து வைத்த செல்வத்தையும் நுகர்ந்து கொண்டு இந்தக் குடியின் கடைசித் தளிராக நான் மட்டும் தான் மீதமிருக்கிறேன். உங்களைப் போன்ற ஞானிகள் அந்த ஓவிய மாடத்தைப் பார்ப்பதனால் எனக்கு ஏதேனும் புதிய நற்பயன் நேரலாமோ என்னவோ?'' என்று குலபதி கூறும்போது அவனுடைய இனிமையான குரல் நலிந்திருந்தது. சொற்கள் துயரந் தோய்ந்து பிறந்தன.

''ஐயா! நீங்கள் உங்களை அறியாமலே மிகப் பெரிய தவறு செய்து விட்டீர்களே? சற்று முன்பு எங்களைப் பின் பற்றித் தன் மனைவியோடு இந்த வீதியில் வந்தாரே; அவர் பாண்டி நாட்டின் சிறந்த ஓவியர்களில் ஒருவர். உங்கள் ஓவிய மாடத்தை அவர் பார்ப்பதனால் எவ்வளவோ நன்மைகள் ஏற்படும். அவரை ஊர் சுற்றிப் பார்க்க அனுப்பு முன் இங்கே அழைத்து வந்து உங்கள் ஓவிய மாடத்தைக் காண்பித்திருந்தால் நான் மகிழ்ச்சி கொண்டிருப்பேன். இந்தக் கலை விருந்தை உண்பதற்கு ஏற்றவன் நான் இல்லை. அந்த ஓவியர் தான்! அவரை வீதியிலிருந்தே இந்த மாளிகைக்குள் அழைக்காமல் அனுப்பி விட்டு இப்போது என்னைமட்டும் உங்கள் ஓவிய மாடத்துக்கு அழைக்கிறீர்களே?'' என்று கேட்டான் இளங்குமரன்.

அவனுடைய இந்தக் கேள்வியைச் சிரித்தவாறே ஏற்றுக் கொண்ட குலபதி ''விருந்தை உண்பதற்கு ஏற்றவர் யார் எனத் தீர்மானம் செய்ய வேண்டிய பொறுப்பு விருந்திடுகிறவனுக்கு உண்டாயின் நான் உங்களை மட்டுமே இதற்குத் தேர்ந்தெடுக்கிறேன்'' என்று மறுமொழி பகர்ந்தான். குலபதியின் இந்த மறுமொழியே ஒரு விதத்தில் புரிந்தும் பல விதத்தில் புரியாமலும் ஏதோ ஒரு புதிர் போலிருந்தது இளங்குமரனுக்கு.

''நம்முடைய குலபதி உன் கழுத்தில் முத்துமாலையை அணிந்தபோதே உன்னைத் தன்னுடைய நெருக்கமான உறவினனாகவும் தேர்ந்தெடுத்து வரித்துக் கொண்டாயிற்றே, தம்பி!'' என்று சொல்லி அதையே இன்னும் பெரிய புதிராக்கினார் வளநாடுடையார்.

''கையிலேயே வைத்துக் கொண்டிருந்த அரும் பொருள் எங்காவது தானாக நழுவி விழுகிறாற் போல் நான் மாடத்தில் நின்றபோது என் கையிலிருந்த முத்து மாலையோடு எனது மனமும் உங்களிடம் நழுவி விட்டது ஐயா!'' என்று மேலும் உயர்வாகச் சொல்லி அந்த விருந்தைத் தன் சொற்களின் மதிப்பினாலும் சுவையுடையதாக்கிச் சிறப்பித்தான் குலபதி.

அந்த அன்பையும் ஆவலையும் மறுக்க முடியாமல் உண்ணும் விருந்து முடிந்ததும் காணும் விருந்தாகிய ஓவிய மாடத்தைக் காண்பதற்காக அவர்களோடு சென்றான் இளங்குமரன். என்ன காரணத்தாலோ அந்த மாளிகையின் ஓவிய மாடத்தை அவன் கண்டிப்பாய்க் காண வேண்டுமென்பதில் வளநாடுடையாரும் குலபதியும் பிடிவாதமாக இருந்தார்கள் என்பது மட்டும் அவனுக்கே புரிந்தது.

# 3. ஓவிய மாடம்

மணிநாகபுரத்து இரத்தின வாணிகனுடைய குலபதியின் ஓவிய மாடத்துக்குள் நுழைந்த பின்புதான் அதன் பெருமை இளங்குமரனுக்குப் புரிந்தது. அந்த ஓவிய மாடமே ஒரு தனி உலகமாயிருந்தது. அதில் ஒரு பெரிய காலமே சித்திரங்களாக முடங்கிக் கிடந்தது.

''வழி வழியாக இரத்தின வாணிகம் புரிந்து வரும் எங்கள் குடும்பத்தின் துன்பமயமானதொரு வாழ்க்கைத் தலைமுறையை நீங்கள் இங்கே இந்த ஓவியங்களில் காண்கிறீர்கள் ஐயா! இந்தக் குடும்பத்தின் புகழை உலகத்துக்குச் சொல்ல வேண்டிய சக்தி ஒன்று இதிலிருந்து தவறி எப்படியோ எங்கோ வெளியேறிப் போய்விட்டது. மறுபடி அதைத் தேடிக் கண்டுபிடித்து இங்கே சேர்க்கிற வரை எனக்கு இவ்வளவு செல்வமிருந்தும் நான் மனத்தினால் ஏழைதான்!'' என்றான் குலபதி.

''பழியில்லாமல் வாழ்வதே புகழ்தான்! புகழுக்கென்று தனியாக வேறு ஆசைப்படாதீர்கள். அந்த ஆசையாலேயே பழி வந்தாலும் வரலாம்.....'' என்று குலபதிக்குப் பதில் கூறியபடி அந்த மாடத்தில் வரிசையாகத் தீட்டப்பட்டிருந்த ஓவியங்களைப் பார்த்துக் கொண்டே மெல்ல நடந்தான் இளங்குமரன்.

சில ஓவியங்களுக்கருகே கீழே பல விதமான அணிகலன்களும், அந்த ஓவியத்தில் இருந்தவர்கள் வாழ்ந்த காலங்களில் பயன்படுத்திய பொருள்களும் குவிக்கப்பட்டிருந்தன. இன்னும் சில ஓவியங்களுக்குக் கீழே உள்ள மாடப் பிறையில் ஏடுகள் மட்டுமே இருந்தன. அந்த ஏடுகளில் நாள்தோறும் இட்ட பூக்களும் செறி வாடியிருந்தன.

அப்படி ஏடுகள் மட்டுமே இருந்தவற்றைச் சுட்டிக் காட்டிக் கூறும்போது, ''இந்த ஓவியங்களில் இருப்பவர்கள் எல்லாம் கடல் வாணிகத்தின் போதும், யாத்திரையின் போதும், புறப்பட்டுப் போன இடங்களிலும் இறந்தவர்கள். இவர்களைப் பற்றிய நினைவை இப்போது எங்களுக்குத் தருகிறவை இந்த ஏடுகள் மட்டும்தான்'' என்றான் குலபதி.

அவனே மீண்டும் அந்த மாடத்திலே அணிகலன்கள் குவிந்து கிடந்த இடத்தில் இருந்து சில பொன் அணிகளை எடுத்துக் காட்டி ''இந்தக் குடும்பத்துக்குச் சொந்தமான எல்லா அணிகலன்களிலும் அடையாளமாக இப்படி மூன்று தலை நாகப் படம் செதுக்கியிருக்கும்'' என்றான். அவற்றைப் பார்த்துக் கொண்டே வந்த இளங்குமரன் அழகு மிக அற்புதமாக வரையப்பட்டிருந்த ஓர் ஓவியத்தருகே நெருங்கியதும் கண்களை அதன் மேலிருந்து மீட்கத் தோன்றாமல் அப்படியே நின்று விட்டான். உத்தமமான கவிகள் வருணிக்கும் அழகுகள் எல்லாம் பொருந்திய இளநங்கை ஒருத்தி நாணத்தோடு கால் விரலால் தரையைக் கீறிக் கொண்டு நிற்பதாகவும் அவள் எதிரே வீர லட்சணங்கள் யாவும் அமைந்த வீரன் ஒருவன் தோன்றி அவளைக் காண்பதாகவும் அந்த ஓவியம் வரையப்பட்டிருந்தது.

அங்கிருந்த மற்ற எல்லாவற்றிலிருந்தும் தனியாகப் பிரிந்து அந்த ஒற்றை ஓவியத்தில் மட்டுமே தன் கவனம் செல்லும்படி அதில் என்னதான் இருந்தது என்று அவனுக்குப் புரியவில்லை. ஆனால் அதில் ஏதோ இருந்தது. மண்ணுக்குள் முறிந்து போய்க் கிடந்த கோரைக் கிழங்கு சரத் காலத்து மழை ஈரத்தின் மென்மையில் நனைந்து நனைந்து மெல்ல மண்ணுக்கு வெளியே தன் பசுந் தலையை நீட்டி இந்த உலகத்தைப் பார்த்துக் குருத்து விடும் முதல் பச்சையைப்போல அவன் மனத்தில் முறிந்து நின்ற ஆர்வமொன்று அந்த ஓவியத்தைக் கண்டதும் பெருகிற்று. ஆனால் அந்த ஆர்வத்தைச் சொல்ல வார்த்தைகளே இல்லை போலவும் பிரமிப்பாக இருந்தது. அவதிஞானம் என்று அவன் கேள்விப்பட்டு உணர்ந்திருந்த உணர்வின் வரையறையில்லாத தொடர்பாய் இப்போதும் இதில் ஏதோ ஒன்று புரிந்தது. புரியாமலும் மயங்கிற்று. இப்படி நெடு நேரம் தன் பார்வையை மீட்க முடியாமல் அந்த ஓவியத்தையே பார்த்துக் கொண்டிருந்த இளங்குமரன் இறுதியாகப் பார்வை மீண்டு அது இருந்த இடத்தின் கீழே பார்த்த போது அங்கே அணிகலன்களோ வேறு வகைப் புனைபொருள்களோ சிறிதும் காணப் படவில்லை. அதனருகேயிருந்த மாடப் பிறையில் இரண்டு மூன்று ஏடுகள் மட்டும் முடிந்து வைக்கப்பட்டிருந்தன.

இளங்குமரன் அந்த ஏட்டு முடிப்பை எடுத்து அவிழ்த்து ஏதோ ஓர் ஆவல் தூண்ட நடுவாக அப்போது தன் பார்வைக்குத் தெரிந்த இடத்திலிருந்து அதைப் படிக்கலானான்:

''நவரசங்கள் உன்னுடைய கண்களிலிருந்துதான் பிறந்தன. உன் கண்கள் என் பார்வையிலிருந்து மறைந்த பின் என்னுடைய நினைவிலிருந்து நவரசங்களும் மறைந்து விட்டன. அவல்

காரங்கள் எல்லாம் உன்னுடைய பேச்சிலிருந்துதான் பிறந்தன. உன் பேச்சைக் கேட்க முடியாத தொலைவுக்கு நான் வந்து விட்ட பின் அலங்காரங்களை மறந்து போய் விட்டேன். தாளங்களுக்கும் அவற்றையுடைய வாத்தியங்களுக்கும், உன்னுடைய நடையிலிருந்துதான் இனிமைகள் பிறந்தன. உன் கால்களில் ஐம்பொன் மெட்டி ஒலிக்கும்போது என் நாவிலே கவிதையும் பிறந்து ஒலித்தது. உன்னுடைய நடையைக் காண முடியாத தொலைவுக்கு நான் வந்து விட்ட பின் அவையும் எனக்கு நினைவில்லை. உன்னை மீண்டும் எப்போது சந்திக்கப் போகிறோம் என்று ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுகமாக நகருவது போல் மந்தமாகி ஏதோ நானும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.''

இந்த வாக்கியங்களைப் படித்ததும் இளங்குமரனுக்குக் காரணம் புரியாத வேதனை ஒன்று பிறந்தது. இந்த வாக்கியங்கள் தோன்றக் காரணமாயிருந்த காதலர்களாக அந்த ஓவியத்தில் இருப்பவர்களை நினைத்துப் பார்த்தான் அவன். அந்தக் காதலர்களை அப்படியே அப்போதே உமையாகவும், சிவனாகவும் பக்தி பாவித்துக் கொண்டு வணங்கவேண்டும் போலப் புனிதமான உணர்ச்சியடைந்தான் அவன். ஏடுகளை முடித்து வைத்து விட்டுக் கடைசியாக மறுபடியும் அந்த ஓவியத்தைப் பார்த்த போது அதில் தலை குனிந்து நாணி நின்ற நங்கையின் கண்களிலிருந்து நளினங்களுக்குப் பதில் கருணை ஒன்றே தன்னை நோக்கிப் பெருகி வருவது போல் அவனுக்குத் தெரிந்தது. இளங்குமரனுக்கு அருகில் வளநாடுடையாரும் நின்று அந்த ஓவியத்தைக் கவனித்துக் கொண்டிருந்



தார். அவளையும் கவனித்துக்கொண்டிருந்தார்.

அவ்வளவில், ''ஐயா! இந்தக் குடும்பத்தின் புகழ் பெற்ற பல தலைமுறைகளுக்குப் பின்பு துன்பமயமானதொரு தலைமுறை இந்தப் பெண்ணின் காதலிலிருந்து தொடங்குகிறது. இவளுடைய அழகு இந்தக் குடும்பத்தின் பெரிய இரத்தினமாக இருந்து சுடர் பரப்பியதென்று என் தந்தை எனக்கு அடிக்கடி கூறியிருக்கிறார். இந்த ஓவியத்திலிருக்கிற பெண் என் தந்தைக்கு உடன் பிறந்தவளாக வேண்டும்! எனக்கும் அத்தை முறை.'' என்று குலபதி நாத் தழுதழுக்கச் சொன்னான். அவன் கண்களில் அப்போது நீர்பனித்திருந்தது. இளங்குமரனும் கண்கலங்கினான்.



''இந்த ஓவியத்தினால் உன் மனம் கலங்குகிறாற் போல் தோன்றுகிறதே?'' என இளங்குமரனைக் கேட்டார் வளநாடுடையார்.

''கலங்குகிறது. ஆனால் ஏன் கலங்குகிறதென்றுதான் எனக்கேதெரியவில்லை'' என்று சொல்லி விட்டு மேலே நடந்தான் இளங்குமரன். இதன் பின் அந்த ஓவிய மாடத்தில் எஞ்சியிருந்த எல்லாப்பகுதிகளையும் பார்த்து விட்டு வளநாடுடையாரை நோக்கி, ''இன்று மாலையிலேயே மணிபல்லவத்துக்குக் கப்பல் புறப்பட்டு விடும் என்று நாம் இறங்கி வந்தபோது கப்பல் தலைவன் கூறியிருந்தானே? இன்னும் சிறிது நேரத்தில் நாம் திரும்பி விட வேண்டும் அல்லவா?'' என்று கேட்டான் இளங்குமரன்.

''போகலாம் இளங்குமரா! போவதற்குமுன் குலபதியின் மாளிகையில் இன்னும் நாம் பார்க்க வேண்டிய இடம் ஒன்று எஞ்சியிருக்கிறது. இது வரை ஓவியங்களில் வாழ்கிற இந்தக் குடும்பத்தின் பழந் தலைமுறையினரை யெல்லாம் பார்த்தாய்! இனி மேல் நீ பார்க்க வேண்டியவர் இந்தக் குடும்பத்தின் கண் கண்ட தெய்வத்தைப் போன்றவர். இந்தக் குடும்பத்தின் இரண்டு தலைமுறை மனிதர்கள் நன்றி செலுத்த வேண்டியவர். அவரைப் பார்த்து விட்டுப் பின்பு நாம் புறப்படலாம்'' என்றார் வளநாடுடையார்.

''அவர் எங்கிருக்கிறார்?'' என்று குலபதியை நோக்கிக் கேட்டான் இளங்குமரன்.

உடனே, ''இதோ அவர் இங்கேயே தான் இருக்கிறார்'' என்று குலபதி அந்த மாடத்தின் ஒரு பகுதியில் போய்த் திறந்த கதவுக்கு அப்பால் மான் தோல் விரிப்பில் அமைதியாக வீற்றிருந்தவரைப் பார்த்தபோது இளங்குமரனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. திடீரென்று உலகமே விந்தை மயமாக மாறி மிக வேகமாகச் சுழல்வதுபோலிருந்தது அவனுக்கு.

''நான் இப்போது என் கண்களுக்கு முன்னால் யாரைக் காண்கிறேன் வளநாடுடையாரே?'' என்று அவன் மருண்டு போய் வினவினான். இந்தக் கேள்விக்கு வளநாடுடையார் மறுமொழி ஒன்றும் கூறாமல் புன்முறுவல் பூத்தார்.

ஆனால் இவ்வளவு வியப்புக்கும் காரணமாக உள்ளே அமர்ந்திருந்தவரே இதற்கு மறுமொழியும் கூறி விட்டார்.

''இனிமேல் என்றுமே யாரைச் சந்திக்க முடியாதென்று சென்ற விநாடி வரை நினைத்து நம்பிக்கை இழந்துவிட்டாயோ அவரைத்தான் நீ இப்போது சந்திக்கிறாய் குழந்தாய்!'' என்று அருட்செல்வ முனிவரின் குரல் எதிரேயிருந்து ஒலித்தபோது தாய்ப் பசுவின் குரலைக் கேட்டுப் பாயும் இளங் கன்று போல் அந்த அறைக்குள் தாவிப் பாய்ந்தான் இளங்குமரன். அந்த ஒரே ஒரு கணத்தில் அவன் சிறு குழந்தையாகி விட்டான். ''கவலைப்படாதே! இதுவரை நான் காரியத்துக்காக மட்டும்தான் செத்துப் போயிருந்தேன். உண்மையில் செத்ததாக நீ கேட்டு நம்பிய பொய் நானே படைத்துப் பரப்பியதாகும்—'' என்று சொல்லி அருள்நகை பூத்தவண்ணம் தன்னை நோக்கிப் பாய்ந்து வந்த அவனை எதிர்கொண்டு மார்புறத் தழுவிக் கொண்டார் அருட்செல்வ முனிவர்.

''இது என்னுடைய வாழ்க்கையில் மிக மிகப் பெரிய பாக்கியம் நிறைந்த நாள். மீண்டும் உங்களை இப்படி இந்தத் தோற்றத்தோடு இதே பிறவியில் சந்திக்கும் நாள் ஒன்று என் வாழ்வில் வரும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. இந்த நல்ல நாளுக்கு நான் நிறைந்த நன்றி செலுத்த வேண்டும்.......'' என்று கூறிவிட்டு மேலே பேசுவதற்குச் சொற்கள் பிறவாத பரவசத்தோடு அருட்செல்வ முனிவரை நோக்கிப் பயபக்தியால் நெகிழ்ந்து நின்றான் இளங்குமரன். அவருடைய கண்களிலிருந்து அவன் கண்கள் எதையோ தேடின.

''குழந்தாய்! வீரனுடைய வாழ்க்கையில் மிகப் பெரிய சாதனைகளுக்கு அப்பால் கூட முழுமையான பரவசம் வருவதில்லை. ஏனென்றால் இந்த உலகத்தில் அவன் தன்னுடைய வாழ்க்கையின் கடைசி விநாடி வரை சாதிக்க வேண்டிய காரியங்கள் மீதமிருக்கின்றன. தன்னுடைய வழியிலும் தன்னைச் சூழ்ந்துள்ள பிறருடைய வழிகளிலும் எதிர்ந்து கிடக்கிற தடைகளைக் களைந்தெறிந்து நிமிர்கிற வரையில் க்ஷத்திரியனுடைய கைகள் ஓய்ந்திருக்கக் கூடாது. துன்பச் சுமைகளை எல்லாம்மெய்யாகவே களைந்து தீர்க்கிற வரை க்ஷத்திரியனுக்குச் சுயமான பெருமிதம் இல்லை. கற்பிக்கப்பட்ட ஒருமை நெறியிலிருந்து குறையாமல் நிறைந்த எல்லையில் நிற்பது பெண்ணுக்குக் கற்பாவது போல் பெருமையையே தன் ஒழுக்கமாகக் கொண்டு நிற்பவன்தான் வீரன். குன்றவிடாத நிறைந்த பெருமைதான் வீரனுக்குக் கற்பு. ஒவ்வொரு மனிதனுடைய வழியிலும் உறவினர்களையும், நண்பர்களையும், வேண்டியவர்களையும் கூடத் துணிந்து எதிர்க்க வேண்டிய குருக்ஷேத்திரப்போர் ஒன்று எப்போதாவது குறுக்கிடுகிறது. அப்போது சிறிய உறவுகளினால் தயங்கவோ, மயங்கவோ கூடாது!

சில ஆண்டுகளுக்கு முன் பூம்புகாரின் சக்கரவாளத்துக் காட்டில் என்னுடைய தவச் சாலைக்குத் தீ வைக்கப்பட்டபோது அதில் நான் எரியுண்டு மாண்டு போகாமல் உயிரோடு தப்பி வந்து விட்டேன் என்பது வீர சோழிய வளநாடுடையாருக்கு மட்டும்தான் தெரியும். அப்படித் தெரிந்திருந்தும் நான் இறந்து போய் விட்டதாகப் பொய் கூறி உன்னை அவர் ஏன் ஏமாற்றினார் என்று நீ இன்று மனம் கலங்கக் கூடாது. காலம் வருகிறவரை இந்த உண்மையைப் பரம இரகசியமாகக் காப்பாற்றவேண்டும் என்று நான் இவரிடம் வாக்குப் பெற்றுக் கொண்டிருந்தேன். எனக்குக் கொடுத்த வாக்கை இவர் இறுதி வரை காப்பாற்றி விட்டார். ஆனால் நானும் இவரும் இந்தக் காரியத்

துக்காகத் தீர்மானம் செய்து வைத்திருந்த காலத்தில் இது நடைபெறாமல் தவறி விட்டது. நான் இங்கே புறப்பட்டு வந்து தங்கிய மறு ஆண்டில் வைகாசி விசாகத்தின்போதே உன்னை அழைத்துக் கொண்டு வீரசோழிய வளநாடுடையார் இங்கே வருவார் என்று எதிர்பார்த்தேன். நான் எதிர்பார்த்தபடி நடைபெறவில்லை. இவர் வந்து திருநாங்கூரில் உன்னை அழைத்தபோது நீயே வர மறுத்து விட்டாயாம். திருநாங்கூரடிகளும் உன்னை அனுப்புவதற்கு விரும்பவில்லையாம். சென்றமுறை இங்கு இவர் தனியே வந்தபோது திருநாங்கூர் அடிகளின் மேல் மிகவும் கோபத்தோடு வந்தார். நான்தான் இவரைச் சமாதானப் படுத்தினேன்.

குழந்தாய்! எவ்வளவுதான் வளர்ந்து பெரியவனாகி விட்டாலும் இன்னும் நீ எனக்குக் குழந்தைதான்! நாளங்காடியில் மாபெரும் ஞானவீரர்களையெல்லாம் வென்று நீ 'நாவலோ நாவல்' — என வெற்றி முழக்கமிட்ட புகழ்ச்செய்திகள் யாவற்றையும் வீரசோழிய வளநாடுடையார் அவ்வப்போது தக்கவர்கள் மூலமாக எனக்குச் சொல்லி யனுப்பிக் கொண்டிருந்தார். அவற்றையெல்லாம் கேள்வியுற்ற போது நாம் வளர்த்த பிள்ளை இப்படிப் புகழ்வளர்க்கும் பிள்ளையாகத் தானே வளர்ந்திருக்கிறதென்று எண்ணி எண்ணிப் பூரித்தேன் நான். ஆனால் நீ அடைய வேண்டிய மிகப் பெரிய வெற்றி இனிமேல் தான் இருக்கிறது. புகழுக்காக அடைகிற வெற்றிகள் என்றும் உனக்கு உரியவை. குடிப் பெருமையை நினைவூட்டுவதற்காக அடைகிற வெற்றிகளும் சில உண்டு....''

என்று அருட்செல்வர் சொல்லிக் கொண்டே வந்த போது, சொற்களிலும் கண்களிலும், அழுகை பொங்க உணர்வு நெகிழும் குரலில் இளங்குமரன் அவரை ஒரு கேள்வி கேட்டான்.

''எப்போது எந்தக் குடியில் பிறந்தோம் என்றே தெரியாமல் வாழ்கிறவனுடைய வாழ்க்கைக்கு நீங்கள் கூறுகிற வகையைச் சேர்ந்த வெற்றிகள் அவசியம் தானா?'' —

''இன்று நீ என் முன்னால் இப்படி அழக் கூடாது இளங்குமரா! உன்வாழ்க்கையில் இது சிறந்த நாள். இன்று நீ மிகவும் மகிழ்ச்சியாயிருக்க வேண்டும். கடைசியாக நீயும் நானும் ஒருவரையொருவர் வளநாடுடையார் இல்லத்தில் சந்தித்துக் கொண்ட பழைய இந்திர விழா நாளின் இரவை நீ மறந்திருக்கமாட்டாய் என்றெண்ணுகிறேன். அன்று நீ என்னிடம் தாங்க முடியாத தவிப்போடு எந்தக் கேள்வியைக் கேட்டாயோ அதே கேள்வியைத்தான் இப்போது வேறு சொற்களில் வேறு விதமாக அடக்க முடியாத அழுகையோடு கேட்கிறாய்! அறிவும், தத்துவ ஞானங்களும்கூட மனிதனுடைய மனத்தில் ஆணி வேர் விட்டுப் பதிந்து விட்ட பழைய துக்கத்தைப் போக்க முடியுமா என்ற சந்தேகம் உன் நிலையைப் பார்த்ததும் எனக்கு உண்டாகிறது.''

''அப்படியில்லை ஐயா! துக்கங்களுக்காக வாய் விட்டுக் குமுறாமல் மனத்திலேயே அழுது விடுவது என் வழக்கம். ஆனால் இறந்து போனதாக நம்பி விட்ட உங்களை மீண்டும் உயிரோடு பார்த்த போது நான் குழந்தையாகி விட்டேன். உங்கள் பாவனையில் நான் என்றும் குழந்தையாக இருப்பதாகத்தானே நீங்களும் சற்றுமுன் கூறினீர்கள்? உயிரோடு உங்களைக் கண்டதும் எனக்கு அழுகை வருகிறது. எல்லையற்ற ஆனந்தத்தின் விளைவு அழுகை என்று தானே ஞானிகள் சொல்கிறார்கள்?'' —

''ஞானிகள் அப்படிச் சொல்லியிருக்கலாம்! ஆனால் இனிமேல் உன்னுடைய வாழ்க்கையில் அழுகைக்கு இடமில்லை, குழந்தாய்! இந்தக் கணம் முதல் உன்னுடைய மனமாகிய தேர்த் தட்டில் நான் ஏறி நின்று கொண்டு உன்னைச் செலுத்தி வழிநடத்திக் கொண்டுபோக வேண்டிய காலம் வந்து விட்டது. நீ மறுபடியும் கோபமும், குமுறலும், மானமும், கொதிப்பும் நிறைந்தவனாக மாறிக் கையில் வில்லை நாணேற்றிக் கொண்டு க்ஷத்திரியனாக நின்று என் வழியில் நடக்க வேண்டும்.....''

''இப்படி ஒரு வேண்டுகோளை உங்களிடமிருந்து நான் எதிர்பார்க்கவில்லை, சுவாமி! கப்பலில் வரும்போது மறைத்து மறைத்து இதே வேண்டுகோளைத்தான் வளநாடுடையாரும் என்னிடம் கூறினார். 'மனத்தின் வலிமைதான் மெய்யான வீரம்' — என்று வாதிட்டு அவரை நான் மறுத்து விட்டேன். அதே வேண்டுகோளைத்தான் நீங்களும் இப்போது என்னிடம் கூறுகிறீர்கள்...''

''காரண காரியங்களோடுதான் இந்த வேண்டுகோளை விடுக்கிறேன் குழந்தாய்! உன் தாய், தந்தை, உற்றார், உறவினர், குடும்பம், எல்லாரும் அழிந்தொழிந்து சீர்கெட்ட கதையை உனக்கு நான் விளக்கும் காலம் வந்திருக்கிறது. அதைக் கேட்டு விட்டு நீ என் முன் வெறும் கண்ணீர் சிந்துவதை மட்டும் நான் விரும்ப மாட்டேன். கேட்டவுடன் நீ க்ஷத்திரியனாக எழுந்து நிற்க முடியுமானால் நான் தயங்காமல் அவற்றை உனக்கு விளக்கலாம்'' என்று ஆவேசத்தோடு கூறினார் முனிவர். (தொடரும்)

# சிறப்பு மிக்க சான்றோர்கள்

## டாக்டர் உ. வே. சாமிநாதய்யர்

ஒரு விதத்தில் தமிழ் மக்களாகிய நாம் என்றென்றும் சிறு வயதினர்களாகவே விளங்கி வரப் போகிறோமென்றால் ஆச்சரியப்பட வேண்டாம். ஏனென்றால் நமக்கு என்றும் நிலையான பாட்டியும் தாத்தாவும் இருந்து வருகிறார்கள்.

தமிழ்ப் பாட்டி யார் என்று கேட்டால் எந்தத் தமிழ்க் குழந்தையும் "அவ்வையார்" என்று கூறி விடும். அதே மாதிரிதான் நமது தமிழ்த் தாத்தாவும். தமிழ்த் தாத்தா யார் என்று கேட்டால், "இதோ சிலை உருவில் இருக்கிறாரே. இவர் தான்" என்று குழந்தைகள் கூடச் சுட்டிக் காட்டி விடும். தமிழ் மக்கள் ஒரு முகமாகத் 'தமிழ்த் தாத்தா' என்று அன்புடன் அழைக்கும் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களைச் சிலை உருவில், சென்னை ராஜதானிக் கல்லூரிப் பூங்காவில் அமைத்திருக்கிறார்கள். திருவல்லிக்கேணி கடற்கரைச் சாலையில் நமது அன்புக்குகந்த தாத்தா அவர்கள், தமிழ்க் கடலைப் பார்த்தவண்ணம் நின்று கொண்டிருக்கும் காட்சியை நாமும் நாளெல்லாம் நின்று பார்த்தபடியே யிருக்கலாம்.



அதுவும் காலை நேரத்தில் இளஞ்சூரியனின் கிரணங்கள் கடல் அலைகளின் மீது தவழ்ந்து வெள்ளிப் படலங்களை வாரி இறைக்கும் கோலத்துடன் ஐயர் அவர்களின் கூர்மையான பார்வையையும் இணைத்துப் பார்ப்போமானால், இதயத்திலே விவரிக்கவொண்ணாத ஒரு பெரு நிறைவு உணர்ச்சி பொங்கத்தான் செய்கிறது. சங்க காலம் முதல், இன்று வரையில் தமிழ் வளர்ந்த கதையின் ஒவ்வொரு பகுதியும் நினைவு அலைகளாக எழுந்து, முழங்குகின்ற உணர்வைப் பெறலாம்.

ஐயர் அவர்களின் வாழ்க்கைச்சரிதம் பிரசித்தம். 1855-ம் ஆண்டு பிப்ரவரி 19-ந் தேதி பிறந்த சுவாமிநாதய்யர் அவர்கள் தமது சுயசரிதத்தைத் தாமே எழுதி யிருக்கிறார்கள். 'சுய சரிதம்' என்று பெயரிட்டு அதை அழைத்த போதிலும், உண்மையில் அது, ஐயரவர்களின் சுயசரிதம் மட்டும் அடங்கியதல்ல; அதிலே தமிழ் மொழியின் சரிதம், தமிழ் இலக்கியம், இலக்கணத்தின் வரலாறு, தமிழ் வளர்த்த பெரியோர்களின் வரலாறு எல்லாச் சிறப்புக்களும் ஒன்றாய்ச் சேர்ந்ததே ஐயரவர்களின் வரலாறு என்று கூறும்வண்ணம், சிறப்புப் பெற்றிருக்கிறது.

முன்னாட்களில், போக்குவரத்துச் சாதனங்கள் மிகக் குறைவு. அப்போது, ஐயர் அவர்கள் போக்கு வண்டிகளில் சென்றும், பத்து மைல், பன்னிரண்டு மைல்கள் கால் நடையாக நடந்து சென்றும் அங்கங்கே தமிழ்ப் பற்று மிக்க குடும்பங்களில் ஒளிந்து கொண்டிருந்த ஓலைச் சுவடிகளைத் தேடிப் பெற்ற விவரங்களைக் கேட்கும்போது, அவருடைய தமிழார்வம் எவ்வளவு தூரம் மேன்மை பெற்றிருந்த தென்பது விளங்கும்.

ஐயர் அவர்கள் முயன்று, வெளிக் கொண்டு வந்த பயன்தான் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, பத்துப்பாட்டு முதலிய பெரிய தமிழ்ப் பொக்கிஷங்களாகும். ஐயரவர்கள் முறையாகக் குருகுல வாசம் செய்து தமிழ் மாணவராக விளங்கினார். தமது ஆசிரியர், மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்

பிள்ளை அவர்களிடம் பாடங்கற்ற முறை கேட்போரை மெய்சிலிர்க்க வைப்ப தாகும். திரு மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களிடம் பிரதம மாணவர்—சிறந்த மாணவர் என்ற பாராட்டுதலைப் பெற் றவர் சாமிநாதையர் அவர்கள்.

பிற்காலத்தில், ஐயரவர்கள் தமது குருநாதராகிய திரிசிரபுரம் மகா வித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களின் வாழ்க்கை வரலாற்றை விரிவாக எழுதி நூலாக வெளியிட்டார்கள். 'தமிழ்ப் புலவர்களைப் பற்றிய சரியான வரலாற்று நூல் இல்லை' என்ற பெருங் குறையை அந்நூல் நிவர்த்தி செய்து விட்டது; அத்துடன் தமிழகத்தின் பண்டைக்கால நிகழ்ச்சிகளைச் சுவை குன்றாமல் அந்நூல் கூறுகிறது என்னும் பெருமையையும் பெற்று விட்டது.

தமிழ் வசன நடையை மிக மிக எளிமையாக்கிய பெருமை தமிழ்த் தாத்தா அவர்களையே சாரும். எளிதில் பொருள் விளங்காத பல கடுமையான சொற்களைப் புகுத்தி எழுதுவதையே அக்காலத்தில் பலர் உயர்வாகக் கருதி வந்தனர். ஐயரவர்களின் எளிய வசன நடையில் இனிமையும், நயமும் ததும்பி நிற்கும்; படிப்பவர்களை ஈர்க்கும் கவர்ச்சி யும் நிறைந்திருக்கும். ''கண்டதும் கேட்டதும்'', ''பழையதும் புதியதும்'' என்பன போன்ற பல அருமையான வசன நூல்களை இயற்றித் தாய்த் திரு நாட்டுக்கு அருந்தொண்டு ஆற்றி யிருக்கிறார்.

சென்னை ராஜதானிக் கல்லூரியில் ஐயர் அவர்கள் பதினாறு ஆண்டுகள் தான் தமிழாசிரியர் பதவி வகித்து வந்தார்கள். 1942-ம் வருஷம் ஏப்ரல் 28-ந் தேதி தமிழ்த் தாத்தா இவ்வுலகை விட்டு மறைந்தார். எனினும், சிலை உருவத்தில் அக் கல்லூரியில் நிரந்தர மாகப் பதவி வகித்து வரும் காட்சி யைக் காண்கிறோம்.

ஐயர் அவர்களின் தமிழ்ச் சேவை யைப் பாராட்டி, காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள் ''தாக்ஷிணாத்ய கலாநிதி'' ''திராவிட வித்யாபூஷணம்'' என்ற பட்டங்களை வழங்கினார்கள். இதைத் தவிர ஐயரவர்கள் பெற்ற பட்டங்களும் விருதுகளும் பலப் பல.

மகாகவி பாரதியார் அவர்கள் ஐயர் அவர்களின் தமிழ்ச் சேவை குறித்து ஒரு கவியே பாடி விட்டார். ஐயரவர் களின் சிலையின் கீழ் பாரதியாரின் கவிதை பொறிக்கப்பட்டிருக்கிறது.

''பொதியமலைப் பிறந்த மொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய் அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே''

என்றுகூறியுள்ளார் மகாகவி பாரதியார். கவியின் வாக்குக்கு ஏற்ப, சென்னை ராஜதானிக் கல்லூரி முகப்பில் ஐயர் அவர்கள் இறப்பின்றித் துலங்கி வரு வதைக் காண்கின்றோம். —கதிர்

## காங்கிரஸ் ஆட்சியில்.....

காங்கிரஸ் சர்க்கார் கடந்த பதினைந்தாண்டுகளாக ஆட்சி புரிந்ததில் ஒரே ஒரு இனத்தில் மட்டும் அபரிமிதமான வளர்ச்சி காட்டியிருக்கிறது. அதுதான் சர்க்கார் கடன். பதினைந்தென்ன? ஐந்தே ஆண்டுகளில் 4200 கோடி ரூபாய் கடனை 7200 கோடியாக உயர்த்திய பெருமை அதனைச் சாரும். இதற்கு வருஷாந்திர வட்டி சுமார் 300 கோடி ரூபாயாகும்; அதாவது மத்திய சர்க்காரின் மொத்த வருமானத்தில் முப்பது சதவீதமாகும்.

இதில் நாம் அந்நிய நாடுகளுக்குப் பட்டிருக்கும் கடன் 2000 கோடி ரூபாயாகும். மூன்றாம் திட்டத்தில் இது சுமார் 5000 கோடி ரூபாயாக அதிகரிக்குமாம். உள் நாட்டுக் கடனும், வெளி நாட்டுக் கடன்களுமாகச் சேர்ந்து 12000 கோடி ரூபாயாக விசுவரூபம் எடுக்குமாம்.

இந்தக் கடன்களைத் திருப்பித் தருவது பற்றித் திட்டம் எதுவுமே கிடையாது. உள்நாட்டுக் கடன் விஷயமாவது போகட்டும். அந்நியக் கடனை அடைக்காமல் ஒரு தேசம் திவாலாகி விட்டால் அப்புறம் அதன் மதிப்பும் மானமும் என்னாவது? கெடுபிடி நிலைமையிலேயே வல்லரசுகள் உரசிக் கொள்வதால் எதிராளிக் கோஷ்டிகள் இரண்டுமே இந்தியாவை சௌஜன்யமாக வைத்திருக்க எண்ணி இவ்விஷயத்தில் வாய் மூடி வருகின்றன. அசல் போர் மூண்டாலோ, இந்தியாவின் 'நடுநிலைமை'க் கொள்கை என்பதும் மறைமுகக் கம்யூனிஸத்தின்மீது மேல் நாடுகளின் சந்தேகம் வலுத்தாலோ இந்தச் சாதகமான நிலை தொடருமா? அப்போது நாம் என்ன செய்வோம்? பிறரை நம்பி ஆழக் கால் வைத்து இறங்கிய திட்டங்கள்தான் என்னாவது? உங்களை வோட்டுக் கேட்க வரும் காங்கிரஸ்காரர்களை இதற்கு விடை கூறச் சொல்லுங்கள்.

ஒரு தேர்தல் கதை

# பதவி உயர்ந்தது!

கு.நம்பன்

இந்தக் கதை நிகழுமிடத்துக்கு இராசமாபுரம் என்று பெயர் சூட்டிக் கொள்வோம். இராசமாபுரம் நல்ல வளமுள்ள நகரம். அவ்விடத்து மக்கள் நன்கு உண்டு உடுத்தி வாழ்பவர்கள். 'உண்டு உடுத்தி வாழ்பவர்கள்' என்ற சொற்றொடரைக் கையாண்டதற்காகக் கவலைப் படாதீர்கள். ஒரு பேச்சுக்குச் சொல்லி வைத்தோம். இந்தக் காலத்தில் உண்டு உடுத்தி வாழ்பவர்கள் என்னைப் போலும் எத்தனை பேர்கள் கிடைப்பார்கள்?

நன்கு உண்டு உடுத்தி வாழ்வதாகக் கனவு காண்கிறார்களே, அவர்கள் பாலில் நீர், நெய்யில் கொழுப்பு அல்லது வனஸ்பதி, அரிசியில் கல் , கோழி முட்டைக்குப் பதிலாக ஆமை முட்டை, மாவில் என்ன என்ன கலந்திருக்குமோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம், கலப்படப் பொருள்களாகத்தான் உண்டு வருகிறார்கள். நல்ல காசைக் கொடுத்து நொள்ளைப் பொருளை வாங்குவது என்பது இராசமாபுரத்தில் மட்டுமென்ன, எங்குமே தான் தினசரி வழக்கமாகி விட்டது. உணவுப் பொருள்களில் கலப்படம் செய்பவர்களுக்கு எதிராகச் சட்ட திட்டங்கள் இல்லாமல் இல்லை. அவர்களது இழிசெயல்களைக் கண்டுபிடித்து அடக்க இலாக்காக்கள் எதுவும் இல்லாமல் இல்லை. அவற்றின்படி கலப்படம் செய்யப்படும் பொருள்களைப் பறிமுதல் செய்து விடலாம், அபராதம் விதிக்கலாம். அது மட்டுமல்ல; கலப்படம் செய்பவர்களைச் சிறைக்கே கூட அனுப்பலாம். அவர்கள் செய்யும் தொழிலுக்குப் பர்மிட்—லைசென்ஸ் என்று ஏதாவது இருக்குமானால் அதன் தலையில் கை வைக்கலாம்.

ஆனால் இந்தச் சட்ட திட்டங்கள் எல்லாம் சட்டப்புத்தகங்களில் தூங்குகின்றன. இவ்வலுவல்களைக் கவனிப்பதற்கென்று இருக்கும் துறை என்ன செய்கிறதோ, தெரியாது. இராசமாபுரத்து மக்களின் உடல் நலம் நாளுக்கு நாள் சீர்கேடுற்று வருகிறது; நோய்கள் பெருகி வருகின்றன. டாக்டர்களுக்குக் கொண்டாட்டம்; பைகள் நிறைகின்றன.

இந்த இராசமாபுரத்துக்கு மிஸ்டர் சக்சேனா பெரிய அதிகாரியாக வந்தார். உணவுப் பொருள்களைக் கவனிக்கும் பெரும் பொறுப்பு அவர் மேற்கொண்டிருந்த துறையின் வசம் இருந்தது. இந்த இலாக்காவில் டாக்டர்கள் இருந்தார்கள். ரசாயன ஆராய்ச்சியாளர்கள் இருந்தார்கள். குமாஸ்தாக்கள் இருந்தார்கள். வில்லைச் சேவகர்கள் இருந்தார்கள். அதாவது எல்லாருமே இருந்தார்கள். இல்லாவிட்டால் இலாக்கா இலாக்காவாக முடியுமா? பைல்கள் இந்த மேஜையிலிருந்து அந்த மேஜைக்குப் போயின; போய் வந்த வண்ணம் இருந்தன. அதனால் இந்தத் துறையில் ஊழியம் புரிந்து வந்தவர்களை யாரும் தின்னலைச் சோற்றுத் தடிராமன்கள் என்றோ, பாவச் சோற்றைத் தின்பவர்கள் - என்றோ உதட்டில் நாவைப் போட்டுச் சொல்ல முடியாது. தீராத பெரும் பிரச்னைகள் பல அங்கு தலையெடுக்கும். அவற்றின் மீது விளக்கம் கோரி நீண்ட நீண்ட இனிய குறிப்புக்கள் எழுதப்படும். அவற்றைத் தட்டெழுத்துக் குமாஸ்தாக்கள் கைவலிக்கத் தட்டிக் கொடுப்பார்கள். சேவகர்கள் கை கடுக்க எடுத்துப் போய் மேஜைக்கு மேஜை மாற்றி வைத்த வண்ணம் இருப்பார்கள்.

சக்சேனா இளைஞர். இளங் கன்று என்று சொன்னாலும் இன்னும் பொருந்தும். சுதந்திரம் கிடைத்த பின் ஐ. ஏ. எஸ். ஸில் சேர்ந்தவர். உயர்ந்த நோக்கங்கள் கொண்டவர். சென்ற மூன்று ஆண்டுகளாகப் பைல்களோடு பெரும் போர் புரிந்தும், உற்சாகம் சிறிதும் குன்றாதவர். பாரத நாடு விரைவில் மேன்மையுற வேண்டும் என்று நெஞ்சார விரும்பியவர். எனவே, வந்ததும் சக்சேனா பல விந்தைக் கேள்விகள் போடத் தொடங்கி விட்டார். அதாவது அந்த மாதிரிக் கேள்விகளை இது வரை யாருமே கேட்டதில்லை. இரண்டு மூன்று கேள்விகளைக் கேட்ட மாத்திரத்திலேயே, அவரது நிர்வாகத்துக்குக் கீழுள்ள குமாஸ்தா உள்ளூற நடுங்கத் தொடங்கி விட்டான். அந்தக் கேள்விகளுக்கு ஏதோ சுற்றி வளைத்துப் பதில் சொல்லியும் பார்த்தான். ஐந்தாவது கேள்வியைத் தாளாமல், "இப்படித்தான் இங்கு நடந்து வருகிறது, சார்!" என்று தைரியமாகக் கூறி விட்டான்.

சக்சேனாவின் முகத்தில் சிறிது கடுமை ஏறியது. "நாம் இப்படி நடப்பதை விரும்பவில்லை. நாம் சுதந்திரம் அடைந்துவிட்டோம். நாடு முழுவதும் முன்னேறி வளம் பெற வேண்டும் என்பதை நீங்களும் விரும்பவில்லையா?" என்று கேட்டார்.

குமாஸ்தா பழம் பெருச்சாளி. பழம் தின்று கொட்டை போட்டவன். கடந்த இருபத்து ஆறு ஆண்டுகளாக அவன் அரசாங்க உத்தியோகம் பார்த்து வருபவன். இந்தியா சுதந்திரம் அடைந்து விட்டது என்பதை அவன் கேள்விப்பட்டிருந்தான். இல்லை, இல்லை! பார்க்கவும் பார்த்திருந்தான். எதை? கட்டிடங்களில் புதுக் கொடிகள் பறப்பதை! ஆனால் அவன் எந்த ராஜா எந்தப் பட்டினம் போனாலும் பைல்கள் பைல்களாகவேதான் இருக்கும் என்று எண்ணி விருந்தான். பைல்கள் என்ன கொடிகளா, நினைத்தபடி மாற?-இப்படித்தான் அவன் நினைவு ஓடியது. எனவே, அவன் மீண்டும் ஒருமுறை, "சார்! உலகப் போரின் பொழுது இந்த இலாக்கா தொடங்கப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரை இப்படித்தான் இயங்கிக் கொண்டு வருகிறது. எனக்கு இருபத்தாறு வருஷ அனுபவம் உண்டு. வேறு பல இலாக்காக்களி

ஜும் நான் வேலை பார்த்திருக்கிறேன். எல்லா இடங்களிலும் இப்படியேதான் அலுவல்கள் நடைபெறுகின்றன!'' என்றான்.

குமாஸ்தா தனது இருபத்தாறு வருஷ உத்தியோகத்துக்கு அழுத்தம் கொடுத்துப் பேசினான். அதாவது, ''ஐயா, சும்மா இரு ஐயா! மூன்று வருஷங்கள் தானே ஐயா ஆகின்றன நீ வேலைக்கு வந்து! உனக்கு என்ன ஐயா தெரியும்? இந்தச் சுதந்திரம் கிடைத்திரா விட்டால் உன்னைப் போன்றவர்களை யார் ஐயா சீண்டுவார்கள்?' என்பதை வேறு விதமாகக் கேட்டான்.

மிஸ்டர் சக்சேனா சிறிது யோசனை செய்துவிட்டு, ''சரி, என்ன நடக்கக் கூடும், எப்படி நடக்கக் கூடும் என்பதை நான் பார்த்துச் சொல்கிறேன்!'' என்று சொன்னார்.

குமாஸ்தா பைல் மலையைச் சுட்டிக்காட்டி, ''எதை வேண்டுமானாலும் பாருங்கள்! இங்கே உங்களுக்கு எல்லா 'பைல்'களும் 'அப்-டு-டேட்'டாகக் கிடைக்கும்!'' என்றான்.

''நான் பைல்களைப் பார்க்க விரும்பவில்லை. கடைகள், ஹோட்டல்கள், ரெஸ்டாரண்டுகள் முதலியவற்றைத்தான் என் கண்களால் காண விரும்புகிறேன்!'' என்றார் சக்சேனா.

அன்றைக்கே ஹோட்டல், ரெஸ்டாரண்டு, கடைகள் அனைத்துக்குமே இச் செய்தி மின்னல் வேகத்தில் பரவியது. 'வயதில் இளைஞனான புது அதிகாரி வந்திருக்கிறான் ஐயா! மிகப் பொல்லாதவனும், பெரு வயிறு படைத்தவனும். இந்த இலாக்காவுக்கு நாம் மாதம் மூவாயிரம் என்று மாமூல் ஒதுக்கி வைத்திருக்கிறோமே. அதை அவன் தனியாகவே தட்டிக் கொண்டு போய்விடத் திட்டம் போட்டிருக்கிறான் போலிருக்கிறது!' — இப்படியாகப் பேசிக் கொண்டார்கள்.

இதைக் கேள்வியுற்ற லாலா பானுமல், ''என்ன ஐயா இவங்க விளையாடுகிறாங்களா? பாராளுமன்றத்துக்கும் சட்ட மன்றத்துக்கும் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்தோமே! மந்திரிகளாக்கினோமே! அதற்கான செலவுகள் அத்தனையையும் ஏற்றுக் கொண்டோமே! இன்னும் என்ன என்னவெல்லாமோ செய்து இவர்களைக் கைதூக்கி விட்டதற்குக் கண்ட பலன் இதுதானா? நேற்றுப் பிறந்த பயல்கள் நம்மைப் பயமுறுத்துவதா? மாமூலான மூவாயிரத்துக்கு மேல் ஒரு சல்லிக்காசு கூட்ட முடியாது. இந்த சக்சேனா மரியாதை கெட்ட பயலாயிருப்பான் போலிருக்கிறதே!'' என்றார்.

லாலா பானுமல் சாதாரண மனிதர் அல்ல. அவர் இராசமாபுரத்து வியாபாரிகள் சங்கத்துக்குத் தலைவர். ராஜ்யவியாபாரிகள் மன்றத்தின் உப தலைவர்களில் ஒருவர். நொடியில் தூது கோஷ்டி ஏற்படுத்தி, சக்சேனாவைப் பேட்டி காண ஏற்பாடு செய்து விட்டார்.

சக்சேனா உத்தியோகத்தில் அமர்ந்து மூன்று ஆண்களே ஆன பொழுதிலும், வியாபாரிகளின் தந்திரப் பேச்சுக்களையும் பித்தலாட்டங்களையும் நன்கு அறிந்திருந்தார். அவர் அக் கோஷ்டியின் பேச்சுக்களைச் சிறிதும் காதில் வாங்கிக் கொள்ளாமல், ''இச் சமயம் மக்களுக்கு ஒன்றுதான் தேவை.— குறைந்த விலையில் சுத்தமான உணவுப் பொருள் வேண்டும். அது மாவு வாங்குமானால் மாவு கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறதே யொழிய, அதோடு வேறு பொருள்களும் கலந்திருக்க வேண்டும் என்று விரும்பவில்லை. நெய் வாங்கினால் நெய் கிடைக்க வேண்டுமே ஒழியக் கொழுப்புக் கலந்த தரக் குறைவான பொருளை அது விரும்பவில்லை. இதை வியாபாரிகள் நினைவில் கொள்ளவேண்டும்'' என்று கூறித் தூதுகோஷ்டியைத் திருப்பி விட்டார்.

நம்பிக்கை இழந்து திரும்பிய தூதுகோஷ்டி சக்சேனாவை வாயில் வந்தபடி யெல்லாம் திட்டத் தொடங்கியது.

லாலா பானுமல்லோ, ''மக்களாம் மக்கள்! வியாபாரிகளான நாம் இல்லா விட்டால், இந்த மக்கள் என்ன செய்து விடுவார்களாம்? இப்பொழுதும் இந்தத் தேர்தலுக்கு நாம் உதவா விட்டால், இவர்கள் தேர்தலில் நின்று வெற்றி கண்டு விடுவார்களோ? சக்சேனா பார்ப்பதற்கு இளைஞனாயிருக்கிறான். ஆனால் ஆள் பொல்லாதவனாயிருப்பான் போலிருக்கிறது. இன்னும் ஆயிரம் இரண்டாயிரம் அதிகம் வாங்கிக் கொண்டால் தான் விடுவானோ, என்னவோ?'' என்றார்.

வியாபாரிகளின் இரகசியக் கூட்டம் நடைபெற்றது. ஆணவம் பிடித்தவர்கள் முதலில் ஆத்திரமாகத்தான் பேசினார்கள். ஆனால் முதியவர்களின் ஆலோசனையின் பேரில் ஆயிரம் ரூபாய் அதிகமாகத் தருவதாகத் தீர்மானம் செய்து, தூதர்களை விரட்டினார்கள். சக்சேனாவின் காதுகளில் இந்தச் செய்தி விழுந்தது. முதலில் அவருக்கு விஷயம் புரியவில்லை. விஷயம் விளங்கியதும் மிகவும் கோபமுற்றார். கடைகளுக்குச் சென்று சோதனை யிட்டார். ஹோட்டல்களின் சமையலறைக்குள் புகுந்து பொருள்களின் தராதரத்தைப் பரிசோதித்தார். ஐந்தாறு கடைக்காரர்கள், மூன்று நான்கு ஹோட்டல்காரர்கள் — இவர்களுக்கெதிராக வழக்குத் தொடரப்பட்டது.

இச் செய்தி பரவவே, நகரம் முழுவதும் பரபரத்து விட்டது. லாலா பானுமல் ராஜ்யத்தின் தலைநகரத்துக்கு ஓடினார். உப தேர்தலில் தமது தொகுதி மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபை அங்கத்தினரைப் பிடித்து, அவர் மூலம் குறிப்பிட்ட இலாக்கா மந்திரியைச் சந்தித்தார். மிஸ்டர் சக்சேனாவின் அக்கிரமத்தைக் குறிப்பிட்டு, ஒரு குரல் அழுதார். அதோடு ''ஆங்கிலேயர்கள் ஆண்ட வரையில் லஞ்சம் தாண்டவமாடியது. சுயாட்சி அடைந்த பின் அந்தத் தொல்லை தீர்ந்தது என்று எண்ணி மகிழ்ந்தோம். ஆனால் இந்த சக்சேனா வந்து அநியாயம் செய்கிறான். நாளைக்கு நாலு பேரைப் பிடித்துக் கைப்பட வழக்குத் தொடர்ந்து விடுகிறான். மாதம் ஐயாயிரம் ரூபாய் வேண்டுமாம் அவனுக்கு!'' என்றார்.

மந்திரிக்குத் துணுக்கென்றது. ''சரி, மாவட்ட மாஜிஸ்திரேட்டைச் சந்தித்து சக்சேனாவைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொடுங்கள். நீங்கள் கொடுக்கும் ரூபாய் நோட்டில் குறியிட்டுக் கொடுங்கள். அந்த நோட்டுக்களைக் கொண்டே அவனைக் குற்றவாளியாக்குங்கள்!'' என்றார்.

இப்படியெல்லாம் போனால் காரியம் நடக்காது என்று தோன்றியது லாலா பானுமலுக்கு. ''ஐயா, அவன் ஆள் பலே கைகாரன். இப்படியெல்லாம் அவனைப் பிடிக்க முடியாது.

அவன் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான கையாட்களைக் கொண்டுதான் லஞ்சம் வாங்குகிறான்!'' என்றார்.

''துப்புத் துலக்கிச் சோதனையிடச் செய்வோம்!'' என்றார் மந்திரி.

அதனாலும் பயனேற்படாது என்பதை உணர்ந்த பானுமல், ''உங்களுக்கு என் மீது நம்பிக்கை ஏற்படவில்லையென்றால், இவரைக் கேளுங்கள்!'' என்று அருகில் இருந்த, உப தேர்தலில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைஅங்கத்தினரைச்சுட்டிக்காட்டினார்.

மந்திரிக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆனால் அக் கோபத்தைச் சிரிப்பாக மாற்றிக் கொண்டு, ''சட்ட திட்டங்கள் இருக்கின்றனவே! அதனால் துப்புத் துலக்கிக் கண்டு பிடிக்கக் காலதாமதமாகலாம்!'' என்றார்.

லாலா பானுமல் நம்பிக்கை இழந்து இராசமாபுரத்துக்குத் திரும்பினார். இன்னுமோர் ஆயிரம் கூடுதலாகத் தருவதாகக் கூறி சக்ஸேனாவுக்குத் தூது அனுப்பினார். தொகையை அதிகரிக்கும்பொழுது அவருக்கு அவமானமாகத்தான் இருந்தது. ஆயினும், ''இருக்கட்டும். ஆள் ஒரு தடவை கைநீட்டி வாங்கி விடட்டும். அப்புறம் களவும் கையுமாகப் பிடிக்கா விட்டால் என் பெயர் பானுமல் இல்லை!'' என்று சொல்லி அதைத் துடைத்தெறிய முயன்றார்.

தூதன் இம்முறையும் தோல்வியேதான் கண்டான். லாலா பானுமல் ராஜ்யத் தலைநகருக்கு ஓடிச் சமீபத்திய உபதேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினரைக் கடிந்து கொண்டார். ''ஐயா! இம்மாதிரி இக்கட்டான நாட்களில் உதவுவீர்கள் என்று நம்பித்தானே ஐயா உம்மை நாங்கள் தேர்ந்தெடுத்தோம்? அடுத்த முறையும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா? அல்லது இதுதான் கடைசி முறையா?'' என்று கேட்டார்.

பானுமல்லின் பேச்சைக் கேட்டுச் சட்டசபை அங்கத்தினருக்கு முறுக்கு ஏறியது. தமது கோபத்தைச் சட்டசபையில் கொட்டினார். குறிப்பிட்ட மந்திரிக்கு எதிராக ஏதோ பேச்சு எழவே, பல குறுக்குக் கேள்விகள் கேட்டுத் திணற அடித்தார்.

மந்திரி விழித்துக் கொண்டார். உடனே அந்த அங்கத்தினரைத் தனியாகக் கூப்பிட்டுச் சமாதானம் செய்யலானார்.

''நீங்கள் காதில் வாங்கிக் கொண்டால் தானே! எங்கள் தொகுதியில் ஓர் அதிகாரி இஷ்டத்துக்கு இலஞ்சம் வாங்குகிறான். அக்கிரமங்கள் பல புரிகிறான் என்றால், மௌனம் சாதிக்கிறீர்களே!'' என்று தம் ஆத்திரத்தை அங்கும் கொட்டினார் அங்கத்தினர்.

''நான் விசாரணை நடத்திய வரையில், வேறு விதமாக அல்லவா தெரிய வருகிறது? இராசமாபுரத்து வியாபாரிகள் இலஞ்சம் கொடுத்துத் தங்கள் இஷ்டத்துக்குக் கபடம் செய்து வந்திருக்கிறார்கள். சக்ஸேனாவிடம் அவர்கள் ஜபம் சாயாமற் போகவே, இப்படிக் குமுறுகிறார்கள். இந் நிலையில் நீங்களே சொல்லுங்கள், நான் என்ன செய்யட்டும்?'' என்று கேட்டார் மந்திரி.

''அவரை அங்கிருந்து வேறு எங்காவது மாற்றிவிடக் கூடாதா?''

''பார்க்கிறேன். முடியுமா என்று!''

சக்ஸேனாவுக்கும் இந்தச் செய்தி எட்டவே அவர் அந்த மந்திரியைப் பேட்டி காணச் சென்றார். ''இராசமாபுரத்து வியாபாரிகள் என்னை அங்கிருந்து மாற்றி விடுவதாகச் சவால் விட்டிருக்கிறார்கள்'' என்றார்.

மந்திரி வறட்சி நிறைந்த குரலில், ''இது ஜனநாயக யுகம். எந்தக் காரியத்தையும் மக்கள் கண்கொண்டு பார்த்து அதற்கேற்பச் செய்ய வேண்டும்!'' என்றார்.

சக்ஸேனா நிலைமையைத் தெளிவுபடுத்தினார்: 'லாலா பானுமல்லும் அவருடைய சகாக்களும் மக்களின் எதிரிகள். இவர்கள் மக்களின் நண்பர்களாக எப்பொழுது மாறினார்கள்? கோதுமை மாவுக்குப் பதிலாகப் புளியங் கொட்டையையோ, மாங் கொட்டையையோ மாவாக அரைத்து விற்கிறார்கள். நெய்க்குப் பதிலாக என்னென்னவோ தில்லுமுல்லுகள் செய்து விற்கிறார்கள். இதைக் கேட்கப் போனால் இலஞ்சம் அளித்து அமுக்கப் பார்க்கிறார்கள்.''

''நீங்கள் கூறுவது எனக்குத் துளிக்கூடப் புரியவில்லை. நாம் எல்லோரையும் சமநோக்கோடு பார்க்க வேண்டும். எல்லோருக்கும் நம் பணி எட்ட வேண்டும். எனக்குத்தெரிந்த வரை இதுதான் முக்கியம். வணக்கம்!''என்று முகத்தை முறிக்காத தோரணையாகக் கைகூப்பி விடை கொடுத்து அனுப்பிவிட்டார் மந்திரி.

சக்ஸேனா மனமிடிந்து போய்த் திரும்பினார். ஆயினும் கடைகளிலும் தோட்டங்களிலும் தம் சோதனையை நிறுத்தவில்லை. தொடர்ந்து நடத்தினார். லாலா பானுமல் சட்டசபை அங்கத்தினரைத் துளைத்தெடுத்தார். சட்டசபை அங்கத்தினர் மந்திரியை அரித்து எடுத்தார்.

இதற்கிடையில் பொதுத் தேர்தல் வந்து விட்டது. இல்லை, இல்லை, நெருங்கி விட்டது. மந்திரி அங்கத்தினரின் தொந்தரவு தாளாமல் சக்ஸேனாவை இராசமாபுரத்திலிருந்து மாற்றும்படி உத்தரவிட்டு விட்டார். தேர்தலில் தம் கட்சி வெற்றிக் கொடி நாட்ட வேண்டுமென்றால், இப்படிச் செய்துதான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டு விட்டது. மந்திரிப் பதவியில் தேர்தல் நேரத்திலும் இருக்கக் கொண்டு தானே இப்படிச் செய்ய முடிந்தது! ஆறு மாதம் முந்தியே பதவியை உதறி விட்டுக் கோதாவில் குதிப்பதென்றால், மண் கவ்வ வேண்டியதுதான் என்பதை அறியாதவரல்லவே அவர்! ஆனால் சக்ஸேனாவுக்கு இந்த அரசியல் தந்திரம் எல்லாம் எங்கே தெரிந்திருந்தது! தமக்கு வந்த உத்தரவை எடுத்துக் கொண்டு நேரே மந்திரியிடம் போனார். 'வியாபாரிகள் எனக்குச் சவால் விட்டிருந்தார்கள். அவர்கள் பேச்சைக் கேட்டு என்னை மாற்றி விட்டீர்களே! என் கௌரவம் என்ன ஆவது?'' என்றார்.

''நீங்கள் முழு உத்தரவையும் படிக்கவில்லை என்று தெரிகிறது. உங்களை மாற்றி விட்டோம் என்பது உண்மையே. ஆனால் அதோடு உத்தியோக உயர்வும் தரப்பட்டிருக்கிறதே!'' என்றார் மந்திரி.

''உத்தியோக உயர்வா?'' — வியப்பினால் மேலே பேச முடியாமல் நின்றார் சக்ஸேனா.

இதுபோல் ஜனநாயகத் தேவைகள் நிறைவேற்றப்பட்டன.—**ஆதாரம்: ஹிந்திக் கதை.**

# பவழத்தீவு

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராமணி

4

சேனபதி நந்திவர்மரிடம் கந்தனின் திறமை தனைப்பற்றி ஆனந்தன் விளக்கவே அவருக்குக் கந்தனிடம் நம்பிக்கை ஏற்படுகிறது.



















எனக்கு அங்கு செல்ல வழி தெரியும். அது ஒரு நீண்ட பிரயாணம். நதியின்மேல் மாதக்கணக்கில் போகவேண்டும். முதலில் நாம் மட்டும் சென்று நிலைமையை அறிந்து கொண்டு பிறகு படைகளை வரவழைத்துக் கொள்ளலாம்.


ஆ! ஈட்டியல்லவா? அதில் ஏதோ கடிதம் வேறு.


எச்சரிக்கை.
உடனே இந்தத் தீவை விட்டுப் படைகளோடு வெளியேறி விடுங்கள். இல்லாவிடில் உங்கள் எல்லோரையும் கொன்று குவித்து முடிப்பான் இந்தச் சூலபாணி.


அற்பன்! பயமுறுத்தவல்லவா செய்கிறான். தலைநகரிலிருந்து ஏதாவது உதவி வருமென்று தாமதித்தேன். இனிச் சும்மா இருக்கமுடியாது — யாரங்கே?


ஆத்திரப்படாதீர்கள் சேனாபதியாரே. அமைதியோடு திட்டம் வகுப்போம். வெற்றியும் கூடி வரும். நம்மிடம் படகு இருக்கிறதல்லவா?




இன்று மாலைக்குள் ஒரு படகு தயாராக வேண்டும். சீக்கிரம்.


ஈட்டியை எறிந்தவன், அருகில் எங்-காவதுதான் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நாம் போய்ப்பார்த்தால் என்ன?


அதுவும் நல்ல யோசனை தான்.


ஈட்டி இந்தத் திசையிலிருந்துதான் வந்தது. வாருங்கள்.


கந்தனின் வேகத்தைச் சேனுபதி சமாளித்தார். ஆனந்தனால் முடிய-வில்லை. சற்றுப் பின் தங்கி வந்தவன் மீது......


ஆ...!


கந்தா.. கந்தா! உதவி.. உதவி!
தொடரும்



பக்கத்திலே நானிருக்க,
பறந்துசெல்வீர்
பி.ஓ.ஏ.ஸி.ரோல்ஸ்-ராய்ஸ்
மற்றும் காமெட்
ஜெட்லைனர் மூலம்



"...தருவேன் உங்கள் ருசிக்கேற்ற உணவு."



"...உபசரணை வழங்குவேன் — உங்கள் பணியிலே"



"...வெளிநாடு செல்கிறீர்களோ, திரும்புகிறீர்களோ — அன்புகனிந்த, கைவந்த பி. ஓ. ஏ. ஸி. சேவை உங்களுக்கே."

தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி.ஓ.ஏ.ஸி திட்டத்தைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

பயணம் முந்தி-பணம் பிந்தி!

பி.ஓ.ஏ.ஸி.யிலும் நியமிக்கப்பெற்ற உங்களுக்கு டிராவல் ஏஜெண்டும், தவிர எங்கெங்குமுள்ள பி. ஓ. ஏ. ஸி. அலுவலகங்களும் உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றன.

# B·O·A·C

உலகம் முழுவதும் பி. ஓ. ஏ. ஸி. !
உங்களை நன்கு பேணுகிறது



ஏர் இந்தியா மற்றும் க்வான்டாஸ் அவர்களோடு கூட்டமைந்த பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பொரேஷன்.

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது! "ஆல் மோஸ்ட் கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது! கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண தன்மையை அடைகிறது. ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அநுபவம் கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மின்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!




CYPA-G-10 TAM.

# திருமூலர் தவமொழி

ராஜாஜி

சேரமு

## 46

உலகுக்கு உறுதுணையாக நிற்பது இறைவனே. உலகிலிருக்கும் ஒவ்வொரு உயிருக்கும், உலகம் முழுதிற்கும் அவனே உயிர். இதைச் சொல்லித் தமது அனுபவத்தை எடுத்துக்காட்டி, அந்த அனுபவத்தை நீங்களும் அடையுங்கள் என்று உபதேசிக்கிறார் திருமூலர்.

**ஒன்றுகண் டீர்உல**
**குக்குஒரு தெய்வமும்;**
**ஒன்றுகண் டீர்உல**
**குக்குஉயிர் ஆவதும்;**

பல சமயங்கள் பலவிதமாகக் கூறிய போதிலும் அவையனைத்தும் ஒரே தெய்வம் என்பதை அழுத்தமாய்ப் பாடுகிறார்.

**நன்றுகண் டீர்நல்**
**நமச்சிவா யப்பழம்**
**தின்றுகண் டேற்குஇது**
**தித்தித்த வாறே!**

[நமச்சிவாயப் பழம்—'நமச்சிவாய' என்ற மூல மந்திரத்திற்கு உரிய மூர்த்தியாகிய சிவபெருமானை, 'நமச்சிவாயப் பழம்' என்கிறார். நல் நமச்சிவாயப் பழம்—தீங்கனியாகிய இந்த நமச்சிவாய மூர்த்தி. நன்று—உயிருக்கு நன்மை தரக்கூடிய கனியாகும். கண்டீர் — என்பதை உணருங்கள். தின்று கண்டேற்கு—அந்தப் பழத்தைத் தின்று சுவை கண்டுள்ள எனக்கு. கண்டேற்கு — கண்ட எனக்கு. இது தித்தித்தவாறே—நான் அனுபவித்த ஆனந்தத்தை நீங்களும் அடைந்து மகிழுங்கள். எனக்கு அது தித்தித்தவாறு போல் உங்களுக்கும் அது நல்ல பழம் ஆகும் கண்டீர்.]

**ஒன்றுகண் டீர்உல**
**குக்கொரு தெய்வமும்**
**ஒன்றுகண் டீர்உல**
**குக்குயிர் ஆவதும்**
**நன்றுகண் டீர்நல்**
**நமச்சிவா யப்பழம்**
**தின்றுகண் டேற்கிது**
**தித்தித்த வாறே!**

இனி, சிவபெருமானுடைய கோலங்களை வர்ணித்து உருக்கத்தோடு பாடுகிறார்:

**சந்திரன் பாம்பொடும்**
**சூடும் சடாதரன்**

சந்திரனையும் பாம்பையும் சூடிய சடையைத் தரித்த எம்பெருமான்.

**வந்துஎன்னை ஆண்ட**
**மணிவிளக்கு ஆனவன்**

[வந்து என்னை ஆண்ட—அவனே வலிய வந்து என்னை ஆட்கொண்ட. மணிவிளக்கானவன்—ஜோதிமயமான இறைவன்.]

**அந்தமும் ஆதியும்**
**இல்லா அரும்பொருள்**

[அந்தம்—முடிவு. ஆதி—பிறப்பு. இல்லா அரும்பொருள் — முடிவும் தோற்றமும் இல்லாத கடவுள்.]

**சிந்தையின் மேவித்**
**தியக்குஅறுத் தானே**

[சிந்தையின் மேவி—என் சித்தத்திலே வந்து இருந்து. தியக்கு—மும்மல மயக்கம். அறுத்தானே—களைந்தான்.]

ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மல இருளிலே அலைகிற என்னை, அந்தப் பரஞ்சோதி வலிய வந்து ஆண்டுகொண்டு, சிந்தையிலே வீற்றிருந்து, அந்தச் சிந்தையைப் பற்றிக்கொண்டிருக்கும் மும்மலங்களை அறுத்துக் களைந்து அருளினான் என்கிறார். இப்படியே மாணிக்கவாசகரும் தமது திருவாசகத்தில் பல பல பாடல்களிலே பாடித் துதிக்கிறார்.

**சந்திரன் பாம்பொடும்**
**சூடும் சடாதரன்**
**வந்தென்னை ஆண்ட**
**மணிவிளக் கானவன்**
**அந்தமும் ஆதியும்**
**இல்லா அரும்பொருள்**
**சிந்தையின் மேவித்**
**தியக்கறுத் தானே!**





சென்னை மியூசிக் அகாடமியின் முப்பத்தைந்தாவது சங்கீத விழாவில் டாக்டர் வெ. ராகவன் அவர்கள் தலைமையில் இயங்கிவரும் சென்னை சம்ஸ்கிருத ரங்கக் குழுவினர் சாகுந்தலம் நாடகத்தைச் சிறப்பாக நடித்தனர். இந்நாடகத்தில் பங்கு கொண்ட அனைவருமே நன்கு நடித்துச் சபையோரின் பாராட்டுதலைப் பெற்றனர்.

---

பிலாய் எஃகு பிராஜக்ட் என்ஜினியர் திரு கே. சத்தியமூர்த்திக்கும் சௌ. பாக்கிய லக்ஷ்மிக்கும் பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

கெஸ்ட்டெட்னர் டுப்ளிகேட்டர்ஸ் கம்பெனி டைரக்டர் திரு ஆர். ஆர். அய்யரின் புதல்வர் திரு எஸ். வேங்கடராமனுக்கும் சௌ. சாந்தாவுக்கும் திருமணம் நடைபெற்றது.





# விந்தைத் தொழிற்சாலை
## விஸ்கோஸ்



எஸ்.வி.எஸ்.

பளபளவென்று கண்ணைப் பறிக்கும் பட்டுத் துணி அணிந்து ஒரு மனிதன் வந்தால், அவனுக்குச் சமுதாயத்தில் தனி கௌரவம் கிடைத்து விடுகிறது. ஆனால் பட்டு அவ்வளவு எளிதாக யாரும் வாங்கக் கூடிய விலையில் கிடைத்து விடுகிறதா? இல்லை. ஆகவே, மனிதன் செயற்கைப் பட்டை உற்பத்தி செய்ய என்ன வழி என்று யோசிக்கத் தொடங்கினான்.

பறவை வானத்தில் பறப்பதைக் கண்டு, அதன் உடலுறுப்புக்களை ஆராய்ந்து, கடைசியில் மனிதன் தானும் வானில் பறக்க வழி கண்டு பிடித்துக் கொண்டாற்போல், பட்டுப் பூச்சியைக் கண்டு, அது பட்டு நூல் இழைப்பது போலவே, தானும் பட்டு நூல் செய்தால் என்ன என்று ஆராய்ந்து செயற்கைப் பட்டு தயாரிப்பதில் மனிதன் வெற்றி கண்டு விட்டான்! பட்டுப் பூச்சி முசுக்கட்டை இலையைத் தின்று, தன் உடலில் பிசின் போன்ற ஒரு பொருளை உண்டாக்கி, அதனைத் தன் உடலை முழுதும் நூல் இழை இழையாகச் சுற்றிக் கூட்டை அமைத்துக் கொள்ளுகிறது. அந்த இழையையே நாம் பட்டு நூலாக எடுத்து ஆடைகள் நெய்ய உபயோகிக்கிறோம்.

### ரேயான் தயாராகிறது!



அதே போல் மனிதன் தனது ரஸாயன ஆராய்ச்சியறிவால் செயற்கைப் பட்டு நூலை மிகப் பெருமளவில் செய்யும் அதிசயத்தைக் கண்டேன்! கோவைக்கு அருகிலுள்ள மேட்டுப்பாளையம் — சிறுமுகையிலுள்ள தென்னிந்திய விஸ்கோஸ் கம்பெனியாரின் செயற்கைப் பட்டுத் தொழிற்சாலையை மந்திரி திரு கே.வி. ரெட்டி சென்ற மாதம் 20-ந் தேதி திறந்து வைத்த போது அந்த விந்தையைப் பார்க்க முடிந்தது.

நீலகிரி மலையைப் புறப்படலமாகக் கொண்டு அழகாகக் காட்சி யளிக்கும் இந்தத் தொழிற்சாலையை இங்கே நிர்மாணிக்க நேர்ந்ததற்குக் காரணம் இத் தொழிலதிபர்களின் இயற்கை அழகுணர்ச்சி மட்டுமல்ல. இத் தொழிற் சாலைக்குத் தேவையான பல வசதிகள் இங்கே சுலபமாகக் கிடைப்பதாலேயே இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். பட்டுப் பூச்சிக்குத் தேவையான முசுக்கட்டை இலைபோல், இந்தத் தொழிற்சாலைக்குத் தேவையான முக்கிய-மூலப் பொருளான இருவிப்படல், மிலாறு, மூங்கில் முதலியவை ஏராளமாகக் கிடைக்கக் கூடிய காடு அருகிலுள்ள நீலகிரி மலையில்தான் உள்ளது. அடுத்தாற் போல் இந்தத் தொழிற்சாலைக்குத் தேவையான நல்ல தண்ணீர் இங்கு ஏராளமாகக் கிடைக்கக்கூடிய இயற்கை வசதி யிருக்கிறது. என்றும் வற்றாத ஜீவநதியான பவானி ஆறு மருங்கிலே ஓடுகிறது. ஆற்றில் தவறிப் போய் நீர் வற்றி விட்டால் என்ன செய்வது என்பதற்காக, முன்ஜாக்கிரதையாக ஆற்றின் இடையிலே 60 அடி ஆழத்துக்குக் கிணறு தோண்டித் தண்ணீர் எடுக்கிறார்கள்!

அதே போல் என்றும் தடங்காமல் மின்சாரம் அளிக்கக்கூடிய இரண்டு மின்சாரத் திட்டங்கள் — குந்தா, பைகாரா — அண்மையிலேயே இருக்கின்றன. ஒரு மின்சாரத் திட்டம் ஏதாகிலும் ஒரு காரணத்தால் பழுதானாலும், மற்றொன்றிலிருந்து மின்சாரம் எடுத்துக் கொள்ளலாம் அல்லவா!



செயற்கைப் பட்டுப் பஞ்சு (Staple Fibre) தயாராகிறது

கடைசியாக இத் தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பொருளை விற்க வெகுதூரம் போக வேண்டியதில்லை. இருபது மைல் தூரத்திலுள்ள கோவை ஆலைகளுக்கு உபயோகமாகி விடும்! ஆகவே, மார்க்கெட் வசதியும் இந்த சிறுமுகை ஊருக்கு இருக்கிறது!

இப்படி எல்லா விதத்திலும் வசதியுள்ள இந்த ஊரைத் தேர்ந்தெடுத்த கோவையில்அதிபர்களைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

நம் நாட்டில் வெகு நாட்களாக அந்நியச் செலாவணி நெருக்கடி இருந்து வருகிறது. வெளிநாடுகளிலிருந்து ஏதானாலும் ஒரு பொருள் இறக்குமதி செய்ய வேண்டுமானால் அதற்கு ஏகக் கட்டுப்பாடுகள்! இத்தனை கட்டுப்பாடுகளையும் மீறி ஆண்டுக்குப் பதினைந்து கோடி ரூபாய் பெறுமானமுள்ள செயற்கைப் பட்டு நூல் இறக்குமதி செய்து வந்திருக்கிறோம் என்றால் இந்தச் செயற்கைப் பட்டு நூல் நமது வாழ்வில் எவ்வளவு பெரிய இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டது என்பதை ஊகிக்கலாம். சின்னாளம்பட்டி பட்டுப் புடவை என்றால் தேசப் பிரசித்தம். இப்படி நமது கைத்தறி நெசவாளர்களும் இதனை ஏராளமாக உபயோகிக்கத்தொடங்கி விட்டார்கள் என்பதை அறிந்த கோவையில் அதிபர்கள் 23 பேர் திரு ஆர். வேங்கடசாமி, திரு ஜி. கே. தேவராஜ் இவர்கள் தலைமையில் கூடிச் செயற்கை பட்டுத் தொழிற்சாலையைத் தொடங்கத் திட்டமிட்டார்கள்!

இச் செயற்கைப் பட்டுத் தொழிலில் உலகிலேயே முன்னணியில் நிற்பவர்கள் இத்தாலி தேசத்தவர்கள் தான். அதிலும் ஸ்னியா விஸ்கோஸா கம்பெனியார் மிகப் பிரசித்தமானவர்கள். அவர்களுடைய கூட்டுறவுடன் - தொழில் நுணுக்க உதவியுடனும், இயந்திர உதவியுடனும் இத் தொழிலதிபர்கள் 1959-ம் ஆண்டு சிறுமுகையில் தொழிற்சாலையைத் தொடங்க அஸ்திவாரமிட்டார்கள். இந்தத் தொழிற்சாலையைப் போல் பரிமாணமும், முதலீடும் கொண்ட எத்தனையோ தொழிற்கூடங்கள் சர்க்கார் துறையில் அஸ்திவாரமிட்டு அந்த நிலையிலேயே இருப்பதைக் காண்கிறோம். ஆனால் கோவைத் தொழிலதிபர்களின் செயல் திறமை, விடாமுயற்சி இவற்றின் காரணமாக, ஆரம்பித்த இரண்டே ஆண்டுகளுக்குள் தொழிற்கூடம் கட்டி முடித்து செயற்கைப் பட்டை உற்பத்தி செய்து மார்க்கெட்டில் விற்கவும் தொடங்கி விட்டார்கள்! இந்த அதிசய சாதனைக்கு அவர்களையும் இத்தாலி நாட்டுத் தொழில் நிபுணர்களையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்!

இந்தக் கம்பெனிக்கு 'ஸௌத் இண்டியா விஸ்கோஸ் லிமிடெட்' என்று பெயர். இதிலுள்ள ஸௌத் இண்டியா என்பது தென் இந்தியா என்பது யாருக்கும் புரிந்து விடும். 'விஸ்கோஸ்' என்பது என்ன என்று ஓர் ஐயம் எழும். 'விஸ்கோஸ்' என்பது பிசின் —பசை போன்ற தன்மை என்றுதான் பொருள்! இத் தன்மைதான் செயற்கைப் பட்டு செய்வதற்கும், பட்டுப் பூச்சியின் பட்டுக்கும் மிகமிக அவசியமானது. பட்டுப்பூச்சி தான் தின்ற முசுக்கட்டை இலையைப் பிசினாக்கி நூலாக இழைப்பது போல், இந்தத் தொழில் கூடத்திலும் மேல்நாட்டிலிருந்து தற்போது வரவழைக்கும் அட்டை போன்ற மரச் சத்தை வெட்டி, அரைத்து மாவாக்கி, கந்தகம், காஸ்டிக் சோடா—முதலிய ரஸாயனப் பொருள்களைச் சேர்த்து, தேன் நிறத்தில் தேன் மாதிரி ஒட்டிக் கொள்ளக்கூடிய பிசினாக மாற்றுகிறார்கள். சட்டைப் பித்தான் கனமுள்ள தட்டில்

மத்திய மந்திரி கே. வி. ரெட்டி அவர்களை திரு வேங்கடசாமி அவர்கள் மாலை அணிவித்து வரவேற்கிறார்



சுமார் அறுபது துவாரங்கள் இருக்கும். அதற்குள் இந்தப் பிசினைச் செலுத்தி நூலாக எடுக்கிறார்கள்! அதுதான் ரேயான் என்னும் செயற்கைப் பட்டு நூல்!

இதே பீத்தான் கற்றளவுள்ள மற்றொரு வகைத் தட்டில் மூவாயிரம் துவாரங்கள் வரையில் இருக்கும். அதனில் இந்தப் பிசினைச் செலுத்தி இழை எடுக்கிறார்கள். இந்த இழைகளை சுமார் ஒரு அங்குல நீளத்துக்கு வெட்டி விடுகிறார்கள். இப்படி வெட்டப்பட்ட துண்டுக் குவியலைப் பார்த்தால் பஞ்சு போலிருக்கிறது. இதை ஸ்டேபிள் பைபர் (Staple Fibre) என்கிறார்கள். இந்தப் பஞ்சு சாதாரண பருத்திப் பஞ்சுடனும், ஆட்டு ரோமம் போன்றவற்றுடனும் கலந்து கம்பளி போன்றவைகள் செய்ய உபயோகமாகிறது.

இந்தியாவிலேயே செயற்கைப் பட்டுப் பஞ்சும், பட்டு நூலும் சேர்ந்து செய்யும் முதல் தொழிற்சாலை இந்தத் தென்னிந்திய விஸ்கோஸ் என்பதில் ஒவ்வொரு தென்னிந்தியனும் பெருமை கொள்ளலாம்.

இத் தொழிற்சாலை ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் வேலை செய்கிறது. ஒரு நாளுக்கு 10 டன் 'பட்டுப் பஞ்சு' தயாரிக்கிறார்கள். 5 டன் ரேயான் நூல் செய்கிறார்கள். இவ்வருஷம் ஜூன் மாதத்துக்குள் 10 டன் ரேயான் நூல் செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள்!

இந்தத் தொழிற்சாலையின் சம்பிரதாயத் தொடக்க விழா சென்ற மாதம் நடைபெற்றபோது நிர்வாக டைரக்டர்களுள் ஒருவரான திரு ஆர். வேங்கடசாமி அவர்கள், இந்தத் தொழிற்சாலைக்கு மிக அவசியமான 'காஸ்டிக் சோடா' என்னும் ரசாயனப் பொருளை உற்பத்தி செய்து கொள்ளச் சர்க்கார் லைசென்சு தர வேண்டும் என்று கேட்டார். இப்பொருள் உற்பத்தி செய்கையில் கிடைக்கும் உப பொருளான 'க்ளோரினை'யும் வீணடிக்காமல் உபயோகப் படுத்திக் கொள்ள முடியும் என்று குறிப்பிட்டார். ஸ்ரீ வேங்கடசாமியின் இக் கூற்றுக்குச் சர்க்கார் செவிசாய்க்குமானால் தற்சமயம் மூலப் பொருளுக்கு வெளிநாட்டை எதிர்பார்க்கும் நிலையிலுள்ள இந்தத் தொழில் வெகுவாக முன்னேற வாய்ப்பிருக்கிறது.

அன்று நடைபெற்ற தொடக்க விழாவில் சென்னை மந்திரிகள் திரு காமராஜ், திரு சி. சுப்பிரமணியம் முதலியவர்களும், மத்திய மந்திரி எஸ். வி. ராமஸ்வாமி அவர்களும் கலந்து கொண்டார்கள். இந்தியாவிலுள்ள இதாலி தேசத் தூதர் அவர்களும் கலந்து கொண்டு இத்தொழில் முயற்சிக்கு ஆசி கூறினார். இக்கோலாகல வைபவத்துக்குக் கோவை சுதந்திரக் கட்சி அபேட்சகர் திரு ஜி. கே. சுந்தரம் அவர்கள் நட்சத்திரச் சின்னம் பதித்த பாட்ஜ் அணிந்துகொண்டு மேடைமீது அமர்ந்திருந்தது சபையோரிடையே பெருத்த மகிழ்ச்சியை உண்டாக்கியது. அனைவரும் அவருடைய நெஞ்சுறுதியையும் நேர்மையையும் இனிய பண்பையும் தைரியத்தையுமே பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தனர்.

இவ்விதம் தமிழகத்தில் தொழில்வளம் தனியார் துறையில் சிறப்பாகவும் நாட்டுக்கு லாபமாகவும் கொழிப்பதைக் கண்டு உள்ளத்தில் தனியானதோர் இன்பம் பெருக்கெடுத்தது!

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை :
பிளாஸா · பாரத்
மகாலக்ஷ்மி · லிபர்டி
மற்றும் தென்னுடெங்கும்.

பி.வி.என்
புரொடக்ஷன்ஸ்

# மாடப்புறா

தயாரிப்பு :
B. வள்ளிநாயகம்

டைரக்ஷன் :
S.A. சுப்பராமன்




....கதை வசனம்
நாராயணசாமி
....இசை
K.V. மகாதேவன்
....பாடல்
மருதகாசி
மெஜஸ்டிக்



G.H. RAO

# நந்தவனம்

## 8 - வேணுலிங்கம் வந்தான்!



சித்திரம் எழுதுகிற ஓவியர்களும், புகைப்படம் பிடிக்கும் கலைஞர்களும், சித்திரம் எழுதுவதற்கு முன்பு அல்லது புகைப்படம் எடுப்பதற்கு முன்பு, தங்களுடைய படத்துக்கான உருவங்களையும் பின்னணியையும் மனத்தில் ஒரு தடவை நிலைப்படுத்திக் கொள்வார்கள் அல்லவா? அப்படிப் பார்த்தார் வல்லாளவேலர்!

ஜமீந்தார் அனவரத புவனபதி, அவருடைய அருமை மகள் தாமரைச் செல்வி, புதிதாக அறிமுகமான இளைஞன் வில்வநாதன்—இந்த மூன்று உருவங்களையும் தம்முடைய மனக் கருவியிலே புகைப்படமாகப் பிடித்துக் கொண்டார் வல்லாளர்! அந்த மூவரும் மூன்று வித இயல்புகளோடு நின்று கொண்டிருந்த அந்தக் காட்சியானது, ஒரு மூவர்ண ஓவியமாக அவருடைய சிந்தனையிலே சுழன்று அவருடைய எதிர்காலத் திட்டங்களை உருவாக்கியது!

வழக்கத்தைவிட அன்று அவர் சீக்கிரமாகவே தமது வீட்டுக்குப் புறப்பட்டார். புதிதாக வந்து சேர்ந்த வில்வநாதன் அவருடைய உள்ளத்துக்குள்ளே புகுந்து ஏதோ ஒரு பரபரப்பை உண்டாக்கி அவருக்கு நிலை கொள்ளாதவாறு செய்து விட்டான். இந்தக் காரணத்தை அவர் வெளிப்படையாகச் சொல்லமுடியவில்லை. ஆனால் மறுநாட் காலையில் எழுந்ததும் அவர் செங்கோட்டைக்குப் போய் ரயில் ஏறவேண்டும் என்பது ஜமீந்தாரின் கட்டளை அல்லவா? வக்கீலையாவை உடனே கூட்டிக் கொண்டு வரும்படி வல்லவா உத்தரவு போட்டிருக்கிறார் ஜமீந்தார்! எனவே அந்தக் காரணத்தைச் சொல்லியே அவர் ஜமீன்மாளிகையிலிருந்து விரைவாகக் கிளம்பினார்!

வல்லாளவேலருடைய வீடு முருகபாண்டி புரம் என்ற ஒரு சிறிய கிராமத்தில் இருந்தது. சிங்கம்புத்தூரிலிருந்து ஐந்து மைல் தொலைவிலுள்ள ஒரு ஜமீன் குடியிருப்பு அது! அந்தக் கிராமத்தின் நிர்வாகப் பொறுப்பும் வல்லாளவேலரிடமே ஒப்படைக்கப்பட்டிருந்ததால், அங்கே அவருக்கு நல்ல செல்வாக்கு! தவிரவும் ஜமீந்தாருக்கு நெருங்கிய உறவினர் அவர். ஏலமலைச் சம்பந்திகளின் உறவிலிருந்து கல்யாணம் செய்து கொண்டிருக்கிறார். எனவே அந்தக் கிராமத்திலும் பக்கத்திலுள்ள சிற்றூர்

ஏலமலையும் ஒன்றாக இணையப் போவதை, அவர் கற்பனைக் கண்ணிலே பார்த்துப் பார்த்துக் குதூகலத்தோடு துள்ளி யிருக்கிறார்! அந்தக் குதூகலமும் அந்தக் கற்பனை மகிழ்ச்சிகளும் இனி என்ன ஆவது?

'பஞ்சு மூட்டைக்குப் பக்கத்திலே நெருப்பைக் கொண்டு வைத்தால் என்ன ஆகும்?' — இவ்வாறு தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார் வல்லாள வேலர். ''நிச்சயம் நெருப்பு பற்றிக் கொள்ளும். ஆனால் அப்படி நெருப்புப் பற்றும்படி நாம் விட்டு விடலாமா?'—இப்படி ஒரு கேள்வியைக் கேட்டுக் கொண்டார் அவர்! ''கூடாது! அவ்வளவுக்கு விடக்கூடாது நான்! ஏலமலை இளைய ஜமீந்தார் அசட்டுத்தனமாக ஏமாந்து போய் விடாதபடி, இப்பொழுதே அவருக்கு எச்சரிக்கை செய்ய வேண்டும். முளையிலே கிள்ளி எறியாவிட்டால் இந்தக் களை இப்படியே வளர்ந்து பயிரையே அழித்து விடும் என்பதைப் பொன்னுத்துரைக்குச் சொல்ல வேண்டும். நம்மால் ஆகிற அத்தனை ஏற்பாடுகளையும் செய்து ஜமீந்தாரின் விபரீதமான திட்டங்களைத் தடுக்க வேண்டும். வண்ணார் பேட்டை வக்கீலையாவை கூட்டிக் கொண்டு வந்து இங்கேவிட்டுவிட்டு, அடுத்தவினாடியே ஏலமலைக்குச் சென்று பொன்னுத்துரைக்கு எச்சரிக்கை கொடுக்க வேண்டும்—''

இப்படி ஏதேதோ யோசனைகள் செய்து கொண்டே உறக்கமில்லாமல் படுத்திருந்தார் வல்லாள வேலர். அப்போது தெருவிலே மிதியடி ஓசை கேட்டது! இரவு இரண்டு மணி யிருக்கும்!

முருகபாண்டிபுரம் என்ற அந்தச் சிற்றூர் நகர நாகரிகங்களுக்கு அப்பால் இருந்த ஒரு நாட்டுப்புறக் குடி யிருப்

# சோழ

களிலும் வல்லாளவேலர் என்றால் எல்லாருக்குமே கொஞ்சம் நடுக்கந்தான்! இப்படிப்பட்ட வல்லாளர் அன்று அமைதி யற்ற மனத்தோடு, கவலையும் அந்தக் கவலையிலிருந்து பிறந்த பல சூழ்ச்சிகளுமாக வீட்டுக்குத் திரும்பினார்!

இரவு சரியாகத் தூக்கம் இல்லை. ஏலமலை இளைய ஜமீந்தாரிடம் அவருக்கு இது வரை ஒரு தனியான சலுகை இருந்து வந்திருக்கிறது. எதிர் காலத்தில் சிங்கம்புத்தூர் ஜமீனும்

பானதால், கல்லை நட்டு அதற்கு மேல் கண்ணாடிக் கூண்டைப் பதித்து, அதற்குள்ளே 'மினுக்கு மினுக்கு' என்று இரவு பன்னிரண்டு மணி வரை எரிகிற சிறு மண்ணெண்ணெய் விளக்குகள் தெருவுக்கு ஒன்றாக நின்றன! அந்தச் சிற்றூரில் இருந்த வீதிகள் பத்து! அந்தப் பத்தில் வல்லாளவேலரின் தெரு விளக்குத்தான் இரவு பன்னிரண்டு மணிவரை எரியும். வேறு நாலைந்து விளக்குகள் பத்து மணி வரை எரியும். மற்ற விளக்குகள் எல்லாம் திருக் கார்த்திகை அன்று தான் எரியும். எனவே அந்தக் கிராமத்து மக்களில் யாரும் இரவு ஒன்பது மணிக்கு மேல் வெளியே வருவதில்லை! அப்படியே தப்பித் தவறி யாராவது வந்தாலும், வல்லாள வேலர்

குடியிருந்த தெருவிலே செருப்புப் போட்டுக் கொண்டு நடப்பதற்கு வேண்டிய துணிவு யாருக்கும் கிடையாது!

'மிதியடி ஓசையல்லவா கேட்கிறது!' என்று காதுகளைத் தீட்டிக் கொண்டார் வல்லாளவேலர்!

தெரு வீதியில் இங்கிருந்து அங்கே ஒரு தடவை, பிறகு அந்தக் கோடியிலிருந்து இந்தக் கோடிக்கு ஒரு தடவை, யாரோ நடப்பது போல அந்த மிதியடியின் ஓசை நன்றாகக் கேட்டது. திகைப்போடு வல்லாள வேலர் எழுந்து உட்கார்ந்து கொண்டார்.

இரவு ஒரு மணி, இரண்டு மணிக்கெல்லாம் அந்த வட்டாரங்களில் நடமாடி வந்த மிதியடி ஓசையைப் பற்றி வல்லாள வேலரும் இதற்கு முன்பு கேள்விப்பட்டிருக்கிறார். ஆனால் இப்படி இந்த முருகபாண்டிபுரத்துக்கே அந்த ஓசை படையெடுத்து வரும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை!

ஆம்; வேணுலிங்கம், கடலையாண்டி என்ற இரண்டு புகழ்பெற்ற திருடர்கள் அந்த மாவட்டத்தில் நடமாடிக் கொண்டிருந்த காலம் அது! குதிரையில் ஏறிச் சென்று கொள்ளையடிப்பது, வில்வண்டி கட்டிக் கொண்டு போய்க் கூட்டம் கூட்டமாகச் சென்று, கிராமங்களையே சூறையாடுவது போன்ற தொழில்களைச் செய்து வந்தார்கள் அந்தக் கொள்ளைக்காரர்கள்! பணக்காரர்களையும், ஜமீந்தார்களையும் பண்ணையார்களையும் கொள்ளையடித்து, ஏழை எளியவர்களுக்கு உதவி செய்து வந்ததால், இந்த இரு கொள்ளைக்காரர்களும் வரலாற்று வீரர்களைப் போல அந்த மாவட்டத்து மக்களின் அன்புக்கும் ஆர்வத்துக்கும் உரியவர்களாகி, போலீஸ்காரர்களிடம் பிடிபடாமல் உலவி வந்தார்கள்! வேணுலிங்கத்தின் குணாதிசயங்களைக் குடியானவர்கள் வானளாவப் புகழ்ந்து பேசுவார்கள். பணக்காரர்களிலும் சிலர் அவனுக்கு உடந்தையாக இருந்து வந்ததால்; வேணுலிங்கத்தின் திறமையைப்பற்றி நூற்றுக்கணக்கான கதைகள் அந்த மாவட்டத்தில் வழங்கி வந்தன! காரணமில்லாமல், நியாயமில்லாமல், எந்தப் பண்ணையார் வீட்டிலும் வேணு திருடப் போக மாட்டான் என்று அவனுக்கு ஒரு பெயர்! ஜமீந்தார்களின் வீட்டுக்குப் போகும்போது தனது திவட்டிப் பரிவாரங்களையும், குதிரைகளையும் தெருக் கோடியிலே நிறுத்தி விட்டு, வேணுலிங்கமும் கடலையாண்டியும் மட்டும் மிகுந்த மரியாதையோடு காலால் நடந்து சென்று, கதவைத் தட்டுவார்கள் என்று கிராமத்து மக்கள் மிகுந்த வியப்போடு பேசிக் கொள்ளுவார்கள்! இதெல்லாம் வல்லாளவேலரின் காதில் விழுந்திருக்கிறது!

''மிதியடி ஓசை கேட்கிறதே. ஒருவரா அல்லது இரண்டு பேரா?'' என்று கணக்குப் போட்டார் அவர்! மூளை குழம்பியது! அடுத்தகணம் கதவு தட்டும் ஓசை கேட்டது.

''எசமான்! எசமான்!''

வல்லாள வேலருக்கு இப்பொழுது நன்றாகப் புரிந்து விட்டது! அது வேணுலிங்கந்தான்!

உள் கூடத்துத் தாழ்வாரத்தை யடுத்த திண்ணையிலே படுத்திருந்த வேலைக்காரர்கள் இருவர், பதறியடித்துக் கொண்டு வீட்டுக்குள்ளே வந்தார்கள். பெண்டுகள் பிள்ளைகள் எல்லாம் கூக்குரலிடுவதற்குக் கூட மனத்திடம் இல்லாமல், கைகால்கள் பதறிக் கொண்டே, வல்லாள வேலர் படுத்திருந்த உள் அறைக்கு ஓடி வந்தார்கள்.

''வேணுலிங்கம் வந்து விட்டான்! வேணுலிங்கம்!''

இப்படிச் சொல்லும்போது வேலைக்காரர்களுக்கு உடம்பெல்லாம் 'கிடுகிடு' என்று நடுங்கியது

''எசமான்! வல்லாளவேல எசமான்! கதவைத் திறவுங்க! நான்தான் வேணுலிங்கம் வந்திருக்கேன்!''

வல்லாள வேலர் ஓசைப்படாமல் விறு விறு என்று மாடிப் படிகளிலே ஏறி, வடக்குப் புறத்து அறைக்கு வெளியே யிருந்த தட்டொட்டியிலே வந்து, சுவரில் சாய்ந்து கொண்டே, தெருவிலே பார்த்தார்! அந்தக் குறுகலான தெருவின் முனையிலே, விளக்குக் கம்பத்துக்கு அருகில், பத்துப் பதினைந்து பேர்கள் திவட்டி பிடித்துக் கொண்டு நின்றார்கள்!

''எசமான்! என்ன சத்தமே காணலையே! நம்முடைய ஆட்கள் எல்லாம் தெரு முனையிலேதான் நிக்கிறாக. நானும் கடலையாண்டியும் மட்டும்தான் இங்கே வந்திருக்கோம். கதவைத் திறவுங்க. திறந்திடுங்க!''

வல்லாள வேலர் மாடியிலிருந்து கீழே இறங்கினார். கதவு தட்டும் ஓசை 'மட மட' என்று தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

பெண்களும் குழந்தைகளும் ஒருவரை யொருவர் நெருக்கிக் கொண்டு உடம்பெல்லாம் ஆடிக் கொண்டு நின்றார்கள்!

''எசமான்! எசமான்! நான்தான் வேணுலிங்கம் வந்திருக்கேன். கதவைத் திறக்கலையே நீங்க!''

வேணுலிங்கத்தின் குரலில் ஓர் அதிகாரம் ஒலித்தது!

---

இந்த இதழில் வரும் ஒரு காட்சியைத்தான் இவ்விதழ் மூவர்ண அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் ஓவியர் வினு.

ஆனாலுமென்ன ? ஸானா முதன் முதலில்
அணிந்தபோதிருந்த அதே புதுக் கருக்கு...
அதே முறுக்கு ... அதே வர்ண எழில் !
பினிக்ஸ் வாயில் என்றால் கேட்கவும் வேண்டுமா ?

காலமெல்லாம் உழைக்கும், கலப்பற்ற, மென்மையான
வாயில்களைத் தயாரிக்கிறது பினிக்ஸ்.
வியக்கத்தக்க வகைவகையான பிரிண்டுகள்...
அழியாத வர்ணங்கள்...அருமையான அமைப்புக்கள்...
இஷ்டத்திற்குத் தேர்ந்தெடுக்கலாம். சுருங்கவும்
சுருங்காது. விலையும் சிக்கனமானது. ரூ. 2-10 லிருந்து
ரூ. 2-18 வரையில் உள்ளது. குடும்பத்திலுள்ளோர்
அனைவருக்குமே தகுந்த பினிக்ஸ் பாப்ளின்கள்
வேறு உண்டு.

# இந்த வாயில் புடவை 27 தடவைகள்

சலவை செய்யப்பட்டுள்ளது !



## பினிக்ஸ் மில்ஸ்

ஒரு ரூயா ஸ்தாபனம்.

மதுரை, சென்னை,
பெங்களூர், லக்னோ,
பூனா, கான்பூர், பம்பாய்,
செகந்திராபாத், நாகபூர்,
கோல்ஹாபூர் ஆகிய
இடங்களில் ரூயா
கடைகள் உள்ளன.

RPY-3



வல்லாள வேலருக்கு உள்ளத்தில் ஒரு பெரிய அச்சம் படர்ந்தது. ஆனாலும் இனியும் கதவைத் திறக்கா விட்டால் என்ன நேரிடும் என்பது அவருக்குத் தெரியும்.

''எல்லாரும் சமையலறைக்குப் போய் இருந்துகொள்ளுங்க!'' என்று பெண்டு பிள்ளைகளைப் பார்த்துச் சொன்னார். அடுத்த விநாடி தாமே நடந்து சென்று ஏதோ விருந்தாளிக்குக் கதவைத் திறந்து விடுவது போல, தாழ்ப்பாளைத் திறந்தார்.

''எசமான் சேவிக்கிறோம்!''

வேணுலிங்கமும், கடலையாண்டியும் உடம்பை வளைத்து மிகுந்த மரியாதையோடு வணக்கம் செலுத்தினார்கள்.

''வாருங்க வீட்டுக்குள்ளே! இப்படி இந்தத் திண்ணையிலே போய் உட்காரலாம்....!''

இவ்வாறு சொன்னான் வேணுலிங்கம், மிகுந்த உரிமையோடு!

இரண்டு கொள்ளைக்காரர்களும் முதலில் நடக்க, அவர்களுக்குப் பின்னால் வல்லாளவேலர் தம்முடைய வீட்டுக்குள் நடந்தார்! மூவரும் கூடத்தைத் தாண்டிச் சென்று திண்ணையிலே போய் உட்கார்ந்தார்கள்.

''ஒரு அரிக்கன் லாம்பு கொண்டாருங்க. இருட்டிலே முகத்தைப் பார்த்துப் பேச முடியலே!'' என்றான் வேணுலிங்கம்.

சிங்கம்புத்தூர் ஜமீந்தாருக்குக் கீழ்ப்படிகிறவர் போல, வல்லாளவேலர் வீட்டுக்குள்ளே சென்று ஓர் ஹரிக்கேன் விளக்கை எடுத்து வந்தார். தீப்பெட்டியிலிருந்து ஒரு குச்சியை எடுத்துக் கீறி அந்த விளக்கைப் பற்ற வைத்தார்!

''அந்த நெருப்புப் பெட்டியைக் கொஞ்சம் இப்படிக் கொடுங்க!'' என்று சொல்லித் தனது இடுப்பில் செருகி வைத்திருந்த பீடிக்கட்டை வெளியே எடுத்தான் கடலையாண்டி. உடனே அவனைக் கை மறித்தான் வேணுலிங்கம்.

''மாப்பிளே! என்ன நினைச்சுக்கிட்டிருக்கே இந்த இடத்தைப் பத்தி. மரியாதையே தெரியலையே உனக்கு!'' என்று சொல்லியவாறு அந்தப் பீடிக்கட்

டைச் சுடலையாண்டியினிடமிருந்து பிடுங்கித் தூர எறிந்தான் வேணுலிங்கம்.

''நம்முடைய வேலே முடிஞ்சு நாம இந்த இடத்திலேருந்து கிளம்புற வரைக்கும் மரியாதைக் குறைவா ஒரு காரியமும் செய்யக் கூடாது! தெரிஞ்சுதா!'' என்று தனது தோழனிடம் சொல்லிவிட்டு, வல்லாள வேலரை ஒரு முறை

''எசமான்! ஏன் இப்படிப் பதறணும் நீங்க? இந்த ஜமீனுக்குக் கட்டுப்பட்ட குடி மக்கள் நாங்க! அந்த மதிப்பு எந்தக் காலத்திலேயும் எங்களுக்கு நினைவிலே இருக்கும்!''

இப்படித் தீர்மானமாகச் சொன்னான் வேணுலிங்கம்! வல்லாளவேலர் தமது முகத்தில் ஒரு சாந்தமான புன்



ஏற இறங்கப் பார்த்தான் வேணுலிங்கம். ஏற்கனவே ஆடிக்கொண்டிருந்த உடம்பு இந்த மரியாதைப் பேச்சிலே இன்னும் அதிகமாக ஆட ஆரம்பித்தது!

'நம்முடைய வேலே' என்று குறிப்பிட்டானே வேணுலிங்கம்! அது என்ன வேலே?

இப்படி எண்ணியதும் வல்லாள வேலருக்கு உதடு படபடத்தது!

னகையை வரவழைத்துக் கொள்ளப் பரிதாபமாக முயன்றார்! வாய் திறந்து பேச முடியவில்லை அவருக்கு!

''மாப்பிளே! நாமதான் பேச்சை ஆரம்பிக்கணும் போல இருக்கு!'' என்று சுடலையாண்டியைப் பார்த்துச் சொன்னான் வேணு! சுடலையாண்டி பேச ஆரம்பித்தான். அவனுடைய வார்த்தைகள் ஒவ்வொன்றும் மிகவும் திருத்தமாக வந்தன.

''எசமான்! நாங்க இங்கே வந்தது இந்த வீட்டிலே கொள்ளை அடிக்கிறதுக்காக இல்லே. வேறே எந்த விதமான



தப்புத் தண்டாவும் நாங்க செய்யப் போகிறதும் இல்லே! எசமானிடத்தில் இருக்கக் கூடிய ஒரு முக்கியமான சாமானை வாங்கிப் போகிறதுக்காகத் தான் நாங்க இத்தனை பரிவாரங்களையும் கூட்டிக் கொண்டு வந்திருக்கோம்!''

இப்படிச் சொன்னான் சுடலையாண்டி. உடனே வேணுலிங்கம் கூறுவான்:

''மாப்பிளே! பரிவாரம் இரிவாரங்களைப் பத்தி யெல்லாம் ஏன் பேசணும்? நாம ஒரு சாமானை விரும்பிக் கேட்டா, அதைத் தரமாட்டேன்னு சொல்லக் கூடிய எசமானா வல்லாள வேலர் எசமான்? புத்தியில்லாம ஏதேதோ சொல்லுதியே!''

வேணுலிங்கம் இப்படி ஒரு போடு போட்டதும், வல்லாள வேலர் மறுபடியும் தமது முகத்தில் அந்தப் பரிதாபப் புன்னகையை முயற்சி செய்து பார்த்தார்!

''அதெல்லாம் சரி. எசமான் ஒண்ணுமே பேசாமல் இருந்தால் எப்படி?'' என்று கேட்டான் சுடலையாண்டி.

''மாப்பிளே! எசமானை என்ன நினைச்சே நீ? அந்தப் புன்சிரிப்பிலேயே சொல்ல வேண்டிய சம்மதத்தையெல்லாம் சொல்லிப்புட்டாகளே எசமான்! இதுக்கு மேலே வாயைத் திறந்து பேசணுமா....!''

இப்படி ஒரு மடக்கு மடக்கினான் வேணு. வல்லாள வேலர் வாய் திறந்து பேச முயன்றார். உதடுகள் கோந்து போட்டு ஒட்டியது போல் ஒட்டிக் கொண்டன. அந்த உதடுகளை மிகவும் கஷ்டப்பட்டுத் திறந்து சொல்லுவார்:

''நீங்க வந்த காரியம் என்ன, தெரியலையே எனக்கு. சொன்னால் அந்தப்படி-''

''எசமான்! வேறே ஒண்ணும் இல்லே. நம்ப வீட்டிலே இருக்கிற ரிவால்வரைக் கொஞ்சம் இரவல் கொடுத்து வாங்கணும்! அவ்வளவுதான்!''

''ரிவால்வரா! அது இப்போ இங்கே இல்லையே. சிங்கம்புத்தூர் மாளிகையிலே அல்லவா கொண்டு போய் வைத்திருக்கிறேன்!''

இப்படி வார்த்தைகளை மென்று விழுங்கிக் கொண்டே சொன்னார் வல்லாள வேலர். பொய் சொல்லிப் பழக்கமான அந்த நிபுணருக்குங்கூட இப்பொழுது பொய் சொல்லக் கஷ்டப்பட்டது!

''எசமானுக்கு ஞாபகமறதி இருந்தாலும் இருக்கலாம். ஆகையினாலே நாங்களே வீட்டுக்குள்ளே போய் அந்த அலமாரியைத் திறந்து பார்த்துவிட்டால் நல்லது! கொஞ்சம் உங்க சாவியைக் கொடுக்கலாமா?'' என்று கேட்டான் சுடலையாண்டி. மறுவினாடி அவனை ஒரு நாடகக் கோபத்தோடு முறைத்துப் பார்த்தான் வேணுலிங்கம்.

''மாப்பிளே! என்ன பேச்சு இது! நீயும் நானும் இந்த வீட்டு நடையைத் தாண்டி உள்ளே அடி எடுத்து வைக்கலாமா! மரியாதை மறந்து பேசுதியே! அதுக்கெல்லாம் அவசியம் இருக்காது! எசமான்! நீங்க உங்க ஞாபகத்தை இன்னொரு தரம் சரியாகப் பாருங்க!''

வல்லாள வேலருக்கு என்ன பதில் சொல்லுவது என்று ஓடவில்லை. அலமாரியிலுள்ள துப்பாக்கியை எடுத்து இவர்களிடம் கொடுத்து விட்டால் பிறகு கொம்பு ஒடிந்த மாடு போல் அல்லவா ஆகிவிடும் தமது நிலைமை? சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று அவருக்கு.

# இந்தியா

கவர்ச்சியான பிரயாணத்திற்கு ஏற்ற நாடு
மகிமையான புராதனச் சின்னங்கள்
தற்கால மாபெரும் பலகாரியத் திட்டங்கள்
அரிய காட்சி வேறுபாடுகள்
பழமையான நடனத் தோற்றங்கள்
மலர்கள் கொழிக்கும் நந்தவனங்கள்
எங்கு போனாலும் எவ்வளவோ அற்புதங்கள்
காண்பதற்கோ கண்கோடி வேண்டும்



உல்லாசப் பிரயாணப்பகுதி
இந்திய அரசாங்கம்

இந்திய அரசாங்க உல்லாசப் பிரயாண காரியாலயங்கள் :
பம்பாய் • கல்கத்தா • டில்லி • சென்னை • ஆக்ரா
போபால் • அவுரங்காபாத் • வாரணாசி • பெங்களூர்
கொச்சி • டார்ஜிலிங் • ஜெய்ப்பூர்

DA 61/700

''வேணு! உங்களிடம் மறைத்துப் பேசுவானேன்? துப்பாக்கி இங்கேதான் இருக்கிறது. ஆனால் உங்களிடம் எடுத்துக் கொடுத்து விட்டால், பிறகு கலெக்டருக்கு நான் என்ன பதில் சொல்லுவது? லைசென்ஸ் இல்லாமல் — ''

''லைசென்ஸா!'' என்று கேட்டுக் கொண்டே ஒரு முரட்டுச் சிரிப்புச் சிரித்தான் வேணுலிங்கம். அப்போது கடலையாண்டி சொல்லுவான்:

''எசமாங்களுக்குத்தான் லைசென்ஸ் வேணும்! எங்களுக்கெல்லாம் என்னத்துக்கு லைசென்ஸ்!''

கடலையாண்டி சிரித்தான்! வேணுலிங்கமும் சிரித்தான்! வல்லாள வேலர் சிரிக்க முயன்றார்.

''மாப்பிளே! எசமாங்க எல்லாம் சட்டத்துக்குக் கட்டுப்பட்டுச் சுடுவாங்க! லைசென்ஸ் வேணும்! நீயும் நானும் அப்படியா! அது தெரியாமல்தான் எசமான் இப்படிப் பேசுதாக!''

வல்லாள வேலர் சிரிக்கவும் முடியாமல், பேசவும் முடியாமல், வேதனையோடு மௌனமாக இருந்தார். எதிர்பாராத இந்த ஆபத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு வழி தெரியவில்லை அவருக்கு.

''எசமான்! துப்பாக்கியை எடுத்துக் கொடுங்க! நாளைக்குக் காலையிலேயே வண்ணார்பேட்டைக்குப் போய் உங்க துப்பாக்கி இருடு போயிட்டுது என்று, வக்கீலையாவிடத்திலே சொல்லிப் போடுங்க! கலெக்டர் இடத்திலே எப்படிச் சொல்லணும், என்ன செய்யணும் என்கிற கவலை யெல்லாம் வக்கீலையாவுக்கு! உங்களுக்கும் இல்லை, எங்களுக்கும் இல்லை!''

கடலையாண்டி இப்படி முடித்தான் பேச்சை. வேணுலிங்கம் வல்லாள வேலரைப் பார்த்துச் சொன்னான்:

''எசமானுடைய துப்பாக்கி எங்களுக்கு இன்னும் கொஞ்ச நாளைக்குத் தேவைப்படுகிறது. பிறகு திரும்பக் கொண்டு கொடுத்திடுவம். யோசியாதீக....!''

''எழுந்திருங்க! எங்களுக்கு வேலை இருக்கு. ஓசைப்படாம நாங்க இங்கேயிருந்து புறப்படுகிறதுக்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்யுங்க!''

இவ்வாறு துரிதப்படுத்தினான் கடலையாண்டி. வேணுலிங்கம் திண்ணையிலிருந்து எழுந்து நின்றான்.

''கட்டாயம் வேணுமா, துப்பாக்கி?'' என்று கேட்டார் வல்லாள வேலர்.

''எசமான்! முன்பின் யோசியாமல் நாங்க ஒரு காரியத்திலே இறங்குவோமா? அத்தோட முன் வச்ச காலைப் பின் வைப்போமா? எழுந்திருங்க.. துப்பாக்கியை எடுத்துக் கொடுங்க. நேரமாகுது நம்முடைய பரிவாரங்கள் இங்கே வந்துடப் போறாங்க!''

கடலையாண்டி இப்படிச் சொன்னதும், வேணுலிங்கம் கூறுவான்:

''மாப்பிளே! எசமானைப் பயப்படுத்தாதே! துப்பாக்கியை எடுத்துக் கொடுக்கப் போறாக. அதிகமாகப் பேசாதே!''

வல்லாள வேலர் எழுந்தார். வீட்டுக்குள்ளே நடந்து சென்றார். அலமாரியைத் திறந்தார். துப்பாக்கியை எடுத்துக் கொண்டு திண்ணைக்கு வந்தார்.

''எசமான்! துப்பாக்கியை எங்க கையிலே கொடுத்து விட்டோமே என்று



கவலைப்படாதீக. உங்க கையிலே இருக்கிற வரைக்கும் அது எப்படியிருந்ததோ, தெரியாது. எங்க கைக்கு வந்த பிறகு, அது நியாயம் அநியாயத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் நடக்கும்! ''

இப்படி உறுதி பேசினான் கடலையாண்டி.

''மாப்பிளே! துப்பாக்கியை வாங்கிக்க. பேச்சைக் குறைச்சுக்க!'' என்றான் வேணுலிங்கம்.

வல்லாள வேலரின் கையிலிருந்து அந்த ரிவால்வரை வாங்கிக் கொண்டான் கடலையாண்டி.

''எசமான்! நாங்க இங்கே வந்ததும், போனதும் யாருக்குமே தெரியக் கூடாது. ரொம்பக் கண்டிப்பான பேச்சா சொல்லிப் போட்டேன்! மற்றப்

> சுதந்திரத்தை இழக்காமலேயே முன்னேற்றம் அடையத்தான் சுதந்திரக் கட்சி போராடுகிறது. சர்க்கார் சர்வாதிபத்தியத்தை அடிப்படையாகக் கொண்டு உற்பத்தியைப் பெருக்கப் போடும் திட்டங்கள் ஏகாதிபத்தியத்தில்தான் முடியும். ஜனநாயகம் என்பதன் புறச் சின்னங்களைப் படாடோபமாகத் தரித்திருந்தாலும் இம்முறை சர்வாதிகாரமேயாகும்.
>
> — ராஜாஜி

படி நாங்களும் நீங்க கொடுத்திருக்கிற இந்தத் துப்பாக்கியும், ஜமீனுக்குக் கட்டுப்பட்டவங்கதான்!''

இவ்வாறு சொல்லி விட்டுப் புறப்பட்டார்கள் இரண்டு கொள்ளைக்காரர்களும்.

''கதவைப் பூட்டிக்கிடுங்க!'' என்றான் கடலையாண்டி.

''ஆமா! எசமான்! இந்தப் பக்கத்திலே இப்போ கொள்ளைக்காரனுக நடமாட்டம் அதிகமா இருக்குன்னு ஊரெல்லாம் பேச்சா இருக்கு!'' இப்படிச் சொல்லிச் சிரித்துக் கொண்டே வெளியே வந்தான் வேணுலிங்கம்.

''எசமான்! சேவிக்கிறோம்!''

இருவரும் நடந்தார்கள். மிதியடி ஓசை கம்பீரமாகக் கேட்டது!

வல்லாளவேலர் கதவைத் தாளிட்டு விட்டு மாடிக்குப் போய் நின்று பார்த்தார். தீவட்டிகளின் வெளிச்சம் மறைகிற வரை பார்த்துக் கொண்டே நின்றார். பிறகு கீழே வந்தார்.

இதுவரை 'கப்சிப்' என்றிருந்த பெண்டு பிள்ளைகள் இப்பொழுது கூக்குரலிட ஆரம்பித்தார்கள்.

''மூச்சுச் சத்தம் கேட்கக் கூடாது! தெரிஞ்சுதா!'' என்று, இதுவரை அடக்கி வைத்திருந்த கோபத்தையெல்லாம் தம் வீட்டுப் பெண்டுகளிடம் கொட்டினார் வல்லாள வேலர்!

'காலையில் எழுந்ததும் செங்கோட்டைக்குப் போக வேண்டும் என்று உத்தரவு! இரவிலோ இப்படி ஒரு விபரீதமான நிகழ்ச்சி! துப்பாக்கி போய் விட்டது! இதைப் பற்றிக் கலெக்டருக்குத் தகவல் கொடுக்க வேண்டும்! ஆனால் வேணுலிங்கமும், கடலையாண்டியும் இங்கே வந்து போனார்கள் என்ற செய்தியை வெளியே சொல்லிவிடக் கூடாதாமே!'

இத்தனை குழப்பங்களும் மனத்திலே குமைந்தன. எங்கோ ஒரு மூலையில் நாடியெல்லாம் ஒடுங்கிப் போய்க் கிடந்த தமது வேலைக்காரர்களைப் பக்கத்திலே கூப்பிட்டார் வல்லாள வேலர்.

''ஏலே! முட்டாப் பயல்களே! தெருவிலே இத்தனை தீவட்டி எரிஞ்சிருக்கு! முன்னாலேயே வந்து என்னிடத்தில் ஒரு வார்த்தை சொன்னா என்னலே!'' என்று ஓர் அதட்டு அதட்டினார்.

கையும் காலும் 'வெடவெட' என்று நடுங்கி நின்றார்கள் அந்த வேலைக்காரர்கள்; அவர்களிடம் மதிப்பை விட்டுக் கொடுக்காமல் மேலே பேச ஆரம்பித்தார் வல்லாளவேலர்.

''காலையிலே முதல் வேலை என்ன தெரியுமாவுலே? நேரே திருநெல்வேலி வண்டி! நேரே வண்ணார் பேட்டை! நேரே வக்கீலையா! அதுக்குப் பிறகு தான் மற்ற வேலை!''

இப்படிச் சொல்லி விட்டு விட்டுக் குள்ளே சென்றார். அழுத கண்ணும், பதறிய பார்வையுமாக உடல் துடிதுடித்து நின்ற மனைவியிடம் வந்தார்.

''அட பைத்தியமே! இதுக்காகவா இத்தனை பயம் பயப்படுவாக! திருட்டுப் பயலுக்கு மேலே திருட்டுப் பயலாச்சே நான்! அவனுக கொண்டு போனது நம்முடைய துப்பாக்கியா? இல்லே! நம்ப துப்பாக்கி அலமாரியிலே பத்திரமா இருக்கு. இந்தா பாரு!''

இவ்வாறு சொல்லி அலமாரியைத் திறந்தார் வல்லாள வேலர். அதிலிருந்த இன்னொரு துப்பாக்கியை வெளியே எடுத்தார்.

''இதுவரையிலே இந்தத் துப்பாக்கி வாயை மூடி மௌனமாத்தான் இருந்துது! ஒரு கொக்கைக் கூடச் சுட்டதில்லே. இனிமேல்தான் இதுக்குவேலே!''

துப்பாக்கியை எடுத்து மனைவியிடம் காண்பித்து விட்டு, அதை அலமாரியில் வைத்தார். வைக்கும் போதே சிங்கம்புத்தூர் மாளிகையில் கண்ட அந்த மூவரை உயிர் ஓவியக் காட்சி அவருடைய சிந்தனையிலே சுழன்றது. தீவட்டிகளும், கொள்ளைக்காரர்களும், வேணுலிங்கத்தின் பேச்சும், கடலையாண்டியின் சிரிப்பும் எல்லாம் மறைந்து விட்டன! ஜமீந்தாரும், அவருடைய மகளும் வில்வநாதனும் கண்முன்னே நின்றார்கள். மறுவினாடி, அந்த நினைவுப் பாதையிலே ஏலமலை இளைய ஜமீந்தார் குதிரைமீது பறந்து கொண்டு வந்தார். சென்ற ஆண்டில் நடைபெற்ற செண்பகநாயகி கோவிற் திருவிழாவின்போது, பொன்னுத் துரையிடம் அவனுடைய திருமணத்தைப் பற்றித் தாம் செய்து கொடுத்த வாக்குறுதியும், அதற்கு அவன் சொன்ன மறுமொழியும், இப்பொழுது வல்லாள வேலரின் நினைவிலே வட்டம் சுற்றின! துப்பாக்கியைப் பார்த்து ஒரு புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டார்! (தொடரும்)




ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

**சாம்பார் - ரசம்** (2 தனி பவுடர்கள்)

சக்கரம்
பிராண்ட்

**ஊறுகாய்கள்**

இனிப்பு - சப்பு - காரம்
(3 ருசிகளில்) 14 ரகங்கள்




ஸ்ரீ கணேஷ்ராம் & கோ., (போன்: 23665) 48, தம்புசெட்டித் தெரு, சென்னை-1

777 ஊதுபத்திகள் பூஜைக்கும் விசேஷ காலங்களுக்கும் உகந்தவை

---




எப்பொழுதும்
எவ்விடத்திலும் நீங்கள்
விரும்பும்பொழுது வேண்டிய
அளவு தங்கு தடை இல்லாத
தண்ணீர் சப்ளையை ஓர்
மையர்ஸ் தானே இயங்கும்
பம்பு மூலம் பெறலாம்.
அது மையர்ஸ் பம்புதானா என
நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்,
ஏனெனில் மையர்ஸின்
விற்பனைக்குப் பின்
அளிக்கப்படும் சேவை
முன்னணியில் இருக்கிறது.

**MYERS**
AUTOMATIC
**ELECTRIC PUMPS**

வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் (பிரைவேட்) லிட்.
330, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

---

# KTR

K.T.R.

**கோபுர மார்க் பன்னீர்**
**சந்தனாதித் தைலம்**
**பொன்னாங்கண்ணித் தைலம்**
ஊதுபத்திகள்-ஊறுகாய்கள்



சென்னை நகர பூரண விநியோகஸ்தர்கள்: ஸ்ரீ ரகுநாத் ஏஜன்ஸிஸ்
38/2, அருண்டேல் தெரு மயிலாப்பூர் மதராஸ்-4



# சங்கமம்

கொட்டும் மழையில், நடுக்கும் குளிரில் அந்தச் சத்திரத்துத் திண்ணையில் அமர்ந்து, சாசுவதமில்லாத உயிரை இழுத்துப் பிடித்துக் கொண்டு 'இந்த உலகில் எது சாசுவதம்?' என்று ஆராய்ந்து கொண்டிருந்தான் பூச்சி.

'தன் வாழ்வு இந்த உலகில் சாசுவதமில்லை; தன் உயிர் இந்த உலகில் சாசுவதமில்லை; தான் இனி யாருக்காக வாழ வேண்டும்' என்ற எண்ணமும் சாசுவதமில்லை.

பூச்சிக்கு எதுவும் சாசுவதமில்லை!

சாசுவதமில்லாத வாழ்வுக்கு, சாசுவதமில்லாத இந்த உலகில், சாசுவதமாக வாழும் அவனின் கட்டளைப்படி வாழ்ந்துதான் தீர வேண்டும். அதுதான் விதி...மனித உயிருக்கு, மனித வர்க்கத்தை ஆக்கி, ஆட்டிப் படைக்கின்ற ஆண்டவன் விதித்துள்ள தண்டனை!

பூச்சிக்கு எதுவும் சாசுவதமில்லை! ஆனால் சத்திரத்துத் திண்ணையில் இருபது ஆண்டு காலம் வாழ்ந்த வாழ்க்கை இப்போது அவனுக்குச் சாசுவதமாகப்பட்டது.

தன்னை ஒண்டிக்கட்டையாய்ப் பாவித்துக் கொண்டு, திருத்தணி மலைப் படிகளில் கை ஏந்திப் பிச்சையெடுத்து, தன் வயிற்றைக் கழுவிக் கொண்டு 'உயிரை-எப்போது விடுவோம்' என்று ஏக்கப் பெருமூச்சு விடும் சலிப்பில் சாசுவதம் இருப்பதாக உணர்ந்தான்.

சாசுவதத்தைப் பற்றி ஆராய்ந்தவனின் உடல் குளிரால் நடுங்கியது. மழையின் சாரல் திண்ணையையும் ஆக்கிரமித்தது. கிழிந்த கோணிப் படுதாவை இழுத்துக் கட்டிச் சாரலைத் தடுத்தான். உடல் நடுக்கம் இன்னும் அடங்கவில்லை.

'இந்த உலகில் எது சாசுவதமாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் தான் இருக்கும் வரை தனக்குப் பீடி சாசுவதம், தன் நோய் சாசுவதம்....' என்று எண்ணியபடி அடுத்த வேளைக்கு ஆகுமென்று அணைத்துப் போற்றி வைத்திருந்த பீடியை எடுத்து வாயில் செருகியபடி தீப்பெட்டியைத் தேடினான்.

தீப்பெட்டி இல்லை.

தீப்பெட்டியைப் போலத்தான் இந்த உலக வாழ்வும். தீக்குச்சி இருக்கும் வரைதான் தீப்பெட்டியை வைத்திருக்கிறோம். தீக்குச்சி தீர்ந்த பிறகு தீப்பெட்டியை வீதியில் வீசியெறிகிறோம். தீப்பெட்டியும் சாசுவதமில்லை, தீக்குச்சியும் சாசுவதமில்லை.

வேதாந்தப் பூச்சிக்கு வேண்டியது, இப்பொழுது தீப்பெட்டி; அல்லது பீடித்துண்டு பற்றவைக்க நெருப்பு.

பீடியைப் புகைத்தால்தான் இந்தக் குளிர் நடுக்கம் தீரும் போல் இருக்கிறது!.. பீடை, நெருப்பு இல்லையே!

கோணிப் படுதாவை நீக்கி, நீர்க் கோழியைப் போல் தலையை மட்டும் வெளியே நீட்டிப் பார்த்தான் பூச்சி.

'அப்பா! மழை என்னமா பெய்யறது? ஐப்பசி மாதத்து அடைமழைன்னு சொல்றது சரிதான்! நாள் முழுதும் மழை! நிற்கலையே சனியன்!.....'

மண்ணைக் குளிர்வித்து, மண்ணோடு மண்ணாகப் போகும் மன்னுயிரை வாழ்விக்கும் மழையை, தன் வயிற்றில் இன்று மண்ணை வாரிப் போட்டு விட்டதற்காகச் சபித்தான்.- வழக்கமாக யாசகக் கடையை விரிக்கும் வியாபாரத்துக்குக் குந்தகமாக இந்த மழை வந்து தொலைத்தது. இன்று அவன் 'லங்கணம்' தான் போட்டாக வேண்டும்!

பூச்சி மழையைச் சபிக்காமல் வேறு என்ன செய்வான்? மழையை வாழ்த்துவானா?

அவன் சாபம் இந்த மழையை என்ன செய்யும்? அவனுக்கு இப்போது பீடிக்கு நெருப்பளித்து விட்டால் மழைக்குச் சாபவிமோசனம் கிடைத்துவிடும். நெருப்புத்தான் கிடைக்கவில்லையே!

'அதோ, பத்தடி தூரத்தில் திண்ணையின் மேலே ஏதோ ஓர் உருவம் படுத்திருக்கிறதுபோல் தோன்றுகிறதே..... வெளியிலும் வெளிச்சமில்லையே! உருவமும் சரியாகத் தெரியவில்லை. அந்த உருவத்தையே எழுப்பித் தீப்பெட்டி கேட்கலாமா?'

பூச்சிக்கு இம்மாதிரி ஒரு நினைப்பு எழுந்தது. அந்த உருவத்தை உசுப்பினான்.

''யாரது?''

''..................''

''யாரது? படுத்திருக்கிறவங்களைத்தான் கேட்கிறேன். யாரது?''

குரல் வந்த வழியே திரும்பிப் படுத்து, பயத்தால் நடுங்கி அலறி, துள்ளி, எழுந்து, உட்கார்ந்தது அந்த உருவம்.

''என்னையா?.......'' உடல் நடுக்கம் குரலுக்கு மாறியது.

''அட, கடவுளே! நீ பொம்பளையா?.... யாரோ ஆம்பிளைதான் படுத்திருக்கிறதாக நினைச்சுக் கூப்பிட்டேன். உங்கிட்டே எங்கே தீப்பெட்டி இருக்கப் போவுது? அட கருமமே! இந்த மழையாலே இரவுன்னும், பகலுன்னும் தான் தெரிஞ்சுக்க முடியல்லேன்னு, எனக்கு ஆம்பிளை, பொம்பிளைன்னுகூடப் புரிஞ்சுக்க முடியலையே! கண் கோளாறு? காலக்

கோணாரு?..... பாவம்! உன் தூக்கத்தை வேறு கலைச்சுட்டேன்.''

''தூக்கமில்லே...தூக்கமும் வரலே.''

''ஏன்? கொசு உபத்திரவம்கூட இல்லேயே....மூட்டைப் பூச்சி இருக்கும். அது தான் தொல்லே....குளிர் வேறே....எவன் மழையில்லேன்னு அழுதான்னு இப்படி செய்யுதோ, தெரியலேயே! ஆமா, நீ எந்த ஊரு?''

''அரக்கோணம்!''

''அட, பக்கத்து ஊரு. திருத்தணிக்குப் பிரார்த்தனையா?''

''இல்லே!''

''தல யாத்திரை போறயா?''



பா. தண்டபாணி

''இல்லே.....''

'இந்த ஆனைவிட மூட்டைப் பூச்சி தேவலாம்போல இருக்கே?' அவன் இம்மாதிரி நினைப்பதற்குள், ''புள்ளைத் தவற விட்டுட்டியா? அல்லது யாரையாச்சும் தேடிக்கிட்டு வந்திருக்கயா?'' என்று வியப்புடன் கேட்டான் பூச்சி.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. வீட்டை விட்டு ஓடியாந்துட்டேன்.'' நெருப்பை மிதித்தவன் மாதிரி திடுக்கிட்டு அவளை ஒரு முறை நோக்கினான் பூச்சி.

''ஏன் ஓடியாறணும்.... இங்கே யாராச்சும் சொந்தக்காரங்க இருக்காங்களா?''

''ஊஹூம்...ம்...இல்லே.....''

''நீ எந்தத் தைரியத்திலே ஓடியாந்துட்டே? இங்கே எப்படிப் புழைப்பே.....''

''இரந்து குடிச்சுக்க வேண்டியதுதான். அந்தத்

தைரியத்திலே தான் வந்துட்டேன்'' என்று சொன்னாள் அவள்.

''அப்போ. நம்ம சாதி?... காலித் தீப்பெட்டி!''

''நாங்க, கவரை....நாயுடு ஜாதி...நீ...!''

''நானும், கவரை நாயுடு ஜாதிதான். ஆனால் இப்போ நான் பிச்சைக்கார ஜாதி. ஆமா அம்மா, அப்பா, சொந்தக்காரங்க யாரு மில்லையா?''

''எங்கப்பாரு எனக்கு அந்த வயசப்பவே யாரோடவோ ஓடிப் போயிட்டாராம். ... அவரை எனக்குத் தெரியாது. எங்கம்மா செத்து. இந்தத் தை வந்தா ஒரு வருஷமாவப் போவுது. சொந்தக்காரங்க இருக்காங்க. அவுங்க என்னைக் கவனிக்கிறதில்லே....''

''ஐயோ பாவம்! உன்புருசன் இருக்கானா?''

''இருக்கானே, சுமைதாங்கிக் கல்லாட்டம்! அவனுக்கு என்னைப் பிடிக்கலையாம். வேறு கல்யாணம் பண்ணிக்கப்போறானாம். எவ அவனோட வாழ்ந்திடப் போறா?....''

''உன் அத்தை இல்லையா?....''

''இருக்காளே. அவ கொடுமை தாங்காமல் தான் வந்துட்டேன். பீடை தொலைஞ்சதுன்னு சந்தோஷப்படுவா. மரம் வைச்சவன் தண்ணி ஊத்தாம போயிட மாட்டான். முருகனை நம்பி வந்துட்டேன்...''

''பாவம்! கவலைப்படாதே! இந்த ஊரிலே எப்படியாவது பிழைச்சுக்கலாம். எனக்கு ஒரு உதவி செய்வியா?''

''உதவியா? என்ன உதவி?''

''ஒரு சின்ன வேலை செய்யணும்.''

''என்ன வேலை? சொல்லு...செய்யறேன்.''

''அதோ அந்த முக்குக் கடைக்குப் போய் ஒரு தீப்பெட்டி வாங்கியாரணும்!''

''ஏன் நீ போவ மாட்டியா? நொண்டியா? உனக்குக் கண் தெரியாதா?''

''நான் நொண்டியு மில்லே, குருடனு மில்லே. இந்தக் குளிரிலே வெளியே போக முடியலே. அதான் உன்னைப் போய் வாங்கி வரச் சொல்றேன்.''

''உனக்குக் கண் தெரியுமா?....''

''ஏன்? உனக்குச் சந்தேகமா இருக்கா? என் உடம்புதான் கெட்டுக் குட்டிச் சுவராப் போச்சே தவிர, என் கண் ரெண்டும் நல்லாத் தான் இருக்கு. நீயேதான் என்னைப் பாரேன்.''

''நீ எங்கே இருக்கேன்னு தெரியலே....''

''இந்தக் கோணிப் படுதா மறைக்கிறாப் போல இருக்கு. இப்ப பாரு. படுதாவைத் தூக்கிட்டேன்.''

''தெரியலியே?.....''

''மானம் மந்தாரம் போட்டிருக்கிறதாலே நிலா வெளிச்சமும் இல்லே. வெளிச்சத்துக்கு வரட்டுமா...இப்பா பாரு...''

''தெரியலே?.....''

''உனக்கு ஒண்ணும் தெரியலையா? நான் கூடத் தெரியலையா?...''

''எதுவும் தெரியலே! நீகூடத் தெரியலே! எனக்குத் தெரியாது...''

''எது தெரியாது? கண் தெரியாதா?''

''ஆமாம்....''

''என்ன, ஆமாம். அப்போ நீ குருடு! கண்ணு தெரியாத பிறவிக் குருடா?''

''ஆமாம்....''

''எல்லாத்துக்கும் 'ஆமா'மா.... நீ முதல்லியே சொல்லி யிருக்கப்படாது...?''

''என் வாயாலே என்னையே நான் குருடின்னு சொல்றதுன்னு எனக்கு வருத்தமா இருக்குது....''

''அட கடவுளே! நீ எப்படித் திருத்தணிக்கு வந்தே..?''

''வழியைக் கேட்டுக்கிட்டு வந்தேன். 'நேரே போ'ன்னு சொன்னாங்க...மலையிலேயே நடந்துக்கிட்டு வந்தேன். இந்த இடத்திலே 'இது எந்த ஊருன்னு' கேட்டேன்.... 'திருத்தணி'ன்னு சொன்னாங்க. 'இந்தத் திண்ணையிலே இருந்துக்கலா'முன்னு சொன்னாங்க. இது யார் வூட்டுத் திண்ணையோ?'' என்று கேட்டாள்.

''பனப்பாக்கம் சாந்தா ராமலிங்க முதலியார் சத்திரத்துத் திண்ணை இது. இங்கேயே நீ இருந்துக்கலாம். ஏதாவது சாப்பிட்டியா?''

''ஒண்ணுமில்லே....''

''நான் 'பங்க்' கடை வரையில் போயிட்டு வரேன்....''

சிறிது நேரம் கழித்துத் திரும்பியவன், ''என்ன? தூங்கிட்டியா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

''இல்லே'' படுத்திருந்தவள் எழுந்து உட்கார்ந்தாள்.

''இந்தா 'பன்னு' துன்னு....''

இரண்டு 'பன்' அவள் கைக்கு மாறின. அவள் கையைத் தொட்டதினால் ஏற்பட்ட இனம் புரியாத உடல் புல்லரிப்பைப் பூச்சியால் விவரிக்க முடியவில்லை. விவரம் புரியாத ஒருவித உணர்வு அவன் மனத்துக்குள் எழுந்து விசுவ ரூபம் எடுப்பதை அவனால் உணராமல் இருக்க முடியவில்லை.

உடலுக்கு வயசாகலாம். ஆனால் உணர்ச்சிக்கு வயசாக வேண்டுமென்பதில்லையே!.... பூச்சிக்கு அந்த உணர்வு கூடாதா?

பன்னைத் தின்று முடித்தாள் அவள்.

''உன் பேரு என்ன?''

ஏதாவது அவளிடம் பேச வேண்டும் போல இருந்தது பூச்சிக்கு. எனவேதான் பேச்சை ஆரம்பித்தான்.

''கறுப்பாப் பிறந்தேனாம். அதனாலே 'கறுப்பி'ன்னு கூப்பிடுவாங்க....''

''அப்படியா? நீ எதுக்கும் கவலைப் படாதே. நான் உன்னைப் பார்த்துக்கிறேன்.''

''இந்த உலகத்திலே யார் யாரைப் பார்த்துக் கொள்ள முடியப் போவுது? ஆனா ஒண்ணு நான் எப்பவும் போலக் கறுப்பியாவே வாழணும்னு நினைக்கிறேன். கறுப்பியாவே வாழவும் செய்வேன்: உலகத்திலே எல்லா நிறத்தையும் மாத்தலாமாம். ஆனால் இக் கறுப்பு நிறத்தை மட்டும்தான் மாத்த முடியாதாம். அது போல என் மனசிலே உள்ள சங்கல்பத்தை யாரும் அசைக்க முடியாது. தாலி கட்டினவன் விலக்கி வைச்சாலும், நான் அவனை விட்டு விட்டு விலகி வாழ்ந்தாலும், தாலியை விட்டு விலகி வாழக் கூடாது. இந்த ஜன்மத்திலே அவன்கிட்ட தாலி கட்டிக்கிட்டு, இந்த ஜன்மத்திலேயே அவனுக்குத் துரோகம் செய்யக் கூடாது. துரோகம் செய்தா தாலி கட்டிக்கிட்டு வாழறதாலே என்ன அர்த்தம்? தாலி இருப்பதற்குத்தான் என்ன அர்த்தம்? எங்க அப்பா, அம்மாவை விட்டு ஓடிப் போய் விட்ட பிறகு, எங்க அம்மா தாலியை நம்பித் தான் வாழ்ந்தாள்; தாலிக்குக் கடைசி வரை துரோகம் பண்ணாம வாழ்ந்தாள்; மஞ்சளும்

குங்குமமுமாய் போய்ச் சேர்ந்தான்! அதுமாதிரியா நானும் தாலிக்குத் துரோகம் பண்ணும போய்விடணும். போறதுக்கு முன்னே எங்கப்பா கிடைக்கணும்; அவர் ஆசிர்வாதம் பெறணும்; சாவணும். அதுதான் என் ஆசை. அந்த ஆசைக்குப் பிறகு கடலிலே சங்கமமாகுமாமே ஆறு. அதைப் போல இந்த ஊர் முருகனிடத்திலே சங்கமமாயிடப் போறேன். எங்கப்பாவைத் தெரியுமா?....''

எதையும் அறியாத பெண்தான். வெறியை அறியாதவளாக, அறியாமல் பேசுகின்றாள் என்று சொல்லிவிட முடியாது. தன்னையும் தன்கற்பையும் காத்துக் கொள்ள முடியும் என்று சொல்லாமல் சொல்லிவிட்டாள் அல்லவா? கறுப்பியின் பேச்சைக் கேட்ட பின் பூச்சி தன் மனத்தில் உள்ள வெறி மறைந்து, பாச உணர்வின் நிழலாட்டம் போட்டதை உணர்ந்தான். ஆயினும் விசுவரூபமெடுத்துள்ள அவன் வெறி உடனே மறையவில்லை; அந்த வெறி அடங்குவதும் சிரமமாகத்தான் இருந்தது. தனிமைதான் காரணம்!

''ஆமாம்; உங்கப்பன் பேரு என்ன?''

''பூபதி நாயுடு. 'பூச்சி'ன்னு செல்லமாக் கூப்பிடுவாங்களாம்...''

தலையில் இடி விழுந்தது. ஆயிரம் சம்மட்டிகள் சேர்ந்து தன் இதயத்தைப் பிளப்பது போல் இருந்தது. நிலம் இருகூறாகப் பிளந்து தன்னையே விழுங்குவது போல் இருந்தது. ஆயிரமாயிரம் தேள்கள் தன் உணர்வின் நரம்பைக் கொட்டி மரத்து விட்டது போல் இருந்தது. விசுவரூபமெடுத்த வெறி எங்கோ தலை தெரியாமல் ஓடி மறைந்தது. தன்னைத் தன் நிலைக்குக் கொண்டு வரத் திணறித் திண்டாடினான் பூச்சி!

''பூச்சியா? .....உன் அப்பன் பூச்சியா?'' ஆச்சரியத்துடன் கேட்டான் பூச்சி.

''ஆமாம். தெரியுமா?'' என்று ஆவலோடு கேட்டாள் கறுப்பி.

''எனக்குத் தெரியும்....''

''இந்த ஊரிலேயா இருக்காரு!''

''ஆமாம்....''

''அவரை எனக்குச் சொல்லிவைக்கிறயா?''

''ஆவட்டும். கண்ணிருந்தும் கபோதியாய் வாழுற உலகமாச்சே இது! அவன் உன்னைத் தன் மகள்னு எப்படித் தெரிஞ்சுக்குவான்... நீதான் அவன் 'அப்பன்' என்று எப்படிப் புரிஞ்சுக்குவே?''

''என் அம்மா பெயரை அவரு வலது கையிலே பச்சைக்குத்திக்கிட்டு இருப்பாராம். அஞ்சலைன்னு இருக்குமாம். அதைச்சொன்னு அவரும் என்னைத் தெரிஞ்சுக்குவாரு; நானும் அவரைப்புரிஞ்சுக்குவேன். அவரோடு என்னைச் சேர்த்து விட்டுடு. உனக்குக் கோடிப் புண்ணியம் உண்டு....''



கூட்டுப்பண்ணையென்று
குடிகெடுக்கும் கட்சிக்கு
ஓட்டுப் போடுவோமோ –
கையில் ஓட்டையேந்துவோமோ

பூச்சிக்கு இப்போது எல்லாம் தெரிந்தது; எல்லாம் புரிந்தது. பச்சைகுத்தியிருந்த கையை விளக்கு வெளிச்சத்தில் நீட்டிப் பார்த்து விம்மினான் அவன்.

'அஞ்சலை! நீ புண்ணியவதி. மஞ்சளும் குங்குமமுமாகப் போய்ச்சேர்ந்துட்டே. உனக்குச் செய்த துரோகத்துக்கு எனக்குள்ள இந்த ஒரு வியாதி போதும். நம் மக கறுப்பின்னு நினைக்காமே தடுமாறிட்டேன். இந்தப் பாசத்துக்கு என்ன தண்டனை கிடைக்குமோ?.... அவ என் மகள்தான். எனக்குத் தெரியாது. 'நான்தான் அப்பன்'னு அவள் புரிஞ்சுக்க வேணுமே! நான்தான் அநாதையாய் அலையறேன். என் மகளுமா அலையணும்? பிச்சை யெடுத்தா என் மகளைக் காப்பாத்தணும்? இந்த நிலையிலே நான்தான் 'அப்பன்'னு — சொன்னாலும் அவ என்னை நம்ப மாட்டா. பொழுது விடிஞ்சா அவளைச் சரிக்கட்டலாம்'. இவ்வாறு தனக்குத்தானே விம்மிக் கொண்டிருந்தான். துக்க மேலீட்டால் நெஞ்சு வலித்தது. நெஞ்சை ஒரு கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டான்.

''என்ன தூங்கிட்டியா?'' என்று கறுப்பி அவனை உசுப்பினாள்.

''இல்லே. நான்தான் உன் அப்பன்னு சொன்னா நம்புவியா?'' என்று பாசத்தோடு குரலில் ஏக்கம் தேங்கக் கேட்டான் பூச்சி.

''அது முடியுமா?''

''நீ என் மகள்னு சொல்றேன்.''

''நீ சொன்னா மட்டும் போதுமா, நான் நம்ப வேண்டாமா?...எங்கப்பாவா இருந்தா என்னைப் பார்த்துக்கிறேன்னு சொல்லுவாரா? உன் பேச்சுக்குப் பொருள் எனக்குத் தெரியாதுன்னு நினைக்காதே!''

தலையிலே ஓங்கி அடித்துக் கொண்டான், பூச்சி! 'கறுப்பிக்குக் கண் தெரியாவிட்டாலும், அறிவு தடுமாறலே! பார்த்துக்கிறேன்னு சொன்ன சொல்லே என்ன நாகக்கா குத்திக் காட்டுது பார்த்தியா? அவளைப் பெத்த கடன், பெத்தவங்கதானே காப்பாத்தணும்! அப்பா, மகளைக் காப்பாத்தக் கூடாதா? காப்பாத்தலாம். காப்பாத்தணும். மகள்னு நினைச்சுக் காப்பாத்தணும். அப்படி நினைச்சேனு? அந்த நினைப்புத்தான் என்னைக் கொல்லுது. அவள் அப்பன் நான் இல்லேன்னு நினைக்கிறது சரிதான். நான் பாவி!'

மறுமுறை ஓங்கித் தலைமேல் அடித்துக் கொண்டான்.

''என்ன பேசாமே இருந்துட்டே?'' மீண்டும் அவள்தான் பேசினாள்.

பீடியைப் பற்ற வைத்து, வாயில் செருகி, புகையை இழுத்து வெளியே விட்டான்.

''பொழுது விடியலேயென்னு யோசிக்கிறேன். வேறு ஒன்றுமில்லே'' என்று எதுவும் பிடிபடாமல் பேசினான் பூச்சி.

> மக்கள் தங்கள் சுதந்திரத்தைக் கொண்டு மனம் போனபடி நடக்க இடமளிக்காமல் கண்காணிக்கும் பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது. ஆனால் இந்த அரசாங்கத்தின் அதிகாரமும், ஆணையும் மக்களின் ஜீவாதார உரிமைகளுக்கு அடங்கியே இருக்க வேண்டும். —ராஜாஜி

"எங்கப்பாகிட்டே என்னைக் கூட்டிக்கிட்டுப் போவயா?"

"ஆகட்டும்."

"மணி என்னு?"

"ரேணிகுண்டா பாசஞ்சர் வரலே. வந்தா பொழுது விடிஞ்சிடும்."

'பொழுது விடிந்தால் அப்பாவைத் தெரிந்து கொள்ளலாம்' என்ற ஆசையோடு கருப்பி கண்ணை மூடினாள். 'பொழுது விடிந்தால் அவனிடம் தான் அப்பன்னு. எப்படி நிரூபிப்பது' என்ற குழப்பத்தோடு பூச்சியும் தூங்கி விட்டான்...

**பொ**ழுது விடிந்தது...!

"இதுதான் சரவணப் பொய்கை. இங்கே குளி. இந்தப் படித்துறையிலேயே குளி. இந்தா புதுசேலை! குளிச்சுட்டுக் கட்டிக்க. நான் சேர்த்து வைச்ச காசாலே காலையிலே புடவை வாங்கியாந்தேன். ரவிக்கை, பூ, மஞ்சள், வளையல் எல்லாம். இந்தா. என் மகளுக்கு வாங்கிக் கொடுத்ததா நினைச்சுக்கறேன். வித்தியாசமாக நினைக்காதே." அவன் சொல்லும்போது குரலும் கம்மியது.

பெற்ற பாசம் இதுதானா? பெற்றவங்க அன்பு என்பது இதைத்தானா? கருப்பிக்கு ஒன்றும் புரியவில்லை. மனம் தடுமாறியது. 'இவ்வளவு அன்பா யாரு கொடுப்பா?' என்று நினைத்துப் புதுப் புடவை, ரவிக்கை எல்லாவற்றையும் வாங்கிப் படித்துறையின் மேல் வைத்தாள்.

"இந்தப் பக்கம் யாரும் வர மாட்டாங்க. குளி. நான் அந்தப் பக்கம் குளிச்சுட்டு வந்துடறேன்" என்று சொல்லியபடி அரச மரம் இருக்கும் படித்துறைக்குச் சென்றான்.

கருப்பி சரவணப் பொய்கையில் இறங்கி மூழ்கினாள்.

கீழ்ப் படியில் காலை வைத்தாள். சரப் புடவையைக் களைந்தாள். அடுத்த கீழ்ப்படிக்குக் காலை வைத்தாள். அவ்வளவுதான்; பாசி காலை வழுக்கி விட்டது. தடுமாறினாள். உடல் தண்ணீருக்கு உள்ளே, உள்ளே போகிறது. மூச்சுவிட முடியவில்லை.... 'மடக்' 'மடக்' என்று இரண்டு மூன்று மிடறு தண்ணீரைக் குடித்தாள். பாதாளத்துக்கு யாரோ அழைத்துச் செல்வது மாதிரி இருந்தது. கருப்பி சரவணப் பொய்கையில் சங்கமமாகி விட்டாள்.

பூச்சி குளித்து விட்டு வந்தான்.

படித்துறையில், புதுப் புடவை, குங்குமம், ரவிக்கை, வளையல், பூ, எல்லாம் இருந்தன. கருப்பியைக் காணவில்லை.

பூச்சி திடுக்கிட்டான். "கருப்பி! கருப்பி!"

"......................"

"க....ரு....ப்....பி....!"

உரக்கக் கத்தினான். மலைக்குச் செல்பவர்கள் சிலர் அவன் குரல் கேட்டுத் திகைத்து நின்றனர். பதில் இல்லை.

"எங்கே போயிட்டே கருப்பி! என்னை மோசம் பண்ணிட்டியா கருப்பி!"

தேம்பித் தேம்பி அழுதான். தன் புறங்கையால் முகத்தைத் துடைத்துக் கொண்டான் பூச்சி. பைத்தியமா? பைத்தியம் பிடித்து விடும்போல் இருந்தது.

"ஐயா! ஐயா! என் கருப்பியைப் பார்த்தீங்களா? என் மகள் கருப்பியைப் பார்த்தீங்களா? கண் தெரியாத பொண்ணு. குளிக்க வந்தாள். எப்படிப் போனாளோ?" என்று கேவிக் கேவி அழுதான்.

"கண் தெரியாத பொண்ணுதானே. எங்கேயும் போயிட மாட்டா. எவனாவது தட்டிக்கிட்டுப் போயிருப்பான். பிச்சைக்காரி தானே. கேள்வி, முறை ஏது?" உலகத்தைக் கரைத்துக் குடித்து, அனுபவம் பெற்று, பிஞ்சில் பழுத்த ஞானியின் பொன்மொழி இது.

"அவ, கலியாணமானவ, ஐயா!" உலகம் தெரியாதவனைப் பெற்ற தகப்பனின் மறுமொழி இது.

"சரிதான். இன்னும் உத்தமம்! போய்யா ஒரு முழுக்கு போட்டுட்டு. பீடை தொலைஞ்சுதுன்னு போவயா? அவளைத் தேடி அலையறியே? வாழ்க்கையில் அடிபட்டு, உதைபட்டு வறட்டு வேதாந்தம் பேசி மனத்தைத் தேற்றிக்கொள்ளும் பழுத்த அனுபவஸ்தரின் தேற்றல் இது.

பெற்ற மனத்தின் தவிப்பை அங்கு கூடியிருந்தவர்கள் யாரும் உணரவில்லை.

"குளத்தில் விழுந்திருக்கலாம். யாராவது மூழ்கிப் பாருங்க...." அங்கு கூடியிருந்தவர்களில் ஒருவர் சொன்னார்.

குளத்தில் இருவர் குதித்தனர். தண்ணீருக்குள் மூழ்கினார்கள். கருப்பியைக் கைகளால் ஏந்தியபடி படித்துறையில் கிடத்தினார்கள்.

முருகன் திருவடிகளில் கருப்பி சங்கமமாகி விட்டாள்!....

தெரியாத உலகத்தை விட்டு, அறியாத அப்பனைத் தவிக்க விட்டுவிட்டு அவள் போய் விட்டாள்!....

பிறந்த வீட்டுக் கோடியாக அவள்சடலத்தின் மேல் புதுப் புடவையைப் போட்டான். மஞ்சளைப் பூசினான்; குங்குமத்தை நெற்றியில் இட்டான். வளையலைக் கைகளில் அணிவித்தான். பூ வைத்தான்; குடத்தை ஏந்திச் சடலத்தைக் கும்பிட்டான்....

"அப்பனைத் தெரிஞ்சுக்காம, உன் சங்கப்படி தாலிக்குத் துரோகம் பண்ணாமல் பூவும் மஞ்சளும், குங்குமமுமாகப் போயிட்டே.... நான் கொடுத்து வைக்காத பாவி. அட்சதையை அள்ளிப் போட்டு, உன் திருமணத்தில் வாழ்த்த நான் இல்லை. இன்று உனக்கு வாய்க்கரிசி போட்டு உன்னை வழியனுப்ப நான் இருக்க வேண்டுமா? இந்தச் சடங்கைச் செய்யவா நான் உயிரோடு இருந்தேன்? என் மகளை என் கையாலேயே தகனம் செய்யவா நான் உயிர் வாழ்ந்தேன்! பொழுது விடிஞ்சா நான்தான் உன் அப்பன்னு சொல்லணும்னு நினைச்சிருந்தேனே. என் நினைப்பில் மண்ணைப் போட்டுட்டியே கருப்பி!" என்று கேவிக் கேவி அழுதான் பூச்சி.

# மனம்போனபடி



**வடவேங்கடவன்**

## என்ன புதுமை!

**ம**க்கள் கணக்கெடுப்பு மூன்றில் பங்கு எடுத்துக் கொண்டவர் நண்பர். 40, 50, 60-ம் வருடங்களில் நடந்த மூன்று கணக்கெடுப்பிலும் தாம் வேலை செய்தவர் என்ற ரீதியில் பெருமையுடன் பேசினார் அவர்.

''இந்த முப்பது ஆண்டில் சிறப்பான மாறுதல்கள் ஏதும் கவனித்தீர்களா? கணக்கெடுக்கச் சென்ற இடங்களில் ஏற்பட்ட வேடிக்கையான அனுபவங்களை, நிகழ்ச்சிகளைச் சொல்ல முடியுமா?'' பேட்டி கேட்பது போல் விசாரித்தேன். நண்பர் சொன்னவற்றில் ஒன்றை மட்டும் இங்கு கூறலாம்.

முதன் முதல் கணக்கெடுக்கச் சென்றபோது அக்காலத்தில் பெண்மணிகள் அவ்வளவாகக் கணவரின் பெயரைச் சொல்ல முன்வர மாட்டார்கள். புருஷரின் பெயர் என்னவென்றால் சொல்லச் சற்றுத் தயங்குவார்கள். பக்கத்து வீட்டுச் சிறுவனைக் கூப்பிட்டு, ''நம் வீட்டுக்காரர் பெயர் இன்னதென்று சொல்லி விட்டுப் போ'' என்றுகூடக் கூறுவது அந்நாளில் உண்டு.

அடுத்த தடவை சென்றபோது நிலைமை சிறிது மாறியது. உங்கள் பெயர் என்ன என்று விட்டு அம்மாளைக் கேட்டால் புருஷன் பெயரையும் சேர்த்து, 'கமலா தணிகாசலம்' 'விமலா சந்திரசேகரன்' என்றெல்லாம் சொல்லிக் கொள்கிற நாகரிகம் கிளம்பியது. மாறுதல் என்னவென்றால் முதலில் புருஷன் பெயரைத் தேவையான இடத்தில் சொல்லவே தயங்கியவர்கள் பத்து ஆண்டுகளுக்குப்பின் தம் பெயரைச் சொல்லிக் கொள்ளும்போதும் சேர்த்துக் கூறினார்கள்.

இப்போதைய நாகரிகம் இதற்கும் ஒரு படி மேலே.

அம்மாளின் பெயரைக் கேட்டால் 'மிஸஸ் ரவீந்திரன்' அல்லது 'ஸ்ரீமதி சந்திரமோகன்' என்பன போன்ற பதில்கள்தான் கிடைக்கின்றன. ''அது சரி! உங்கள் பெயரைச் சொல்லுங்கள்'' என்று சிரமப்பட்டுத்தான் கமலா, விமலா போன்ற பெயர்களை வரவழைக்கும்படி ஆகி விட்டது.

'என்ன புதுமையோ?' என்று தலையில் தட்டிக் கொண்டார் நண்பர்.

## பேசிப் பயன் என்ன?

**பூ**ங்காவில் அமர்ந்திருந்தேன். மையத்திலிருந்து வானொலி ஒலித்த வண்ணம் இருந்தது. அப்போது தமிழில் செய்திகள் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தன. இடையில் கிட்டத்தட்ட இப்படி ஒரு வாசகம் காதில் விழுந்தது:—



''வரும் ஆண்டில் தொழிலாளிகளுக்கு வீட்டு வசதி செய்து தருவதற்காக இருபத்திரண்டு இலட்சத்துச் சொச்சம் ரூபாய் செலவிடப்படும் என்று அமைச்சர் தெரிவித்தார்.''

இவ்வாக்கியத்தை வானொலிப்பெட்டி கூறி முடிக்க, என் பக்கத்திலிருந்த பெரியவர் 'த்சு' என்று சூள்கொட்டினார்.

''என்ன அசுவாரசியப்பட்டுக் கொள்கிறீர்கள்?'' என்று நான் ஏதோ கேட்டு வைத்தேன். அவர் அழகாகச் சொன்னார்:

''இவ்வளவு வீடுகள் கட்டப்படும், அல்லது இத்தனை குடும்பங்க




ளுக்கு இருப்பு வசதி செய்து தரப்படும் என்று ஏதாவது சொன்னால் அதில் அர்த்தம் உண்டு. கிராமப் புறங்களில் ரோடு அமைப்பதற்காக ஐந்து கோடி ரூபாய் செலவிடப்படும் என்பார்கள் ஒரு நாள். இன்னொரு நாள் கேட்டால் ஆரம்பப் பள்ளிகள் புதியவை திறந்து வைக்கப் பதினேழு இலட்சம் செலவழிக்கப்படும் என்பார்கள். இதையெல்லாம் கேட்டு நாம் மனம் மகிழ வேண்டும்.''

அவர் சற்று நிறுத்தினார். ''எனக்கு அவ்வளவு தூரம் விளங்கவில்லையே?'' என்று நான் கேட்டேன்.

''பதினேழு இலட்சமும் இருபத்திரண்டு கோடியும் செலவழிக்கவில்லையென்று யார் சொன்னது? நிச்சயம் செலவழிக்கிறார்கள். செலவழிப்பது பிரமாத காரியமோ? ஒப்பந்தக்காரர்களும் (கண்டிராக்டர்கள்) தப்பினால் 'சிவில்' என்ஜினியர்களும் அதற்காகத் தானே இருக்கிறார்கள்? மந்திரியும் செலவழிப்பதாகத்தானே வாக்குக் கொடுக்கிறார்? வேறென்ன சொல்லுகிறார்?''

எனக்குப் பெரியவர் பேச்சுப் புரிந்தது. இட்டங்களுக்குப் பணத் தொகை நோக்கை விட உற்பத்திப் பொருள் நோக்கு (Physical targets as different from money targets) வேண்டும் என்று எப்போதோ எங்கோ வாசித்தது என் கண்முன் தோன்றி மறைந்தது.

## விநோத விருந்தாளி !

நண்பர் பிரம்மச்சாரி. அவரை நம் வீட்டிலே அழைத்து ஒரு நல்ல சாப்பாடு போடுவோமே என்று தோன்றியது. ஹோட்டலுக்குப் போகிற அலுப்பு அவருக்கு ஒரு நாளாவது, ஒரு வேளைக்காவது இல்லாதிருக்கட்டுமே!

அழைத்தேன். 'சரி வருகிறேன்' என்றார். வீட்டிலே ஏற்பாடெல்லாம் ஆகியது. நல்ல சாப்பாடே தயாராகியது. அவர் பெயரைச் சொல்லிக் கொண்டு, நாமும் தான் நல்ல விருந்து உண்போமே! மணி ஆகியது. வாசற்கதவைத் திறந்து வைத்துக் கொண்டு காத்திருந்தேன். மணிதான் ஆகியது. நண்பர் வரவில்லை. எங்கேயாவது வரும் வழியில் தாமதம் ஏற்பட்டிருக்கலாம் என்று எண்ணிக் காத்திருந்தேன். நண்பரோ வருகிற வழியாகக் காணோம். நேரம்தான் போய்க் கொண்டிருந்தது. பசி வயிற்றுடன் அவர் அறையைநோக்கி நடையைக்கட்டினேன். நேரில் சென்று அழைத்து வந்து விடலாமே என்று எண்ணிச் சென்றேன். அறை பூட்டிக் கிடந்தது. எனக்குச் சிறிது கோபம் தான். வீட்டுக்கு வந்து ஆறிய சோற்றைப் புசித்தேன்.

இரண்டு நாட்கள் கழிந்தபின் அந்தப் பேர்வழியை எங்கேயோ கண்டேன்; விசாரித்தேன், ''என்ன, நீங்கள் இப்படிப் பண்ணி விட்டீர்களே?'' என்று.

நான் கூப்பிட்டதை அவர் சரியாய்ப் புரிந்து கொள்ளவில்லையோ அல்லது நான் தேதி நேரம் சொன்னதில் தவறுதல் இருக்குமோ என்று என்னை விருந்து சமைத்த இல்லக் கிழத்தி வேறு வீட்டில் தொந்தரவு செய்திருந்தமையால், அவர் பதிலை ஆவலோடு கவனித்தேன்.

எனக்கு அவர் மீது ஆத்திரம் தான் பற்றிக் கொண்டு வந்தது. என்ன தெரியுமோ, அவர் சொன்னார்?

''ஆமாமாம்! நீங்கள் கூப்பிட்டது இப்போதுதான் நினைவுக்கு வருகிறது. மறந்தே போய் விட்டேன். அறையைப் பூட்டிக் கொண்டு மறந்து போய் நான் பாட்டில் எங்கேயோ கிளம்பி விட்டேன். மன்னிக்கவும்,''

அதைக் கேட்டதும் எனக்குச் சொல்லொணாக் கோபம் வந்து விட்டது. அவரை ஒன்றுமே செய்ய முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்லி வைத்தேன். சொன்னது சரியோ, தவறோ? சொன்னேன் என்பதை மட்டும் ஒப்புக் கொள்கிறேன்.

''நீங்களே மறந்து போய் விட்டீர்களா? மிகவும் நல்லது. ஆனால் நல்ல வேளையாக நீங்கள் நினைவில் வைத்துக் கொண்டிருக்க நான் மறந்து போயிருந்தால் என்ன ஆகியிருந்திருக்கும்?'' என்று கூறிவிட்டு, விருட்டென்று திரும்பி நடந்து வந்தேன்.





# புது வெள்ளம்

அகிலன்

### அத்தியாயம் இருபத்தொன்று

## முதலில்லா முதலாளி

குமரவேல் தமது குமாரன் செல்வரத்தினத்தையும் அருகில் வைத்துக் கொண்டு, மாணிக்கத்திடம் பேச்சோடு பேச்சாக அவனைப் பற்றிப் பெருமை பேசலானார். செல்வரத்தினத்துக்கே இது தர்ம சங்கடமாக இருந்தது. தன்னையும் நேரில் வைத்துக்கொண்டு அவர் புகழ் பாடத் தொடங்கியது அவனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. மெதுவாக மாணிக்கத்தின் அறையை விட்டு நழுவி வெளியில் வந்தான்.

அப்படி வந்ததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. சித்திராவை இன்னும் சந்திக்க முடியவில்லையே என்ற துடிப்புத்தான் அது.

முருகையனும் அதே வீட்டில் இருப்பதோ, சித்திராவும் அவனும் ஒன்றாக மாமல்லபுரம் போய் விட்டுத் திரும்பியதோ, செல்வரத்தினத்துக்குத் தெரியாது. 'சித்திரா என்னைப் பார்க்க வேண்டுமென்று அப்பாவிடம் கூறினாளாமே? அப்படியானால் ஏன் இன்னும் வந்து வரவேற்கவில்லை? ஒருவேளை, வெட்கப்பட்டுக்கொண்டு வீட்டுக்குள் ஒளிந்துகொண்டாளோ!' என்றெல்லாம் எண்ணினான் செல்வரத்தினம்.

வீட்டைச் சுற்றிப் பார்ப்பதுபோல் பாவனை செய்து கொண்டு, சித்திராவின் உருவம் கண்ணில் படவேண்டுமென்பதற்காக, கூடத்துக்கு வந்து மெதுவாகப் படங்களைப் பார்க்கத் தொடங்கினான்.

''செல்வரத்தினம்!'' என்ற அன்புப் பெருக்கு நிறைந்த குரல் அவனைத் திடுக்கிடச் செய்தது. மறு கணம் முருகையன் தன்னை ஆவலோடு தழுவிக்கொண்டு நிற்பதைக் கண்டான் செல்வரத்தினம். தன் கண்களை அவனால் நம்ப முடியவில்லை.

சித்திராவுக்காக ஏங்கிய நேரத்தில் முருகையன் வந்து முன்னால் நிற்கவே தனது ஏமாற்றத்தை மறைக்க முடியாமல் ஒரு கணம் தடுமாறினான் செல்வரத்தினம். முருகையனுடைய அன்பு மகிழ்ச்சியைத் தருவதற்குப் பதிலாக அதிர்ச்சியையே கொடுத்தது.

''செல்வரத்தினம்! உன்னைச் சந்திப்பதில் எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?''

'எனக்கு எவ்வளவு ஏமாற்றம் தெரியுமா?' என்று கேட்பது போல் மௌனமாக அவனை உற்றுப் பார்த்தான் செல்வரத்தினம்.

''ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?''

பிறகுதான் செல்வரத்தினத்துக்கு அவனுடைய தவறு தெரிந்தது. ''ஒன்றுமில்லை .... ஒன்றுமில்லை....'' என்று சொல்லி விட்டு, ''பிரயாணக் களைப்பு!'' என்று மழுப்பினான்.

முருகையன் அவனைத் தன்னுடைய அறைக்கு இழுத்துக் கொண்டு சென்றான். அவனுடைய நலன்களைப் பற்றி ஆவலோடு விசாரித்தான். ஏற்கெனவே முருகையனின் மனம் அன்றைக்கு மாலையில் நடந்த நிகழ்ச்சிகளால் பரவசமுற்றிருந்ததால், செல்வரத்தினத்தின் சந்திப்பு அவனுக்கு மேலும் இனிமையான உணர்வு தந்தது.

''நீ இங்கே இருப்பதை அப்பா என்னிடம் சொல்லவில்லையே!'' என்றான் செல்வரத்தினம்.

''அதனால் என்ன, மறந்திருப்பார்'' என்று பதிலளித்து விட்டு, தன்னைப் பற்றிய விவரங்களை அவனிடம் சுருக்கமாகத் தெரிவித்தான். ஆனால் தானும் சித்திராவும் உள்ளத்தில் உறவு கொண்டிருப்பதை அவன் வெளியிடவில்லை. வெட்கத்தினால் அதைப் பற்றிய பேச்செடுக்காமல் இருந்துவிட்டான்.

தம்முடைய மகனோடு முருகையனை ஒன்றாகக் கண்ட குமரவேலுக்கு அந்தக் காட்சி விளக்கெண்ணெய் குடிப்பது போல் இருந்தது. பொங்கி வந்த வெறுப்பை மூடி மறைத்துக் கொண்டே அவர்களுக்கு அருகில் வந்து உட்கார்ந்தார்.

''செல்வம்! நான் மறந்தே போய் விட்டேன்; ...நம்ப முருகையன் இங்கேதான் மாணிக்கத்துக்கிட்டே சம்பளத்துக்கு வேலை பார்க்கிறான்'' என்று அலட்சியமாய்ச் சொல்லி வைத்தார்.

'சம்பளத்துக்கு' என்ற சொல்லை அவர் அழுத்திச் சொல்லிய விதமும், அவர் குரலில் ஒலித்த அலட்சியமும் முருகையனின் மனத்தைப் புண்படுத்தி விட்டன. தன்னுடைய ஏழைமையை அவர் வேண்டுமென்றே குத்திக் காட்டியதை அவனால் தாங்க முடியவில்லை. அதுவரையில் அவனுடைய உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த உற்சாகம் திடீரென்று மறைந்துவிட்டது.

மேலும் மேலும் அவர் முருகையனுக்குப் பரிந்து பேசுகிறவர் போல் அவனைப் பழிக்க முற்படவே, முருகையன் மௌனமாகத் தலையைக் குனிந்துகொண்டான். செல்வரத்தினத்துக்கும் அது பிடிக்கவில்லையென்றாலும், தந்தையிடம் குறுக்கிட்டுப் பேசி அவர் போக்கை நிறுத்த முடியவில்லை. நல்ல வேளையாக இந்தச் சமயத்தில் அங்கே சித்திராவின் குரல் ஒலித்தது.

அறைக்கு வெளியில் நின்றபடியே, மற்றவர்களும் உள்ளேயிருப்பதைக் கவனியாமல், ''முதலாளி சார்! உள்ளே வரலாமோ?'' என்று குறும்புத்தனமாகக் கேட்டாள் சித்திரா.

தூக்கி வாரிப் போட்டது குமரவேலுக்கு.

''வா சித்திரா!'' என்றான் முருகையன் மகிழ்ச்சியோடு.

''முதலாளியின் உத்தரவு!'' என்று வேடிக்கையாகக் கூறிக் கொண்டு நுழைந்தவள், அங்கே விருந்தினர்கள்



இருப்பதைக் கண்டு நாணத்துடன் ஒரு புறம் ஒதுங்கி நின்றான்.

அது வரையில் குமரவேல் பேசிய பேச்சுக்கள் அவ்வளவும் மறந்து விட்டன முருகையனுக்கு. முக மலர்ச்சியோடு சித்திராவுக்குச் செல்வரத்தினத்தை அறிமுகம் செய்து வைத்தான். அவனைப் பற்றிய விவரங்களையும், அவனுக்கும் தனக்குமுள்ள உறவையும் கூறினான். குமரவேலுவும் சேர்ந்து கொண்டு வழக்கம்போல் புகழ் பாடித் தீர்த்தார்.

செல்வரத்தினத்தின் மனத்தில் சித்திராவின் உருவம் நொடிப்பொழுதில் ஆழமாகப் பதிந்து விட்டது. கண்டவர் மனத்தைக் கண்டவுடன் இறங்க வைக்கும் பேரழகை அவள் பெற்றிருந்தாள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், செல்வரத்தினமோ ஏற்கனவே அவளைக் காணாத போதும் மனக்கண்ணால் கண்டு களித்தவன். இப்போது அவன் கண்ட காட்சி காணாத காட்சியை விடப் பிரமிப்பைத் தான் தந்தது.

தன்னுடைய உருவ அழகு அவனிடம் எழுப்பி விட்ட வியப்பின் அலைகளைச் சித்திராவும் காணத் தவறவில்லை. செருக்கோடு செல்வரத்தினத்துக்கு ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு, முருகையனின் அருகில் சென்று அமர்ந்து கொண்டாள்.



முருகையனிடம் அவளுக்கு இருந்த நெருக்கத்தைக் காணச் சகியாத குமரவேல், "சித்திரா! இந்த முருகையன் செய்யறது கொஞ்சங்கூட நல்லா யில்லே" என்று ஆரம்பித்தார். "இவனு எங்கள் குடும்பத்துப் பிள்ளை; எங்களோட பங்காளி! அப்படியிருந்து விட்டு, உங்ககிட்டே வந்து சம்பளத்துக்கு வேலை செய்யறது நல்லா யிருக்கா? சொன்னாலும் கேட்கமாட்டேங்கறான்" என்றார்.

முருகையனுக்கு அதற்கு மேலும் பொறுக்க முடியாது போயிருந்தது. அதற்குள் சித்திராவே குறுக்கிட்டுப் பேசினாள்.

"இவரா சம்பளத்துக்கு வேலை பார்க்கிறார்! யார் அப்படிச் சொன்னார்கள்? இவர்தான் இங்கே முதலாளி!"

"விளையாடாதே சித்திரா!" என்றான் முருகையன்.

அவன் சொல்லியதைப் பொருட்படுத்தாமல், முருகையனுக்கே தெரியாத ஓர் உண்மையை அங்கு பெருமையோடு வெளியிட்டாள். "நம்முடைய 'ஸ்டோரு'க்குப் பக்கத்திலே தனியாக ஒரு கடை திறந்திருக்கிறோமே, அது யாருடையது தெரியுமா? அதற்கு யார் முதலாளி தெரியுமா?"

"சித்திரா!" என்று அதட்டி அவளைத் தடுக்கப் பார்த்தான் முருகையன். அவனுக்கே தெரியாத செய்தி அது. அவன் அதை நம்பவும் இல்லை.

"அத்தான்! அன்றைக்கு நீங்கள் கையெழுத்துப் போட்டுக் கொடுத்ீர்களே, எதற்குப் போட்டுக் கொடுத்தீர்கள், தெரியுமா? அனுமதிக்கு மனுப் போட்டு, அனுமதியும் கிடைத்து, இப்போது சுறுசுறுப்பாய் வியாபாரம் — நடந்து கொண்டிருக்கிறதே! முன்னால் உங்களைக் கேட்டால், நீங்கள் எங்கே முடியாதென்று சொல்லி விடுவீர்களோ என்று தான், நானும் அண்ணனும் இந்த ஏற்பாட்டைச் செய்தோம்.—நீங்கள்தான் அத்தான் அந்தக் கடைக்கு உண்மையான முதலாளி!"

முதல் போடாமலே முதலாளியாகி விட்ட முருகையனுக்கு இதைக் கேட்டவுடன் மெய் சிலிர்த்தது. சித்திராவும் அவள் அண்ணனும் அவனிடம் இவ்வளவு பற்றுதல் கொண்டிருக்கிறார்களா? நன்றிப் பெருக்கு அவன் உள்ளத்தில் ஊற்றெடுத்தது. செய்த உதவியை வெளியில் சொல்லாமல் இருக்கும் பண்பு மறக்க முடியாததல்லவா?

குமரவேலுக்குப் பேரிடி போல் இருந்தது இந்தச்

செய்தி. செல்வரத்தினம்கூட இதைக் கேட்டுத் திகைத்துப் போனான். அவனுக்கு முருகையன் மீது சிறிதும் பொறுமை ஏற்படவில்லையென்றாலும், முருகையனுக்கு ஏற்பட்டிருந்த அதிர்ஷ்டம் அவனைக் கலங்கத்தான் வைத்தது.

ஐந்து நிமிடங்களுக்குமேல் குனிந்த தலை நிமிராமல் குமரவேல் யோசனை செய்து கொண்டிருந்தார். கூட்டுத் தொழிலில் பெரும் பணத்தைக் கொண்டு வந்து முடக்கியிருக்கும் தமக்கும் தமது குமாரனுக்கும் இல்லாத சலுகை, அந்த வீட்டில் ஓர் 'ஒட்டாண்டிப் பயலு'க்கு எப்படிக் கிடைத்தது?

இரவுச் சாப்பாட்டின் போது எல்லோரும் ஒன்றாக அமர்ந்து கலகலப்பாகப் பேசிக் கொண்டே சாப்பிட்டார்கள். மாணிக்கம் அந்த வேளையில் முருகையனைப் பற்றிப் பெருமையாக நாலு வார்த்தைகளைச் சொல்லி வைத்தார். ஏற்கனவே புகைந்து கொண்டிருந்த குமரவேலின் மனம் இப்போது நன்றாகப் பற்றி எரிந்தது.

''பேருக்குத்தாண்டா முருகையன் முதலாளி! தொழிலிலே கஷ்ட நஷ்டம் வந்தால் அது இந்த 'முதலாளி'யைச் சேரும்; லாபமும் மேல் வரும்படியும் வந்தால் அது மாணிக்கத்துக்குப் போகும். அகப்பட்டுக்கிட்டு அபராதம் கொடுக்கப் போறவனும் தண்டனை அடையப்போறவனும் இந்த 'முதலாளி'. அது வரையிலே கிடைக்கிறதைச் சுருட்டுகிற வேலை மாணிக்கத்துக்கு. செல்வம்! முருகையனை ஒரு திரையைப் போலே முன்னாலே தொங்க விட்டுக்கிட்டு, உள்ளுக்குள்ளே அவன் ரகசியமாப் பல வேலைகளைச் செய்துக் கிட்டிருக்கான்.''

செல்வரத்தினத்துக்கு இப்போது முருகையனிடம் அளவற்ற அனுதாபம் ஏற்பட்டது. ஏதாவது தொல்லையில் அவன் அகப்பட்டுக் கொள்ளக் கூடும் என்று பயந்தான்.

''அப்பா! அப்படியானால் நான் முருகையனிடம் சொல்லி எதற்கும் எச்சரிக்கையாக நடந்து கொள்ளச் சொல்கிறேன், அப்பா!''

''செல்வம்! இந்த வம்பெல்லாம் உனக்கு எதுக்கப்பா? நீ போய்ச் சொன்னால் அவன் உன்னைத்தான் தப்பா நினைக்குவான். நீ பேசாமல் ஊருக்குப் போய்ச் சேர். நான் இதுக்கு ஒரு வழி பண்ணி வச்சிட்டுக் கிளம்பறேன்.''

முருகையனுக்காகக் கவலைப்பட்டுக் கொண்டே ஊருக்குக் கிளம்பினான் செல்வரத்தினம். தெளிவாக ஒன்றும் புரியாவிட்டாலும், முருகையனுக்கு ஏதாவது சிரமங்கள் ஏற்படக்கூடும் என்ற எண்ணம் அவனுக்கு இருந்தது. தன் தகப்பனாரையும் அவன் நம்பவில்லை.

குமரவேல் அவருடைய வேலைகளைக் கவனிப்பதற்காக மேலும் சில நாட்கள் சென்னையில் தங்கினார். தம்முடைய வேலைகளைக் கவனித்ததோடு மட்டிலும் அவர் நிற்கவில்லை. முருகையனின் பெயரால் நடந்த வியாபாரத்தையும் ஊடுருவித் தெரிந்து கொண்டார்.

ஒரே கல்லில் இரண்டு கனிகளை வீழ்த்துவது போல், முருகையனுடைய வளர்ச்சிக்கு வேட்டு வைக்கும் அதே சமயத்தில், மாணிக்கத்துக்கும் ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. யோசனை செய்து ஒரு முடிவுக்கும் வந்து விட்டார்.

பகைவனுக்கு எதிராக வாள் முனையால் நேரடியாக வஞ்சம் தீர்த்துக் கொண்டது அந்தக் காலம்; மூளையைத் தீட்டிக்கொண்டு முதுகில் குத்தி வீழ்த்துவது இந்தக் காலம்.

## அத்தியாயம் இருபத்திரண்டு

# பழகிய மனிதர்கள்

**மா**ணிக்கத்திடம் சொல்லி முனியாண்டிக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுத்து விட்டான் முருகையன். குமரவேலுடன் கூட்டுத் தொழில் செய்த அவர்களுக்கு மொத்த வாணிபம் செய்யும் ஒரு மண்டிக் கடையும், சில்லறை வியாபாரத்துக்கென்று ஒரு மளிகையும் இருந்தன. மண்டிக் கடையின் கிடங்கில் சாமான் மூட்டைகளைச் சேகரித்து வைப்பதும், பிறகு மற்றக் கடைகளுக்கு மூட்டைகளைக் கொண்டு போய்க் கொடுப்பதும் முனியாண்டியின் வேலைகள். கைவண்டிகளும் இருந்தன; மாட்டு வண்டிகளும் இருந்தன. அவை இல்லாத வேளைகளில் முனியாண்டியே மூட்டைகளைச் சுமந்து செல்லும் வேலையையும் கவனித்தான்.

சில்லறைக் கடை இருந்ததே, அதுவும் அளவில் பெரிய கடைதான். முக்கியமான உணவுப் பொருள்கள் எல்லாமே அங்கு கிடைத்தன. பெரிய மனிதர்களின் குடும்பங்களுக்கும், தெருத் திண்ணைகளில் கடை வைத்து விற்பனை செய்யும் சின்னஞ் சிறு வியாபாரிகளுக்கும் அங்கே சாமான்கள் கிடைத்தன. அந்தக் கடையை ஒட்டினாற் போல்தான் வலது புறத்தில் முருகையனுடைய கடையும் இருந்தது.

வீடு கட்டும் பொருள்கள் சிலவற்றை முருகையனின் கடையில் விற்பனை செய்து கொண்டிருந்தார்கள். இரும்புச் சாமான்களும் சிமெண்ட் முதலிய பொருள்களும் அங்கு இருந்தன. இரண்டாவது உலகப் போர் முடிந்த சமயமாதலால், எளிதாகக் கிடைக்காத பொருள்கள் சிலவற்றின் விலையையும் விற்பனையையும் அரசாங்கத்தார் கட்டுப்படுத்தி யிருந்தார்கள். அப்படிக் கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களுக்கும் முருகையனின் பெயரால் அனுமதி வாங்கி யிருந்தார் மாணிக்கம். முருகையனுக்கே தெரியாத விவரம் இது.

ஒரு நாள் கணக்கெழுதும் வேலையை முடித்து விட்டு, எதேச்சையாகக் கடைகளின் பக்கம் வந்து சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான் முருகையன். இரண்டு கடைகளிலுமே கூட்டம் இருந்தது. சுறுசுறுப்பாக வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. தானும் ஒரு முதலாளி என்ற பெருமையோடு கடையைக் கவனித்தான்.

மனிதர்கள் உணவில்லாமலும் வாழ முடியாது; கூரையில்லாமலும் வாழ முடியாது. சமுதாயத்தின் இரண்டு அடிப்படைத் தேவைகளின் வியாபாரத்தில் தானும் பங்கு கொண்டிருப்பது அவனுக்குப் பெருமை தந்தது. 'இனிமேல் வேலை கிடைக்காதவர்களுக் கெல்லாம் வேலை கிடைத்து விடும்; அதனால் அரைவயிற்றுக் கஞ்சி குடித்தவர்கள் முழு வயிற்றுக் கஞ்சி குடிப்பார்கள். நடைபாதையையே வீடாகக் கொண்டிருந்தவர்களுக்குக் கூரைக் குடிசைகளாவது கிடைக்கும்; பெரும்பாலான மத்தியதர வர்க்கத்தாருக்குச் சொந்த வீடுகள் கட்டிக் கொள்ளும் காலமும் வந்து விடும்! ஆகவே, மக்களின் வாழ்க்கைத் தரத்தை ஒட்டி நம் வியாபாரமும் வளர வாய்ப்பிருக்கிறது—நல்ல தொழில் நல்ல எதிர்காலம்!' என்று எண்ணிப் பூரிப்படைந்தான்.

''அண்ணு வணக்கம்!'' என்ற குரல் பின்புறமிருந்து கேட்டது.

திரும்பிப் பார்த்தான். அங்கே, முனியாண்டி வசித்த தெருவில் பெட்டிக் கடை வைத்திருந்த நடேசன் நின்று கொண்டிருந்தான். முருகையனைக் கண்டதால் அவன் முகத்தில் எதிர்பாராத மகிழ்ச்சி தாண்டவமாடியது.

அன்போடு அவனுடைய நலன்களை விசாரித்தான் முருகையன். நடேசன் தன்னுடைய கடைக்குச் சாமான்கள் வாங்குவதற்கு அங்கு வந்ததாய்த் தெரிவித்தான். ''முனியாண்டிதான் இந்தக் கடை நம்பளோடதின்னு சொன்னுன்; அதிலேயிருந்து நான் இங்கேதான் வாடிக்கையாகச் சாமான்களை வாங்கிக்கிட்டிருக்கேன்'' என்றான்.

தனக்கே தெரியாமல் தன்னிடம் பற்றுதல் கொண்டிருந்த நடேசனை வியப்புடன் நோக்கினுன் முருகையன். நடேசனு முனியாண்டியின் சார்பில் அவனுக்கு நன்றி சொல்லத் தொடங்கினுன்.

''முனியாண்டியோட பெண்டாட்டி கடைக்கு வர்ற போதெல்லாம் நீங்க நல்லா இருக்கணும்னுதான் வேண்டிக்கிறு. அந்தக் குடும்பத்தைக் காப்பாத்துறதுக்கு நீங்க தெய்வம்போலே இருந்து ஒரு வழியைக் காட்டியிருக்கீங்க.''

''நான் எதுவுமே செய்யவில்லை'' என்றுன் முருகையன். ''உழைக்கிறவனுக்குப் பிழைப்பைச் சுட்டிக் காட்டினேன்; அவ்வளவுதான்.''

''அதைத்தான் இந்தக் காலத்திலே யார் செய்வாங்க? ரிக்ஷா இழுத்தகாலத்திலே கூலி கிடைச்சா சாப்பாடு: இல்லேன்னு இல்லே. கூலி கிடைக்கலேன்னு வயிறு பசிக்காமல் இருக்குமுங்களா? இப்போ அப்படியில்லே பாருங்க; மாசாமாசம் ஏதாவது கிடைக்குமே!''

முருகையனுக்கு ஒரு வகையில் நடேசன் கூறிய விவரம் மன நிறைவைக் கொடுத்தது. குழந்தைகுட்டிகள் உள்ள

யாரொருவனும் மற்றொருவனை விட அதிகப் பணம் படைத்திராத ஒரு காலம் வருமென்று என்னால் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. ஆனால் ஏழைகளைக் கஷ்டப்படுத்தித் தாங்கள் மேலும் பணம் சேர்க்கலாம் என்ற எண்ணத்தைப் பணக்காரர்கள் துச்சமாகக் கருதும் காலம் வரும்; அதே போல் பணக்காரர் என்றாலே ஏழைகள் கொள்ளும் பொறாமை உணர்வு அழியும் காலமும் வரும் என்று என்னால் நம்ப முடிகிறது. குறை ஏதுமற்ற உலக சமுதாயம் உருவானாலும் கூட வேற்றுமைகளை அறவே களைவது நமக்கு இயலாது. ஆனால் வேறுபட்ட நிலைகளிலுள்ளோர் சண்டை செய்யாமலும் மனக்கசப்பு கொள்ளாமலும் நாம் செய்யலாம். எத்தனை எத்தனையோ இடங்களில் பணக்காரர்களும் ஏழைகளும் உண்மையான நட்பு பூண்டு இன்று வாழ்ந்து வருகிறார்கள். இந்த உதாரணங்களைப் பெருக்க வேண்டியதொன்றே நாம் செய்ய வேண்டியது. —காந்தியடிகள்

ஒரு குடும்பம் முன் போல் பயமில்லாமல் காலந்தள்ள முடிந்ததில் அவனுக்கு ஓர் ஆறுதல். கடையில் வேலைக்காரர்களிடம் நடேசனைப் பற்றிச் சொல்லி, அவன் சமயங்களில் கடனுக்குச் சாமான்கள் கேட்டாலும் கொடுத்தனுப்பச் சொன்னான். நாணயமுள்ள வியாபாரி அவன் என்பதை முன்பே தெரிந்து கொண்டிருந்தான் முருகையன்.

மாலையில் முருகையன் வழக்கம்போல் கார் எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போகவில்லை. சித்திரா தன் அண்ணியோடு வெளியில் புறப்படுவதாக அவனுக்கு 'போன்' செய்திருந்தாள். ஆகவே சாந்தாவின் வீட்டுக்குப் போய் எட்டிப் பார்த்து விட்டு வரலாமென்று திருவல்லிக்கேணிப் பக்கம் கிளம்பினான். நன்றி மறவாத அவன் மனம் தனக்குத் தக்க சமயத்தில் உதவி செய்த சாந்தாவை அப்போது நினைத்துக் கொண்டது.

வீட்டுக்கு எதிரில் கார் போய் நின்றவுடன், வீட்டுக்குள்ளிருந்து நடிகன் குருசாமி வந்து கொண்டிருப்பதைக் கண்டான் முருகையன். ஆனால் குருசாமியோ, எதிரில் கார் வந்து நின்றதையோ, அதற்குள்ளேயிருந்தவனையோ கவனிக்கவில்லை. சித்தம் கலங்கியவனைப் போல் தட்டுத் தடுமாறி நடந்து வந்தான். முருகையனை அவன் விழிகள் சந்தித்த பிறகும் கூட அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை.

''குருசாமி!''

உற்றுப் பார்த்தான் கலைஞன். குடி மயக்கத்தில் இருப்பது போல் அவனுடைய விழிகளில் கிறக்கம் தென்பட்டது. பிறகு, கண்களைத் துடைத்துக் கொண்டு, ''யாரது, அண்ணாவா?'' என்று கேட்டான்.

திடுக்கிட்டுப் போய் முருகையன் அவனுடைய கரத்தைப் பற்றி அழைத்து வந்து தன் அருகில் காரில் அமர்த்திக் கொண்டான். ''என்ன குருசாமி?'' என்று கேட்டான்.

''ஒன்றுமில்லை அண்ணா!'' சிரிக்க முயன்றான் குருசாமி. ஆனால் மளமளவென்று கண்ணீர் அவன் கன்னங்களில் வழிந்தது. அன்போடு முருகையனின் தோளைப் பற்றிக் கொண்டு அவன் மேல் சாய்ந்தான் குருசாமி.

காரணத்தை அறிந்து கொள்ளத் துடித்தான் முருகையன். வறுமையா, ஏமாற்றமா, தோல்வி உணர்ச்சியா, என்னவென்றே அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. வெகு நேரம் அவனைத் தேற்றிய பிறகு, ''அந்தச் சகுனா என்னை ஏமாற்றி விட்டாளண்ணா!'' என்று சொல்லிச் சிறு குழந்தை போல் தேம்பினான். ''வேறு எவனையோ நம்பி அவனோடு போய் விட்டாள்; இந்த வீட்டைக் காலி செய்து விட்டுப் போய் விட்டாளாம்...!''

முருகையனால் குருசாமியைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. 'காதலாவது கத்தரிக்காயாவது!' என்று முன்பொரு நாள் பேசியவனா, இன்றைக்கு இப்படிக் கண்ணீர் வடிக்கிறான்? துறவியைப் போல், கடமை வீரனைப் போல், சிந்தனை மிக்க அறிஞனைப் போல் அன்றைக்குக் காதலுக்கு எதிராக வாதாடினானே; அதே குருசாமிதானா இவன்? சகுனாவை ஏறெடுத்தும் பார்க்கத் தயங்கியவன், அவளுடைய உணர்ச்சிகளை அலட்சியம் செய்தவன் அவளை உலகம் தெரியாதவள் என்று பழித்தவன்... அவனா இன்று அவளுக்காக அழுகிறான்?

''அண்ணா! அவள் அவசரப்பட்டு விட்டாள் அண்ணா! பொறுத்திருக்க வேண்டிய பெண் பொறுக்காமலிருந்து விட்டாள் அண்ணா! என்னை அவள் தெரிந்துகொள்ளவே இல்லை!''

''என்ன விஷயம் குருசாமி?''

''வாழ வழி கிடைத்தவுடன் அவளுடன் வாழலாமென்று மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தேன். ஆனால் நான் அதையாவது அவளிடம் மனம் விட்டுச் சொல்லியிருக்கலாம். இப்போது வாழவும் வழி கிடைக்கவில்லை; அதைச் சொல்லி அழுவதற்கும் அவள் கிடைக்கவில்லை.''

தன்னால் முடிந்த மட்டும் அவனைத் தேற்றிப் பார்த்தான் முருகையன். குருசாமி எளிதில் கருணையை மறப்பவனாகத் தெரியவில்லை. வெளியில் இரும்புப் பாறை போல் தோற்றமளித்த அவனுடைய மனம் உள்ளே பாகாய் உருகிக் குழம்பிப் போயிருந்தது.

''அண்ணா! பட்டினியைப் பகிர்ந்து கொள்ள ஒரு பெண் வேண்டாமென்று நினைத்தேன். அந்த இடத்தில்தான் நான் தவறு செய்து விட்டேன். பட்டினித் துன்பத்தை மறப்பதற்காகவாவது மனிதனுக்கு ஒரு துணை வேண்டும். சோறில்லாமல் கூட நான் வாழ்ந்து விடுவேன்; அவளில்லாமல் என்னால் வாழவே முடியாது; வாழவே முடியாது!''

நீண்ட பெருமூச்சு விட்டான் முருகையன். வறுமை என்கிற பேய் புகுந்து மனித வாழ்க்கையை எப்படியெல்லாம் குலைத்து விளையாடுகிறது என்ற உண்மை அப்போது அவனிடம் பளிச்சிட்டது.— 'இனி நடந்த செயலுக்கு வருந்தி என்ன செய்வது?'

''குருசாமி! நான் இப்போது முன்னைப் போல் சிரமப்பட்டுக் கொண்டு இருக்கவில்லை. உங்களுக்கு எப்படியாவது ஒரு வேலை தேடிக் கொடுத்து ஒரு வருமானத்துக்கும் வழி செய்யப் பார்க்கிறேன். நடந்ததை மறந்துவிட்டு, நடக்க வேண்டியதைப் பற்றி யோசனை செய்யுங்கள்.''

வருத்தத்துடன் சிரித்தான் குருசாமி.

''அண்ணா! நடிப்புத் தொழிலைத் தவிர வேறு எதற்குமே லாயக்கில்லாதவன் நான். இனி நான் எந்த வேலையைப் பழகிக் கொள்வது? பிழைக்கத் தெரிந்திருந்தால் நான் ஏன் இந்தக் கலையைக் கட்டிக் கொண்டு மன்றாடுகிறேன்!''

தன்னைப் பற்றிய விவரங்களைக் கூறி அவனுடைய மனத்தைத் திருப்பினான் முருகையன். விழுப்புரத்து ரயில் சந்திப்பில் கண்ட அந்தப் பெண்ணின் வீட்டில் இப்போது முருகையன் இருந்தது குருசாமிக்கு மகிழ்ச்சி தந்தது. ''என் விஷயம் கிடக்கட்டும், அண்ணா! சீக்கிரம் எனக்குக் கல்யாணச் சாப்பாடு போடுங்கள்'' என்றான் அவன்.

குருசாமியிடம் தன்னுடைய விலாசத்தைக் கொடுத்து விட்டு, தன் சட்டைப் பையிலிருந்த பணத்தை எடுத்து அவன் சட்டைப் பையில் திணித்தான் முருகையன். அடிக்கடி தன்னை வந்து பார்க்கும்படி சொல்லியனுப்பினான்.

குருசாமி சென்ற பிறகு, ஆவலுடன் வீட்டுக்குள் நுழைந்த முருகையன் சாந்தாவின் வீட்டில் அவள் தாயாரும் தங்கையும் பேசிக் கொண்ட செய்தியைக் கேட்டு, ஒரு கணம் திகைத்து நின்றான். உள்ளே நுழையவில்லை. குரல்கள் மட்டிலும் தெளிவாக ஒலித்தன. (தொடரும்)









**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிகைத்ஸ நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூர்ண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா




இரைப்பையில் மிதமிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கைவசக்கமான பாக்கெட்டுகளிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மானியுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

# அர்ப்பணம்

— நந்தா

வெயில் தகித்துக் கொண்டிருந்தது. அவனுடைய கைக் கடிகாரத்தில் மணி இரண்டு ஆகியிருந்தது. மூன்றரை மணி வரையில்தான் வீட்டைப் பார்க்க முடியும். இந்தச் சனிக்கிழமை விட்டு விட்டாலும் பிறகு பார்ப்பது அபூர்வம். அன்றைய தினப் பத்திரிகையிலிருந்து வெட்டியெடுத்த விளம்பரத்தைச் சட்டைப் பையிலிருந்து எடுத்து மீண்டும் ஒரு முறை படித்தான்.

''அந்தேரியில் வெர்சோவா ரோட் நம்பர் 712-ல் இரண்டு அறைகள், ஒரு ஹால் கொண்ட இடம் வாடகைக்குக் கிடைக்கும். வீட்டுச் சொந்தக்காரர்: கே. பி. கேஸ்வானி 282 கோட்பந்தர் ரோடு, சாந்தாக்ரூஸ். வீட்டை மாலை மூன்றரை மணி வரையில் வந்து பார்க்கலாம்.''

பம்பாயில் இப்படிப்பட்ட இடம் காலியாவதே அபூர்வம். அதிலும் காலியாகி இப்படிப் பத்திரிகையில் விளம்பரம் செய்ய வேண்டி வருவது அதைவிட அபூர்வம்.

ரமேஷ் இதுவரை அவனுடைய ஆபீஸிலேயே ஒரு மூலையில் பெட்டி படுக்கைகளை வைத்துக் கொண்டிருந்தான். சமீபத்தில் ஆபீஸ் இன்னொரு கட்டடத்துக்கு இடம் மாறிய போது இந்த வசதியில்லாமற் போய்விட்டது. அவனும் இந்தப் பம்பாயில் தேடாத இடம் இல்லை, சல்லடை போட்டுச் சலிக்காத இடம் இல்லை. ஆனால் குடியிருக்க இடம் என்பது மட்டும் கிடைக்கவே இல்லை. ஹோட்டல்களில் அறை எடுத்துக் கொள்வதைவிடப் பிளாட்பாரத்தில் வசிக்கலாம் போல் இருந்தது. எனவே இந்த விளம்பரத்தைப் பார்த்ததும் மனத்துக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது. எப்பாடுபட்டாவது இந்த இடத்தை நிச்சயம் செய்து கொண்டு விடுவது என்ற உறுதியுடன் கிளம்பினான்.

ரமேஷ் இதற்கு முன்பு அந்தேரிக்கு வந்த இல்லை. 'வெர்சோவா ரோடைக் கண்டு பிடித்து அதில் 712-ம் நம்பரைக் கண்டுபிடிப்பது என்றால் என்ன சாமானியமா? ஒருவாறு தட்டுத் தடுமாறிக் கொண்டு அந்த ரோட்டைக் கண்டுபிடித்து விட்டான். பிறகு அந்த நம்பரைத் தேடிக் கொண்டு அலைந்தான்.

சுமார் அரை மணி இப்படி அலைந்திருப்பான். ரோட்டில் ஒரு திருப்பம் தாண்டியதும் உள்ளடங்கிய கட்டடம் ஒன்று தென்பட்டது. வாசலில் ஒரு யுவதி காவல்காரனுடன் பேசிக் கொண்டிருந்தாள். அவர்களை விசாரித்தால் ஒருவேளை 712-ம் நம்பர் வீட்டைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்று ரமேஷ் நினைத்தான்.

'ஓ, பாயி!'

குரலைக் கேட்டு யுவதியும் கிழவனும் திரும்பிப் பார்த்தார்கள்.

ரமேஷ் கிழவனை அணுகி, ''712-ம் நம்பர் எங்கேயப்பா இருக்கும்?'' என்று வினவினான்.

காவல்காரக் கிழவன், ''நீங்களும் அந்தக் காலி இடத்தைத்தான் பார்க்க வந்திருக்கிறீர்களா, பாயி ஸாப்? இதுதான் 712-ம் நம்பர் வீடு'' என்றான் கொச்சை மராட்டியில்.

ரமேஷ் ஆவலுடன், ''ஆமாம், ஆமாம். எங்கே பார்க்கலாமா?'' என்று கேட்டான்.

அந்த யுவதிக்கு ஏனோ ரமேஷ் வருகையே பிடிக்க வில்லை. முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு அந்தக் கிழவனிடம், ''தாத்தா! நான் தான் இந்த இடத்தைப் பார்த்து விட்டுப் 'பிடித்திருக்கு. எடுத்துக் கொள்கிறேன்'னு சொல்லி விட்டேனே. பிறகு ஏன் எல்லாருக்கும் காட்டணும்? இவங்களை இடம் காலி இல்லைன்னு சொல்லி அனுப்பு'' என்று கூறினாள்.

ரமேஷ் அவளைச் சற்றே கூர்ந்து நோக்கினான். படித்தவள் என்று தெரிந்தது. மாநிறம்தான். கண்களில் அலட்சியம். அழகி என்று தான் சொல்ல வேண்டும்.

கிழவன், ''அதெல்லாம் முடியாது அம்மா! எங்க ஐயா எத்தனை பேர் வந்து கேட்டாலும் இடத்தைக் காட்டச் சொல்லியிருக்காங்க'' என்று அவளிடம் சொல்லி விட்டு ரமேஷ் பக்கம் திரும்பி, ''நீங்க வாங்க! இடத்தைக் காட்டறேன்!'' என்று அழைத்துச் சென்றான். அவன் பிழைப்பு. பாவம், ரமேஷிடம் 'ஏதாவது' கிடைக்கும் என்ற நம்பிக்கை.

அந்த யுவதியின் கண்களில் கனல் பறந்தது. குடையால் தரையில் ஓங்கி ஒரு குத்துக் குத்தி விட்டு வேகமாக வெளியே போனாள்.

ரமேஷ் இடத்தை நன்றாகச் சுற்றிப் பார்த்தான். இரண்டு பெரிய அறைகள். நடுவில் பெரிய ஹால். மாடி போர்ஷன். வாடகை ரூபாய் என்பது. 'பேஷ்!' என்று ஒருதரம் தனக்குள் சொல்லிக் கொண்டான். வீட்டைப் பார்த்து முடித்ததும் கிழவன் கையில் ஓர் எட்டணா நாணயத்தைக் கொடுத்து விட்டுக் கிளம்பினான்.

கிழவன் தலையைச் சொறிந்து கொண்டே, ''வந்த அம்மாவும் தனக்கு இவ்விடம் பிடித்திருக்குன்னு சொல்லி விட்டுப் போனாங்க. ஆனால் அவங்க உங்களுக்கு முன்னாடியே வீட்டுக்காரரைப் பார்த்து முடிவு பண்ணி விடுவாங்களே!'' என்று அங்கலாய்த்தான்.

''இருக்கட்டும். நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி விட்டு ரமேஷ் கிளம்பினான்.

அப்பொழுது ஒரு பேபி டாக்ஸி காலியாக அவனைத் தாண்டிச் சென்றது. அதைக் கைதட்டி அழைத்து ஏறிக்கொண்டான்.

வீட்டுக்காரன் தங்கியிருந்த 282-ம் நம்பர் கட்டடம் ஒரு சாதாரண சால் முறையில் கட்டப்பட்டிருந்த வீடுதான். டாக்ஸியிலிருந்து இறங்கியபின், ரமேஷுக்கு வீட்டுக்காரன் கேஸ்வானியின் இடத்தைக் கண்டு பிடிக்க அதிக நேரம் ஆகவில்லை. கதவைத் தட்டியதும் ஒரு பெண் வெளி வந்து யார் என்று கேட்டாள். தான் வந்த காரியத்தை ரமேஷ் விளக்கியதும், வீட்டுக்காரர் வெளியிலிருந்து வர இன்னும் அரை மணி ஆகும் என்று சொல்லி வாசலில் ஒரு பெஞ்சியைக் காட்டி விட்டுப் போய்விட்டாள். ரமேஷுக்கு இது ஒரு பெரிய ஏமாற்றமாகவே இருந்தது. 'பணம் செலவழித்து டாக்ஸியில் வந்தும் என்ன புண்ணியம்? வீட்டுக்காரன் வருவதற்குள் அந்தப் பெண்ணும் வந்துவிடுவாளே!' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

அவள் பயந்தபடியேதான் ஆயிற்று. பத்து நிமிஷங்களுக்குள் குடையை மடக்கியபடி உள்ளே வந்த யுவதி பெஞ்சியில் அமர்ந்திருந்த ரமேஷைக் கண்டு திடுக்கிட்டாள். தனக்கு முன் அவன் அங்கு எப்படி வந்தான் என்பதே அவளுக்குப் பெரும் புதிராக இருந்தது. ஒருகால் அவன் இதற்குள் வீட்டுக்காரரிடம் பேசி வீட்டைத் தனக்கு அமர்த்திக் கொண்டிருப்பானோ என்ற பயம் வேறு. ஆத்திரத்துடன் உதட்டைக் கடித்துக் கொண்டே கதவைத் தட்டினாள். அவளுக்கும் இதே பதில்தான் கிடைத்தது. 'உஸ்' என்று தலைப்பால் விசிறிக் கொண்டே பெஞ்சியின் இன்னொரு கோடியில் வந்து அழுத்தலாக உட்கார்ந்து கொண்டாள்.

ரமேஷ் அவளைப் பார்த்து விட்டு, அலட்சியப் புன்னகையுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

"மிஸ்டர்! 'பாந்த்ரா'வில் ஏகப்பட்ட 'எக்ஸ்டென்ஷன்' பண்ணி நிறையப் புது வீடுகள் கட்டி விருக்காங்களாம். அங்கே போய்த் தேடுங்களேன்!"

ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி அவனை அப்புறப்படுத்திவிட வேண்டும் என்ற துடிப்பு அவளுக்கு.

ரமேஷ் முகத்தில் கேலியான நகை ஒன்று அரும்பியது. அவன், "அது இருக்கட்டும்! உங்களுக்கு எந்த ஊர் பூர்வீகம்?" என்றான்.

அவள் சற்றுத் தயங்கி விட்டு, "மிராஜ் பக்கத்தில் மாதவ்பூர்" என்றாள். பிறகு, "ஏன் கேட்கிறீர்கள்?" என்றாள்.

"அங்கே போய் வீடு தேடுங்களேன். இதே வாடகைக்கு நல்ல பங்களா கிடைக்கும்."

"ஷட் அப்!" வார்த்தைகளை வெடித்துப் பேச்சை வெட்டினாள் யுவதி.

இதற்குள் வீட்டுக்காரன் கேஷ்வானி வந்து விட்டான். இவர்கள் முகத்தையும் பவ்யத்தையும் பார்த்தே இவர்கள் எதற்கு வந்திருப்பார்கள் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. முதலில் நேரே உள்ளே போய் விட்டான்.

இரண்டொரு நிமிஷங்களுக்குப் பிறகு வெளியே தலையை நீட்டி அந்த யுவதியை உள்ளே கூப்பிட்டான். அவள் கன அலட்சியமாக ரமேஷைப் பார்த்து விட்டு வெற்றிப் பெருமிதத்துடன் உள்ளே சென்றாள். ரமேஷ் முகத்தில் சுரத்தே இல்லை.

சற்றைக்கெல்லாம் வீட்டுக்காரன் யுவதியை வெளியில் இருக்கச் சொல்லி விட்டு ரமேஷை உள்ளே கூப்பிட்டான். அவனுடன் சில நிமிஷங்கள் பேசிவிட்டு மீண்டும் யுவதியை உள்ளே கூப்பிட்டான்.

அவர்கள் இருவரையும் வைத்துக் கொண்டு வீட்டுக்காரன் சொன்னான்: "நீங்கள் இரண்டு பேருமே வீட்டைக் கேட்கிறீர்கள். நான் யாருக்கென்று கொடுப்பேன்? உங்களுக்குள் யாராவது ஒருவர் தாமாகவே விலகிக் கொண்டால் தேவலே!"

இருவருமே பிடிவாதமாக இருந்தனர். இது அந்த வீட்டுக்காரனுக்கு நல்ல வாய்ப்பை அளித்தது. அவன் ஒரு சிந்திக்கார வியாபாரி. லாபம் அடிப்பது என்பது அவன் இரத்தத்தில் ஊறிப் போன ஒரு கலை.

'சரி! ஒருவரையுமே ஏமாற்ற எனக்கு இஷ்டமில்லை. பெரிய ஹாலைக் குறுக்கே மரத் திரையால் தடுத்து இரண்டாக ஆக்கி விடுகிறேன். உங்களுக்கு ஆளுக்கு ஓர் அறை. பாதி ஹால். வாடகை ஒவ்வொருவருக்கும் நாற்பத்தைந்து ரூபாய். என்ன சொல்கிறீர்கள்?" என்றான்.

ரமேஷும் யுவதியும் ஒரு நிமிடம் யோசித்தனர். பிறகு ஒருவரையொருவர் வெட்டிவிடுவது போல் பார்த்துக் கொண்டனர். 'சம்மதம்' என்றனர் முடிவில்.

கேஷ்வானியின் முகத்தில் திருப்தி நிலவியது. அவன் எண்பது ரூபாய் எதிர்பார்த்த இடத்துக்கு இப்பொழுது தொண்ணூறு ரூபாய் கிடைக்கிறதே!

அடுத்த வாரத்தில் ரமேஷ் தன் சாமான்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு அந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். அந்த யுவதி அவனுக்கு முன்பே தனி 'போர்ஷ'னுக்குக் குடி வந்து விட்டாள் போலும்! அவள் அறைக்கு வெளியே 'மிஸ். உஷா சித்ரே பி.ஏ.,' என்று எழுதிய போர்டு தொங்கியது.

ரமேஷ் சாமான்களை எடுத்து வரும் சத்தம் கேட்டு அவள் அறையிலிருந்து ஒரு கிழவி எட்டிப் பார்த்து விட்டு உள்ளே போய் என்னவோ சொன்னாள். உடனே அந்த யுவதி மிஸ் உஷா சித்ரே வந்து எட்டிப் பார்த்து விட்டு அலட்சியமாகக் கதவைத் தடாலென்று சாத்திக் கொண்டு போனாள். இந்த வரவேற்பைக் கண்டு ரமேஷ் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு தன் அறையில் நுழைந்தான்.

இரண்டு வாரங்கள் ஒருவருக்கொருவர் முகாலோபனம்கூட இல்லாமல் ஓடிவிட்டன. ரமேஷ் உஷாவின் நடமாட்டங்களிலிருந்து அவள் எங்கேயோ ஆசிரியையாகப் பணியாற்றுகிறாள் என்று ஊகித்துக் கொண்டான். அவளுடன் கூட இருக்கும் கிழவி அவளுக்கு ஏதோ தூரத்து உறவாகத்தான் இருக்க வேண்டும்.

ஒரு நாள் மாலையில் ரமேஷ் தன் அறையிலிருந்த பிரம்பு நாற்காலியில் அமர்ந்து ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தான். அப்பொழுது ன்னல் வழியே "மிஸ்டர்!" ன்று குரல் கேட்டது.

ரமேஷ் வெளியே வந்து பார்த்தான். உஷா நின்றிருந்தாள். அவள் கையில் ஒரு ஆரஞ்சு கிரஷ் புட்டி இருந்தது. "உங்களிடம் 'இடுக்கி' இருக்குமா?" என்று கேட்டாள்.

"இல்லையே! எதற்கு?"

"இந்தப் பாட்டிலைத் திறக்க முடியவில்லை" என்று புட்டியைக் காட்டினாள். ரமேஷ் அதை வாங்கிப் பார்த்தான். காற்றுப் புகமுடியாதபடி அமைக்கப்பட்டிருந்த இங்கிலீஷ் கம்பெனி



புட்டி அது. ரமேஷ் அதைக் கதவிடுக்கில் வைத்து அழுத்தமாகத் திருகினான். 'டப்' என்ற சத்தத்துடன் மூடி மேலே விழுந்தது. 'தாங்க்ஸ்' என்று சொல்லி விட்டு உஷா பாட்டிலை வாங்கிக் கொண்டு போனாள்.

சற்றைக்கெல்லாம் உஷாவின் அறைக் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. உஷா திறந்து பார்த்த போது ரமேஷ் நின்றிருந்தான்.



''இதைப் போட்டு விட்டுப் போய் விட்டீர்களே! இந்தாருங்கள்'' என்று நீட்டினான்.

அவன் கையில் அந்தப் புட்டியிலிருந்து விழுந்த ரப்பர் வளையம் இருந்தது. பைசா கூடப் பெறாத விஷயம். ரப்பரை மேஜை மீது வைத்து விட்டு ரமேஷ் திரும்பினான்.

சட்டத்தின் ஆட்சியையும் சுதந்திர வாழ்வினுள்ள நம்பிக்கையையும், பொருள் ஈட்டவும் அதனைக் காக்கவும் பெற்றுள்ள உரிமையையும் சிதைக்க இடமளித்து விட்டோமானால் இந்த நாச வேலை ஓரிடத்தில் நில்லாமல் எங்கும் பரவிப் போகும். உரிமைகளைப் பறிக்கும் முதல் தலையீடானது ஒரு சாய்மான தளத்தில் உருள விட்ட வஸ்துவைப் போலத் தடையேது மின்றிச் செல்லும்; தன் போக்கிலேயே மேலும். வேகமும் வலுவும் பெறும். அதே சமயத்தில் சுதந்திரமும் அதோ கதியில் செல்லும். - ராஜாஜி

அவனது குறும்பைக் கண்டு உஷாவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. "அவ்வளவு கர்வம்!" என்று உறுமினாள்.

வைரம் வைரத்தை வெட்டாதா? இரண்டு மூன்று நாட்கள் சென்றதும் ஒரு நாள் ரமேஷுக்குத் தலைவலியும் ஜுரமுமாக இருந்தது. அன்று விடுமுறை. ரமேஷ் ஜுரத்துக்கு மருந்து வாங்கிக் கொண்டு வந்தான். அறைக்குக் கொண்டு வந்து 'கார்க்'கைத் திறந்ததும் 'குப்'பென்று மருந்தின் கசப்பு வேகம் ஆளையே புரட்டி எடுத்தது. இதை அவன் விழுங்கியாக வேண்டுமே?

சற்று யோசனை செய்து விட்டு, மருந்துப் புட்டியுடன் உஷாவின் அறையை நோக்கி நடந்தான்.

உஷாவிடம் புட்டியைக் காண்பித்து, "ரொம்பக் கசக்கும் போலிருக்கிறது. உங்களிடம் கொஞ்சம் சர்க்கரை இருக்குமா?" என்று கேட்டான்.

உஷா "இல்லையே!" என்றாள். பிறகு "வெளியில் ஏதாவது பலசரக்குக் கடைகளில் கேட்டுப் பாருங்கள். கிடைக்கும்" என்று சொல்லிவிட்டு வெற்றிப் பெருமிதத்துடன் கதவைச் சாத்திக் கொண்டு போனாள். ரமேஷ் ஏனோ ஆத்திரப்படவில்லை. ஒரு குறு நகையுடன் திரும்பினான்.

ரமேஷுக்கு அவளுடைய மிடுக்கான பேச்சும் துடுக்குத்தனமும் அவள் மேல் வெறுப்பை வளர்ப்பதற்குப் பதில் மேன்மேலும் அக்கறையையும் ஆதரவையும் தான் வளர்த்தன. 'அதுவும் கோபம் சீறிக் கொண்டு வரும் பொழுதுதான் அவள் முகம் எத்தனை அழகாக இருக்கிறது? இந்த மின்வெட்டுக்காக வேணும் தன்னிடம் அடிக்கடி கோபிக்க மாட்டாளா?' என்று கூட ஒரொரு சமயம் எண்ணினான்.

இன்னொரு நாள் காலை. உஷா வேகமாக ரமேஷ் இருந்த அறைக்குள் நுழைந்தாள். அவள் கையில் சில காகிதங்கள் இருந்தன. ரமேஷிடம் அவற்றை நீட்டி உஷா, "மிஸ்டர் நான் ரயில்வேயில் பிரயாணிகள் வழி காட்டி வேலைக்கு விண்ணப்பம் போடப் போறேன். இதோ என் சர்டிபிகேட்டுகளையும் அவற்றின் நகல்களையும் தருகிறேன். அவற்றைச் சரி பார்த்து உண்மையான நகல் என்று கையொப்பமிட்டுத் தருகிறீர்களா?" என்று கேட்டாள்.

ரமேஷுக்கு ஏனோ மனம் சற்றுக் கலங்கியது. அவள் வேறு வேலைக்குப் போவதில் இவனுக்கு என்ன தாபம்?

அவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "உட்காருங்கள் மிஸ் உஷா! இந்த வேலை ரொம்பக் கஷ்டமாக இருக்குமே! ஏன், இப்பொழுது இருக்கும் உபாத்தியாயினி வேலை பிடிக்கவில்லையா?" என்று கேட்டான்.

"ஆமாம்! பிடிக்கவில்லை!"

"ரயில்வே என்றால் ஊருக்கு ஊர் உங்களை மாற்றுவார்களே!"

"ஆமாம்."

"கண்ட சாப்பாட்டைச் சாப்பிட வேண்டியிருக்குமே?"

"மிஸ்டர்! உங்களுக்குச் சௌகரியப்படாது என்றால் நான் இவற்றை வேறு யாரிடமாவது" என்று உஷா ஆரம்பித்தாள். அவள் அதுவரையில் பொறுமையாக இருந்ததே ஆச்சரியம் இல்லையா? மேலே பேசாது ரமேஷ் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தான்.

உஷாவுக்குத் தன்னுடைய மனப்போக்கு விசித்திரமாகத்தான் பட்டது. மராட்டியப் பெண்களுக்கே என்றும் அஞ்சாநெஞ்சம் உண்டு. அதிலும் உஷா படித்தவள். அவள் பெற்றோர் கோவாவில் இருந்தனர். அங்கே அவர்களுக்குச் சொந்தமாக ஒரு புத்தகக் கம்பெனி உண்டு. உஷா மட்டும் பம்பாயில் கல்லூரியில் பி. ஏ. படித்துத் தேறியதும் அங்கேயே உபாத்தியாயினி வேலையைத் தேடிக் கொண்டாள்.

பம்பாய்க்கருகில் எலிபெண்டா என்னும் ஒரு தீவு இருக்கிறது. அது இயற்கை எழில் நிறைந்தது. உஷா வேலை பார்த்து வந்த பள்ளியின் மாணவிகளுடன் உபாத்தியாயினிகளும் உல்லாசப் பிரயாணம் போவதென்று ஏற்பாடாயிற்று. ஓர் ஞாயிற்றுக்கிழமை எல்லோரும் புறப்பட்டார்கள்.

எலிபெண்டா தீவில் விடுமுறையைக் கழித்து விட்டுத் திரும்பும்பொழுது உஷாவின் இடது கால் கட்டை விரலில் முள் ஒன்று ஆழமாகத் தைத்து விட்டது. உஷா வழக்கமான அலட்சியத்துடன் அந்த முள்ளைப் பிடுங்கி எறிந்தாள். ஆனால் அந்த முள்ளின் ஒருபாகம் சதையிலேயே ஆழத்தில் தங்கி விட்டது.

மறுநாள் மத்தியானத்திலிருந்து உஷாவுக்கு இடது கால் கட்டை விரல் 'விண் விண்' என்று தெறித்தது. அதையும் லட்சியம் செய்யாது வேலைகளைக் கவனித்தாள்.

அன்றிரவு முழுவதும் அவளுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. முனகிக் கொண்டே புரண்டு புரண்டு படுத்தாள். கால் முழுதும் குத்து வலி. இடையிடையே சோர்வுற்றுத் தன்னையு மறியாமல் தூங்கினாலும் ஏதேதோ பிதற்றிக் கொண்டே யிருந்தாள்.

அவளுடன் இருந்த கிழவிக்குப் பயம் வந்து விட்டது. இரவில் தட்டுத்தடுமாறிக்கொண்டு வந்து ரமேஷ் இருந்த அறையைத் தட்டினாள்.

ரமேஷ் வந்து பார்த்த போது உஷா துவண்டு போய்க் கிடந்தாள். அவளுடைய அழகிய பாதம் இன்று ஓரேயடியாக வீங்கிக் கிடந்தது. இடது கால் கட்டை விரலில் சீழ் கோத்துக் கொண்டு மஞ்சள் கலந்த வெண்மை நிறம் ஏறிப் போயிருந்தது. 'சுர்' என்று குத்துவலி ஏற்படும்பொழுதெல்லாம்

இன்று நாடெங்குமுள்ள காங்கிரஸ் எஜமானர்கள் மக்களுடைய பிரத்யேக வாழ்க்கையிலும் உழைப்பிலும் நுழைந்து விட்டு ஆதிக்கம் செலுத்துகிறார்கள். நம் நாடு சுதந்திரக் கட்சியைப் பின் பற்றினால் தான் இவர்களுடைய இந்த அதிகாரம் அழியும். அப்போது, வியாபாரத்திலும் தொழிலிலும் ஈடுபட்டுள்ள யோக்கியமானவர்கள் இன்று 'சட்டப்படியும்' சட்டத்துக்குப் புறம்பாகவும் ஆளாகி வரும் கெடுபிடிகளிலிருந்து மீட்சி பெறுவார்கள். இன்று நாம் தர்மத்தைக் கேலிசெய்து மகிழலாம்; ஆனால் தர்மம் பழிவாங்க முற்பட்டால் அதன் விளைவு பயங்கரமாக இருக்கும் — ராஜாஜி

உஷா படுக்கையினின்றும் எழும்பியே குதித்தாள். நல்ல ஜுரம்.

விடியற்காலை ரமேஷ் வெளியே சென்று தனக்குத் தெரிந்த டாக்டரை அழைத்து வந்தான். டாக்டர் வந்து பரிசோதித்து விட்டு ஓர் ஊசி போட்டார். இரண்டொரு நாட்களில் வீக்கம் தணியாவிடில் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொல்லி விட்டுப் போனார்.

அவர் போனதும் ரமேஷ் ஒரு காகிதத்தைக் கொடுத்து உஷாவை அதில் கையெழுத்திடச் சொன்னான். உஷா வாங்கிப் பார்த்தாள். லீவு லெட்டர்! ஒரு வாரம் அவளுக்கு லீவு கோரிக் கடிதம் எழுதியிருந்தான். கையெழுத்திட்டுக் கொடுத்தாள். அவன் செய்கையிலும் இங்கிதமானதாகப் பட்டது அவளுக்கு.

இரண்டு நாட்கள் சென்றன. கால் வீக்கம் முன்னைக் காட்டிலும் பெரிதாகி விருந்ததே யொழிய குறையவில்லை. அன்றே ஆபரேஷன் செய்து விடுவதுதான் நலம் என்று டாக்டர் அபிப்பிராயப் பட்டார்.

உஷாவுக்கு ஆபரேஷன் என்றதும் ஒரே திகில். 'ஐயோ! மாட்டேன், வேண்டாம், முடியாது' என்றெல்லாம் கத்திப் பார்த்தாள். ஆனால் ரமேஷின் திடமான தீர்மானத்துக்கு எதிராக அவளால் தன் காலை விரலைக்கூட ஆட்ட முடியவில்லை....

மாலை ஆறு மணிக்குத்தான் உஷாவுக்குப் பிரக்ஞை வந்தது. காலில் வீக்கம் இருந்த இடத்தில் பெரிய கட்டு கட்டப்பட்டிருந்தது.

அவள் இருந்த வார்டில் வேறு கட்டில்கள் கிடையாது. ரமேஷ் இவளுக்கு முதுகுப்புறத்தைக் காட்டியபடி ஒரு புத்தகத்தில் ஆழ்ந்து போயிருந்தான். காலையில் அணிந்திருந்த அதே சட்டை. 'ஆபீசுக்கே போகவில்லை போல் இருக்கு!' என்று எண்ணினாள்.

இவ்வளவு தூரம் தனக்காகச் சிரமத்தைப் பாராட்டாது உழைத்திருக்கிறாரே என்ற நன்றியுணர்ச்சி அவளுடைய இதயத்தின் அடித்தளத்தில் வெறுப்பில் கட்டிவிட்ட கல் மாதிரி இருந்தது. ஜலத்தை இறைத்தால் தானே கல் தெரியப் போகிறது?

மறு நாளே உஷாவை ஆஸ்பத்திரியிலிருந்து 'டிஸ்சார்ஜ்' செய்து விட்டார்கள். ஆனால் வீட்டுக்குள்ளேயே மெள்ள மெள்ள நடமாடலாம் என்றும் வேலைக்குப் போக இன்னும் பத்து நாட்கள் செல்ல வேண்டும் என்றும் டாக்டர் சொல்லி விட்டார்.

சில நாட்கள் படுக்கையிலேயே கழிந்தன. பிறகு அறைக்குள்ளேயே மெள்ள நடமாடி வந்தாள். ஒரு நாள் ஆபீசுக்குச் செல்கையில் ரமேஷ் வேலைக்காரியிடம் இரண்டு கடிதங்களைக் கொடுத்து, "உங்க அம்மாவிடம் கொடு. அவள் ஆஸ்பத்திரியில் இருந்தபோது வந்தவை" என்று சொல்லி விட்டுப் போனான்.

முதல் கடிதத்தைப் படித்ததும் உஷாவுக்குக் கோபம் குமுறிக் கொண்டு வந்தது. விஷயம் இதுதான். அவளுடைய ஆருயிர்த் தோழி விந்து எழுதியிருந்தாள். அவள் முந்தின வாரம் உஷாவைத் தேடிக் கொண்டு வந்ததாகவும், ஆனால் அவளுக்கு உடம்பு சரியில்லை, பார்க்க முடியாது என்று பக்கத்து அறை இளைஞன் கண்டிப்பாகச் சொல்லி அவளை அனுப்பி விட்டதாகவும் எழுதி அவள் உடம்புக்கு என்ன என்று கேட்டு விசாரித்திருந்தாள்.

உஷா, "மானர்ஸ் தெரியாத ஆசாமி! தேடி வந்தவளைத் திருப்பி அனுப்ப இவருக்கு என்ன உரிமை? எல்லாம் தலைக்கு மீறிப் போகிறது" என்று இரைந்தாள், ரமேஷ் அறையைப் பார்த்து. ஆனால் அவன் அங்கு இருந்தால்தானே?

அடுத்த கவரைப் பிரித்ததுதான் தாமதம். உஷா ஓர் எரிமலையாகவே மாறி விட்டாள். அந்தக் கடிதத்தில் அவள் முன்பு விண்ணப்பித்திருந்த வேலைக்கு வந்து சேரும்படி எழுதியிருந்தது. ஆனால் கடிதத்தில் கண்டிருந்த கடைசித் தேதி முடிந்து மூன்று நாட்கள் ஆகியிருந்தன. 'அவள் அந்த வேலைக்குப் போவதில் ரமேஷுக்கு விருப்பமில்லை. எனவே கடைசித் தேதி முடியும் வரை வைத்திருந்து விட்டுக் கொடுத்திருக்கிறான். என்ன நெஞ்சழுத்தம்!'

உஷாவின் மனத்தில் ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வழிந்தோடியது.

அன்றிரவு ரமேஷ் வீடு திரும்பும்போது மணி ஒன்பது ஆகி விட்டது. அவன் குடையை மடக்கிக் கொண்டு உள்ளே போன போது உஷா அவனையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'இருக்கட்டும்! ஆசாமி சாப்பிட்டு முடிக்கட்டும்! இரண்டில் ஒன்றை முடித்து விடுகிறேன்!' என்று கறுவினாள்.

ரமேஷ் அறையை நெருங்கியதும் அவள் மனம் 'படக், படக்' என்று அடித்துக் கொண்டது. வராந்தா விளக்கைப் போட ஏனோ இஷ்டமில்லை. அவள் அறை ஜன்னல் வரை வந்ததும் ஜன்னல் வழியே உள்ளே எட்டி நோக்கினாள்.

உள்ளே சாய்வு நாற்காலியில் சோர்வுடன் சாய்ந்த ரமேஷ் தன்னையறியாமற் தூங்கிப் போய் விட்டான். விளக்கு எரிந்து கொண்டு தான் இருந்தது.

வைத்த கண் வாங்காது உஷா அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனது தூக்கத்திலும் ஒரு காம்பீர்யம் இருக்கத்தான் செய்தது. அவள் உள்ளத்தில் சற்று முன்பு கூறிய ஆத்திரம் ஏனோ இப்பொழுது உருகி ஓடி விட்டது. ஆனால் அவனை எழுப்ப மன



திட்டம் போட்டு நாட்டைத் திருத்தப் போறோம் என்று முட்ட முட்டக் கடனில் மூழ்கி நிற்கும் கட்சி.

மின்றி வந்த சுவடு தெரியாமல் தன் அறைக்குத் திரும்பினாள்.

படுக்கைக்கு வந்து உட்கார்ந்து, ஒரு தலையணையை மடியில் வைத்துக் கொண்டு, முழங்கைகளை அவற்றில் நட்டு முகத்தைப் பதித்துக் கொண்டாள். இரவு வெகு நேரம் வரை ரமேஷைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள். அவளை அறியாமல் தூக்கம் அவளைத் தழுவிய பொழுது மணி இரண்டு.

மறுநாட் காலை வழக்கம் போல் ரமேஷ் வந்து அவளுக்கு மருந்தை ஊற்றிக் கொடுத்து விட்டுப் போய் விட்டான். அன்று மாலை ரமேஷ் மீண்டும் அவளது அறைக்குள் வந்தான். அவன் கையில் ஒரு தோல் பெட்டி இருந்தது. அதை அறை வாசற்படியருகில் வைத்து விட்டு உஷாவின் கட்டிலருகே வந்து நின்றான். 'என்ன?' என்ற பாவனையில் உஷா அவனை ஏறிட்டு நோக்கினாள்.

ரமேஷ், ''உனக்குக் கால் அநேகமாகச் சரியாகி விட்டது. இன்னும் இரண்டு மூன்று நாட்களில் வேலைக்குப் போகலாம் என்று கூட டாக்டர் சொல்லி விட்டார். நான் ஆபீஸ் விஷயமாக இரவு வண்டியில் புனாவுக்குப் போகிறேன். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்'' என்று சொன்னான்.

அவன் ஊருக்குப் போகிறான் என்பதைக் கேட்டதும் ஏனோ உஷாவின் மனம் துணுக்குற்றது. எப்படியோ சமாளித்துக் கொண்டு உஷா, ''திரும்பிவர எத்தனை நாட்கள் ஆகும்?'' என்று கேட்டாள்.

ரமேஷ், ''சுமார் ஐந்தாறு நாட்கள் ஆகும். ஒரு சின்ன உதவிசெய்ய முடியுமா?'' என்று தயங்கியபடியே கேட்டான்.

''சொல்லுங்கள், செய்கிறேன்!''

அவனுக்குத் தன்னால் ஒரு காரியம் ஆக வேண்டியிருப்பதைப் பற்றிச் சந்தோஷப்பட்டாள்.

''புனாவில் நான் இருக்கப் போகும் விலாசம் இதோ இந்தக் காகிதத்தில் எழுதியிருக்கிறேன். என் பெயருக்குக் கடிதங்கள் ஏதாகிலும் வரும். அவற்றைப் பிரித்துப் படித்து விட்டு அவசர விஷயங்கள் ஏதாகிலும் அடங்கியிருந்தால் அந்தக் கடிதங்களை அனுப்பி வை.''

''உங்களுடைய கடிதங்களை நான் படித்துப் பார்ப்பதா? அது அவ்வளவு நாகரிகமான செயல் அல்லவே?''

''நானே அனுமதிக்கும் பொழுது அதில் எவ்விதத் தவறும் கிடையாது.''

''அதற்குப் பதில் எல்லாக் கடிதங்களையும் 'ரீ டைரக்ட்' பண்ணி விடுகிறேனே!''

''வேண்டாம்! எனக்கு அங்கு மூச்சுவிடக் கூட நேரம் இருக்காது. அதனால்தான் இப்படிச் சொல்கிறேன்.''

''சரி'' என்று உஷா ஒப்புக் கொண்டாள். ரமேஷ் கிளம்பினான்.

ரமேஷ் கைக் குட்டையால் பெட்டியின் பிடியைத் தூக்கிக் கொண்டு நடந்தான். தெருவின் திருப்பத்தில் லாந்தர் கம்பம் அருகில் நின்று பெட்டியை இடது கையிலிருந்து வலது கைக்கு மாற்றிக் கொள்ளும்போது யதேச்சையாகத் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் உஷா வராந்தாவின் கைப்பிடியில் இருந்த தூணின் மேல் சாய்ந்து கொண்டு தன்னையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ரமேஷ் முகத்தில் அவனையுமறியாது ஒரு முறுவல் பூத்தது.

இரண்டு நாட்கள் மெல்ல நகர்ந்தன. உஷாவுக்குப் பொழுதே போகவில்லை. கிடைத்த புத்தகங்கள், பத்திரிகைகள் யாவும் படித்தாகி விட்டது. மனமோ அவள் கட்டுக்கும் மீறி ரமேஷின் வருகையையே எதிர் பார்த்துக் கொண்டிருந்தது.

தபால்காரன் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான். உஷா எடுத்துப் பார்த்தாள். ரமேஷ் பெயருக்குத்தான் வந்திருந்தது. ஆனால் ரமேஷ் வற்புறுத்திச் சொல்லியிருந்ததால் பிரித்துப் பார்த்தாள். அவனுடைய தந்தை எழுதியிருந்தார்.

பிரியமுள்ள ரமேஷ்!

நான் முன்பே எழுதியிருந்தபடி பண்டரிபுரம் ரிஜிஸ்ட்ரார் தன் பெண் விமலாவை உனக்குக் கொடுக்கும் விஷயமாக அடிக்கடி வற்புறுத்தி வருகிறார். நீயும் விமலாவும் ஒரு முறை பரஸ்பரம் பார்த்துக் கொண்டீர்களானாலும் மேற்கொண்டு முடிக்கலாம். உன் இஷ்டத்தைத் தெரிவி. நான் எதையும் வற்புறுத்துவதாக எண்ணாதே. உன் திருமண விஷயத்தில் உன் விருப்பத்துக்கு மாறாக எதுவும் நடக்காது.

அப்பா

உஷா நிலை குலைந்து சிலையென நின்றாள்.

ஒருவித ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. ''யாரோ யாரையோ கல்யாணம் செய்து கொண்டால் எனக்கு என்ன? எக்கேடு கெட்டுப் போகட்டுமே'' என்று கடிதத்தைப் படுக்கையிலிருந்த படியே மேஜை மேல் விசிறி எறிந்தாள். அதற்குப் பிறகு உஷாவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை.

மறுநாளும் ரமேஷ் பெயருக்கு இன்னும் இரண்டு கடிதங்கள் யாரோ நண்பர்களிடமிருந்து வந்தன. அவற்றில் முக்கிய விஷயம்

ஏதுவும் இல்லை. அதனுல் அவற்றை அப்படியே வைத்தான்.

வெளியே அடை மழை. விண்ணகமே உஷாவின் நிலைக்கு இரங்கித்தான் இப்படிப் பொழிந்து கொண்டிருந்ததோ? தெருவெல்லாம் முழங்கால் அளவுக்கு ஜலம் ஓடியது.

அடாது மழை பெய்ததன் காரணமாகத் தொடர்ந்து வேலை செய்ய முடியாது ரமேஷ் அன்று மாலையே பம்பாய்க்குத் திரும்பி விட்டான். முழங்கால் வரை நிஜாரை மடக்கி விட்டுக் கொண்டு உல்லாசமாக 'விசில்' அடித்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்த அவனை உஷா முறைத்துப் பார்த்தாள்.

அவன் தன் அறைக்குப்போய்க் கால் மணி இருக்கும். உஷாவுக்கோ இருப்புக் கொள்ளவில்லை. "தானே உள்ளே வந்து தனக்கு ஏதாவது கடிதம் இருக்கிறதா என்று கேட்கட்டுமே" என்றுதான் முதலில் எண்ணினுள். ஆனுல் ஏதோ ஓர் இனந் தெரியாத ஆவல் கட்டுமீறிக் கொண்டு வந்தது. கடிதங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு ரமேஷின் அறையை நோக்கி நடந்தாள்.

'ஹலோ' என்று ரமேஷ் வரவேற்ருன். அவள் கையிலிருந்த கடிதங்களைப் பார்த்து விட்டு, 'ஓஹோ! கடிதங்கள் வந்தனவோ?' என்று கேட்டான்.

உஷா அவனுடைய [நண்ப]ர்கள் எழுதியிருந்த இரண்டு கடிதங்[களை]யும் அவனிடம் கொடுத்தாள். அவன் தந்தையிடமிருந்து வந்ததை மட்டும் கொடுக்க ஏனோ தயங்கினுள்.

ரமேஷ் அந்த இரண்டு கடிதங்களையும் படித்து முடித்து விட்டு, "அவ்வளவுதானு?" என்று வினவினுன்.

உஷா தடுமாறிக் கொண்டே, "இதோ இன்னென்றும் இருக்கிறது" என்று அந்தக் கடிதத்தை நீட்டினுள்.

சுருக்கமான அந்தக் கடிதத்தைப் படித்ததும் ரமேஷ் உஷாவின் முக வாட்டத்துக்கான காரணத்தை நன்கு புரிந்து கொண்டான். 'பாவம், பேதை?' என்று மனத்துக்குள் சிரித்துக் கொண்டான்.

சற்று நேரம் மௌனமாகக் கழிந்தது. ஆழமான, அர்த்த புஷ்டியான அந்த மௌனத்தை ஓர் அபலைப் பெண்ணுல் எத்தனைநேரம் சகித்துக்கொண்டிருக்க முடியும்?

உஷா கேட்டாள்: "சாங்லிக்குப் போகப் போகிறீர்களா?"

"எதற்கு?"

"எதற்கா? உங்க அப்பா எழுதியிருக்கிருரே அதுக்கு."

"ஓ! அதுவா!" வேண்டுமென்றே ரமேஷ் சிரித்து மழுப்பினுன்.

உஷாவுக்கு மிகவும் தர்மசங்கடமாக இருந்தது. இரண்டு நிமிஷங்கள் கழித்து அவளே தொடர்ந்தாள். "நீங்கள் இதற்கு முன்பு பார்த்ததுண்டா?"

"எதை, யாரை?"

"அந்தப் பெண் விமலாவை."

"கிடையாதே!"

"போய்ப் பார்ப்பீர்களா?"

"அப்பா எழுதியிருக்கும்போது என்ன செய்வது?" அவன் பக்கம் திரும்பாமலே இப்படிப் பேசிக் கொண்டிருந்தான்.

மீண்டும் மௌனம், அடை மௌனம். சற்றைக்கெல்லாம் ரமேஷ் திரும்பிப் பார்த்தான். உஷா வாசற்புற ஜன்னலருகே முதுகைக் காட்டியவாறு நின்றிருந்தாள்.

ரமேஷ் மனத்தில் ஒரு சந்தேகம் எழவே, நடந்து சென்று தைரியமாக உஷாவின் தோள் பட்டையில் கைவைத்து அவளைத் திருப்பினுன்.

உஷாவின் கண்களிலிருந்து ஊற்றெடுத்த நீர் மின்சார விளக்கில் பளபளத்தது.

உஷாவின் கைகளைப் பற்றியவாறு ரமேஷ் சொன்னுன். "உஷா! எனக்குத் தெரியும் உன் உள்ளம்! நீயே உன்னை எத்தனை காலத்துக்கு ஏமாற்றிக் கொள்ள நினைக்கிருய்? நெருப்புக் கோழி முகத்தை மூடிக் கொண்டாற் போல நீ என்னை விரும்பவில்லை என்று சொல்லிக் கொண்டால் போதுமா? ஆனுல் உன் உள்ளம் என்னிடம் இருப்பது தெரியாதா? பிறர் பேசுவதை வேண்டுமானுல் கேட்காமலிருக்கக் காதைப் பொத்திக் கொள்ளலாம். ஆனுல் உன் உள்ளத்தின் எதிரொலியை உன்னுல் எப்படித் தடுக்க முடியும்? என் உள்ளம் உன்னைத்தான் நினைக்கிறது, நாடுகிறது. உன் உள்ளமும் அது போலவே என்று அறிவேன். 'இல்லை' என்று சொல்லி உன்னையே ஏமாற்றிக் கொள்ளாதே. இந்தா, என்னை நீயே எடுத்துக் கொள்!"

ரமேஷ் நீட்டிய கரங்களில் உஷா கொழு கொம்பை விட்டு நழுவிய கொடியெனத் தஞ்சம் புகுந்தாள்.



சீரான ஆகாரமில்லாததால்
நீங்கள்
மெலிந்திருக்கிறீர்களா?

# ஆல்போஸாங் சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது
சாதாரண உணவுடன் சேர்ந்து
சிக்கனமான, விஞ்ஞான முறையில்
ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினல் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்

# மலச்சிக்கலும் மூல வியாதியும்

மூல வியாதி அல்லது மலக் குடலின் உட்புறம் வெளிப்புறமுள்ள இரத்தக் குழாய்கள் வீங்குவதன் மூலம் ஏற்படும் இரத்தப் பெருக்கு. இவை உண்டாவதற்குக் காரணம் அடிக்கடி ஏற்படும் மலச்சிக்கல் உபாதையின் காரணமாக மல நிவர்த்தி செய்ய மிகவும் கஷ்டமாகவும் உபத்திரவமாகவும் இருக்கிறது. மலச் சிக்கல் அதிகமாகி, வலியை உண்டாக்கும். சரும வெடிப்புகளுடன் மூல வியாதியும் அதிகமாகிறது. மூல வியாதியின் தொல்லை ஒழிந்தால் தான் குடலிலிருந்து அசுத்தங்களை வெளியேற்றுவது சுலபமாகும். ஹெமடன்ஸா அதைத்தான் செய்கிறது. வலியையும் நமைச்சலையும் அகற்றி நிச்சயமாக நிவாரணமளிக்கிறது. அதனைத் தொடர்ந்து உபயோகிப்பதால், மூலம் சுருங்கி நிவாரணம் கிடைக்கின்றது. பிரசித்தி பெற்ற ஜெர்மன் மூல நிவாரணியான ஹெமடன்ஸாவில் அவயவத்தை மறத்துப் போகும்படி செய்யக் கூடிய மருந்து ஒன்றும் சேரவில்லை. துணியில் கறையுண்டாக்காது. உபயோகிப்பதும் சுலபம். ஒவ்வொரு மருந்துப் பெட்டியிலும் ஒரு சிறு பிளாஸ்டிக் மூக்குக் குழாயும், அதனை உபயோகிக்கும் முறைகள் அடங்கிய குறிப்பும் உண்டு. மூல வியாதி என்றால் அதற்கு ஹெமடன்ஸா தான் ஏற்ற மருந்து. இன்றே ஹெமடன்ஸா உபயோகித்துப் பாருங்கள். இப்போது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது.

OZ-95.

# ரத்த பாசம்

ஏ. வி. வி.

"ஏன்னே! வேலுத் தம்பி, தன் செத்துப் போன அண்ணனைப் போயி பார்க்கக் கூட இல்லியாமே, கேட்டியா கதையை. ரத்த பாசம் கூடவல்லே இல்லாது போயிடுச்சு."

"ஆமாண்ணே ஆமாம். இப்பக் கூடத் தான் மனிசன் செத்து அந்த நாளிகை நேர மாயிடுச்சு அந்த வீட்டுப் பக்கம் எட்டிக் கூடப் பாக்கலியாமே. என்ன அண்ணன் தம்பி களோண்ணே. நீங்க சொல்றது போல ரத்த பாசங்கூடவா இருக்காது! கட்டையைத் தூக்கிப் போட்டுக் கொள்ளி போடக்கூட ஆள் இல்லியே. அநாதைப் பிணமான்னு கிடக்கு."

இந்தச் சம்பாஷணை முருக்கம்பட்டி வட்டாரத்திலேயே பெருந்தலையாக விளங்கி இரண்டு மணிக்கு முன் காலனின் கரமெய்தி நிம்மதியாகக் கண்ணை மூடிக்கொண்டு, கடல் போன்ற மாடி வீட்டின் வாயில் நடையில் கால் நீட்டிக் கைகுவித்து நிலையில் கொண்ட முருகேச முதலியாரைப் பற்றி அவ்வூர்க் குடியானவர் இருவர் பேசியதே ஆகும்.

முருகேசர் அவ்வூர்ப் பஞ்சாட்சர முதலியாரின் மூத்த மகனார். அவரது தம்பிதான் வேலுத்தம்பி என்று அழைக்கப்படும் வேலு முதலி. தம் தந்தை தமக்கு வைத்த பத்து ஏக்கரா நிலத்தையும் தன்னிரு பிள்ளைகளுக்கும் தர எண்ணி வாழ்நாளெல்லாம் உழைத்துப் பொருளீட்டி ஆளுக்குப் பத்து ஏக்கர் நிலம் விதம் தந்தே மறைந்தார் பஞ்சாட்சர முதலி. அவர் இறந்த போது பெரிய மகன் முருகேசனுக்கு வயது இருபத்தெட்டு. இளையவன் வேலு முதலிக்கு வயது பதினெட்டு. இடையில் இரண்டு குழந்தைகள் பிறந்து மறைந்து விடவே தான் இவ்வளவு வயது வித்தியாசம் ஏற்பட்டது இவ்விருவரிடையே. தாய் அதன் பின்பு தந்தை என் இருவரும் இறந்துவிடவே தாயாகவும் தந்தையாகவும் இருந்து வேலுவைக் காப்பாற்றி வந்தார் முருகேசன்.



முருகேச முதலியாரிடம் சிறு வயது முதல் பெருஞ் சிக்கனம் உண்டு. காலணா செலவழிக்க நெடு நேரம் யோசிப்பார். அரையணாச் செலவுக்கும் ஆயிரம் முறை கணக்குப் பார்ப்பார். அதனால் அவருக்கு அவ்வூரில் வடிகட்டிய கஞ்சன் என்ற பட்டம் கிடைத்து விட்டது. தந்தை இறக்கும்போது இரண்டு விடும் இருபது ஏக்கர் நிலமும் இருந்தன. வேலு நன்றாகப் படித்து அவன் விரும்பியபடி விவசாயமோ வியாபாரமோ செய்யும் பருவம் வந்தவுடன் சொத்துக்களைப் பாகம் பிரிக்க எண்ணினார் முருகேசன். தம்பியின் படிப்பில் மிகவும் அக்கறை காட்டி வந்தார். வேலுவை அன்புடன் வேலுத்தம்பி என்றே அழைப்பார்.

ஆனால் வேலுவோ சிறு வயது முதலே அண்ணனுக்கு எதிரிடையான பழக்க வழக்கங்கள் ஏற்பட்டு நவநாகரிகமாக உடை உடுத்துவான். கையில் கடிகாரம், சில்க் — சட்டை இவற்றுடன் ஆடம்பரமாக விளங்குவான். அருகில் உள்ள ஊருக்கு நண்பர்களுடன் இரவு நேரங்களில் சென்று சினிமா பார்த்து விட்டு வருவான். பல சிற்றுண்டிச் சாலைகளில் கணக்கு வைத்துக் கொண்டு நண்பர்களுடன் அடிக்கடி சென்று சிற்றுண்டி உண்பான். கையில் காசே நிற்காது. உண்மையைச் சொன்னால் அண்ணன் கோபிக்கக்கூடும் என்றெண்ணி அண்ணியிடம் போய் கூறிக் காசு வாங்கிச் செல்வான். ஊதாரி என்று ஊரில் பட்டம் ஏற்பட்டு விட்டது. அண்ணன் எவ்வளவோ கண்டித்தும் தண்டித்தும் பயன் ஏற்படவில்லை; படிப்பும் ஏறவில்லை.

முருகேச முதலியாரின் மனைவி விசாலாட்சி அவர் போலவே கருத்தொருமித்தவள். ஆனால் அவள், ஊர் வம்புக்குப் பயந்து "ஏன் வீணு வயசு வந்த பிள்ளையைக் கண்டிக்கிறீங்க? ஊர் என்ன சொல்லும்? அப்பா அம்மா அற்ற புள்ளையை அண்ணி சொல்ற பேச்சைக் கேட்டு அண்ணன் கொடுமைப் படுத்தறாரு என்பாங்க. வேண்டாம், விடுங்க. தானே முன்னுக்கு வரும். இல்லாட்டி ஒரு கால்கட்டு கட்டித் தனியா அனுப்பிடுங்க" என்பாள். அவள் கூறியபடியேதான் ஆயிற்று முடிவில். தம்பியின் தொந்தரவுகளைத் தாங்க மாட்டாது கடைசியில் உறவில் நல்ல அழகான பெண்ணான மீனாட்சியைப் பார்த்துத் திருமணம் பண்ணி வைத்ததுடன் சொத்துக்களையும் பிரித்துக் கொடுத்து விட்டார். அப்போதாவது பொறுப்பு உணர்ந்து வழிக்கு வர மாட்டானா என்ற நல்ல எண்ணம் தான். ஆனால் அதுதான் நிறைவேறவில்லை.

நாளடைவில் வேலுத் தம்பிக்குச் சீட்டாட்டம், பருத்தி ஆட்டம் எல்லாம் அத்துப்படி

ஆகி விட்டது. அவனது அருகிர் நண்பர்களால். பண முடையில் வீட்டை வைத்துப் பணம் வாங்க ஏற்பாடு செய்தான் வேலு. இது கேட்டுப் பதறிப் போனார் முருகேசர். ஓடிச் சென்று அவனுக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்துத் தானே அதை அடமானம் பெற்றார். வேறு யாராவது கடன் கொடுப்பதையும் தடுத்தார். ஊர் முழுதும் அண்ணன் வஞ்சனையாகத் தம்பியின் சொத்தைப் பறிப்பது பற்றியே பேச்சாக இருந்தது.

வேலுவுக்கு எப்பொழுதும் பணம் தேவை. 'உனக்கு உன் அண்ணன் தாம்பா முதல் வைரி. அவர் கௌரவமாக இருந்து கொண்டு உன் கௌரவத்தைப் பாழ்படுத்தி வருகிறாரு' என்றெல்லாம் நண்பர்கள் ஓதி வந்தது வேலுவின் மனத்தில் நன்கு ஊறித்து வேர் விட்டுத் தழைத்துச் செழித்து வந்தது. ஆதலாலேயே அடிக்கடி நேரிடையாக அண்ணனை வாயில் வந்தபடியெல்லாம் திட்டத் தொடங்கினான் வேலு.

இதனைச் சிறிதும் பாராட்டாமல் கோர்ட்டில் கேஸ் போட்டு அவனது எல்லாச் சொத்துக்களையும் ஏலத்தில் தம் பேருக்கே எடுத்துக் கொண்டு விட்டார் முருகேச முதலியார். இதில் வேலுவுக்கு ரொம்ப வருத்தம்.

வேலுவுக்கு வாய்த்த நல்ல மனைவியான மீனாட்சியோ, "ஏன் வீணாக அண்ணனுடன் சண்டை போடறீங்க? சும்மா இருங்க. அவருக்கு என்ன குழந்தையா, குட்டியா? சொத்தை வெச்சுக்கிட்டு என்னதான் பண்றாரு? நம்மை விட்டா அவருக்கு வேறு யாரு?" என்று சமாதானம் செய்து வருவாள்.

வீடு, நிலம் யாவும் அண்ணன் வசமாகி விடவே வேறு ஒருவரின் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துப் பயிரிட்டு வந்தான் வேலு. கோடி வீட்டில் குடி புகுந்தான். சிலர், "வேலு பாவம் சிறுக; அண்ணன் ஒரே கஞ்சன். கருமி. தம்பியை ஏமாத்திச் சொத்தை யெல்லாம் சுருட்டிக்கிட்டான்" என்பார்கள்.

வேறு சிலர், "என்ன இருந்தாலும் அண்ணன் அண்ணன்தானே? இது காலி; சூதாட்டம் ஆடிக்கிட்டுக் குடும்பச் சொத்தை அழிப்பதை எந்த அண்ணன்தான் பார்த்துக் கிட்டிருப்பான்? முருகேசர் வல்லவரோ நல்லவரு. தம்பியைப் படிக்க வைச்சு, கல்யாணம் வேறு செஞ்சு, பாகத்தையும் லக்கிறு வெச்சுப் பிரிச்சுக் கொடுத்தாரே. யார் இது போலச் செய்வாங்க?" என்பார்கள்.

வேலு எப்பொழுதும் எடுப்பார் கைப் பிள்ளை. யார் எது சொன்னாலும் அங்கு ஏறும். ஆனால் அவனுக்குச் சேர்ந்தவர்கள் எல்லோரும் அண்ணனைத் தூஷித்தே வந்ததால் அண்ணனிடம் அவனுக்கு வைரம் முற்றிக் கொண்டே வந்தது.

முருகேசர் அந்த ஊர் முருகப் பெருமான் கோவிலுக்குத் தருமகர்த்தாவாக வேலை பார்த்து வந்தார். மனிதர் பெயருக்கேற்ப முருக பக்தர். தருமகர்த்தா உத்தியோகத்தைத் தருமத்துக்குப் பயந்தே செய்து வந்தார். காலணா வரவானாலும் செலவானாலும் அன்றன்று கணக்கில் இருக்கும். பெரிய குருக்கள் முதல் பூத்தொடுக்கும் பண்டாரம் வரை எல்லோருக்கும் இவரிடம் நடுக்கம் என்றால் சாதாரண நடுக்கம் இல்லை. ஏன்? தாமும் பிறர் பொருளைத் தொட மாட்டார்; பிறர் தொடவும் விடமாட்டார். நெற்றியில் விபூதி தரித்து, கழுத்தில் ருத்திராக்ஷம் அணிந்து சுவாமியை வழிபட்டு விட்டு வருவதுடன் கோயில் வேலைகள் செவ்வனே நடக்கின்றனவா என்பதையும் அப்படியே கையோடு கவனித்துக் கொண்டு வருவார்.

வேலுத் தம்பிக்கோ இளமை முதலே இவர் தொழில் கட்டோடு பிடிக்காது. "சாமியா



வது பூதமாவது? வேஷத்தைப் பாரு வேஷம். நெத்தியிலே பட்டையும், கழுத்திலே கொட்டையும், காலிலே கட்டையும் ஊரை ஏமாத்துற வேஷம்'' என்பான். நண்பர்கள் இதைக் கேட்டுக் கலகலவென நகைப்பார்கள். இப்பொழுதோ கேட்கவே வேண்டாம். அண்ணன் வீட்டில் அமர்ந்த காக்கை தம்பி வீட்டில் உட்கார்ந்தால் கூட நெருப்பே பிடித்துவிடும் என்ற நிலைமை வந்து விட்டது.

இவர்கள் இப்படி இருந்தாலும் அவர்களின் மனைவிமார் விசாலமும், மீனாட்சியும் தம் கணவன்மார் வெளியில் போயிருக்கும்போது புறக்கடை வழியாகச் சென்று உறவாடிக்கொண்டிருப்பர். அதுவும் முருகேசர் மனைவியான விசாலம் பெயருக்கேற்ப விசால மனப்பான்மை யுடையவள். தன் மைத்துனன் உணவுக்குக் கஷ்டப்படுவதைக் கண்டு மனம் பொறுது மறைவாக அரிசி, புளி, மிளகாய், தேங்காய், மாங்காய் இன்னும் என்னென்ன விளைந்து வருமோ, அவற்றை யெல்லாம் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருவாள். இவ்விஷயம் தன் அண்ணனுக்குத் தெரியாது என்பது தம்பி, தம்பியின் மனைவி—இவ்விருவருடைய அபிப்பிராயம் ஆகும்.

இப்படி இருக்கும் போது ஒரு நாள் தம்பியின் காளை மாடு ஒன்று தமது கொல்லையை மேய்ந்து விட்டது

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

"எனக்கு இப்போது 55 வயதாகிறது.

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன ஆனால் 1943-ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற, மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன். 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை வலுவுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகிறார்கள். சிகிச்சை பெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன், மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்கும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்."

---

"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார் மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆதலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்திமதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."




GEOFFREY MANNERS & CO., LIMITED

என்பதற்காகப் பௌண்டில் அடைத்து விட்டார் முருகேசன். அப்பொழுது ஒரு கத்தியை உருவிக்கொண்டு, ''குத்தி விடுகிறேன் அந்த அண்ணன் பாவியை!'' என்று கிளம்பி விட்டான் வேலு. ஊரார் ஒன்று கூடி அவனைத் தடுத்து அடக்குவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

முருகேச முதலியார் மிகவும் நல்லவர். கணக்குப் பார்த்துக் கெடுபிடி செய்து வட்டிக்கு விட்ட பணத்தை கோர்ட்டில் போட்டுக் காலணாவையும் விடாது வசூலிப்பாரே தவிர யாராவது உழவர் வந்து கஷ்டம், பட்டினி என்றால் உடனே உதவி செய்வார்.

சிலர் சுவாதீனமாக ''என்ன முதலியார்! இவ்வளவு மந்தலங்களுக்கு எல்லாம் உதவி புரிகிறீங்களே. தம்பிக்கு மட்டும்...'' என்றால் அதற்கு அவர், ''அருளாதாரம் வேறு; பொருளாதாரம் வேறு'' என்பார். யார் எது சொன்னாலும் காதில் போட்டுக் கொள்ளவே மாட்டார். பிடிவாதக்காரர்.

திடீரென்று ஒருநாள் அவர் மனைவி விசாலம் இறந்து விட்டாள். அப்பொழுதுகூட மீனாட்சியின் தூண்டுதலால் தூர நின்று எட்டிப் பார்த்து முழுக்குப் போட்டு விட்டு வந்து விட்டான் வேலுத்தம்பி. அனாதையான முருகேசர் சோமு என்ற ஓர் ஏழைப் பையனைச் சமைக்கவும், மற்ற உதவிக்குமாக வைத்துக்கொண்டு தனியே வாழ்ந்துவந்தார். ஒரு பண்டிகை விழா என்றாலும் கூடத் தம்பி கூப்பிடுவதும் இல்லை. அவர் வருவதும் இல்லை.

இந்த நிலையில்தான் அவர் திடீரெனப் பாரிச வாயுவினால் தாக்கப்பட்டு நினைவற்றுக் கீழே விழுந்து விட்டார். நாக்கு வேறு இழுத்துக் கொண்டு விட்டது. சோமு என்ற சிறு பையனுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. வேலுத் தம்பியிடம் போகவே பயந்தான். ஏனெனில் முன்கோபக்காரன் அவன். பின்பு எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு ஊரெல்லாம் தேடிக்கொண்டே கடைசியாக மேட்டுக்கால் வயலுக்கு நீர் இறைத்துக் கொண்டிருந்த வேலு முன்னால் போய் நின்றான். மெதுவாக நடுங்கும் குரலுடன், ''ஐயா! அண்ணனுக்கு இன்னிக் காலையிலே நினைவில்லாமே கீழே விழுந்துடுச்சு. கஞ்சி கூட உள்ளே இறங்கல்லே'' என்றான்.

வேலு அவனைத் தீப்பொறி பறக்க விழித்துப் பார்த்தான். ''ஏண்டா! திமிரா உனக்கு! எங்க அண்ணன் ஒரு வேஷக்காரன். நீ அவனுக்கு மேலே வேஷம் போடுறியே! ஏ கழுதே! போடா என் முன்னாலே நிக்காதே. எங்க சொத்தை யெல்லாம் உனக்குத் தானே அழுறான் அவன். உங்க நாடகமெல்லாம் எனக்கும் தெரியும் வக்கீலய்யா வடிவேலு வந்ததும் இவங்க சுயமான்னு ஏதோ பேசிக்கிட்டதும் கடைசியா உன் மேலே உயில் எழுதியதும் எனக்குத் தெரியாதுன்னு என்னனிக்கிட்டையா? நாயே! போடா போ. கஞ்சி இறங்காட்டா மண்ணைக் கரைச்சுக் கொட்டு அவன் வாயிலே. என்னு மண்ணுலே ரொம்ப ஆசை அவனுக்கு. நல்லா இறங்கும். செத்தாக்கூட என்னிடம் சொல்ல வராதே! போ, தொலை'' என்று இரைந்தான் வேலு.

சோமு வெலவெலத்துப் போனான். நேராகப் போய்ப் பக்கத்து ஊர் டாக்டரை அழைத்து வந்தான். அவர் வந்து பார்த்தார். ஊசி போட்டார். பின்பு சோமுவை நோக்கி, ''இவர் தம் நினைவு வந்து பேசினாலும் பேசுவார். இல்லாட்டியும் இல்லே. அநேகமா மூணு

## காங்கிரஸ் ஆட்சியிலே......

காங்கிரஸ் சர்க்கார் தனது வரி விதிப்புக் கொள்கையின் மூலம் மக்களைக் கசக்கிப் பிழிந்து விடுகிறது. நகரசபை, பஞ்சாயத்து வரிகள் போக இன்று இந்தியவும், ராஜ்யங்களுமாக ஆண்டுக்கு 1700 கோடி ரூபாய் வரி கட்டி வருகின்றன. அதாவது சராசரியில் வருஷத்துக்கெல்லாம் முந்நூறே ரூபாய் சம்பாதிக்கும் ஒவ்வோர் இந்தியனும் அதில் நாற்பது ரூபாயை வரியாகச் செலுத்துகிறான்! இருக்கும் இந்த வரிகள் போதாதென்று அடுத்த ஐந்தாண்டுகளில் மேலும் 1700 கோடி ரூபாய்க்கு வரிகள் போடப் போவதாகக் காங்கிரஸ் கூறுகிறது. இரண்டாம் திட்ட காலத்தில் 450 கோடி ரூபாய்க்குப் புது வரிகள் விதிக்கப் போவதாகக் கூறி உண்மையில் 1050 கோடி ரூபாய் திரட்டிய காங்கிரஸ் இப்போது 1700 கோடி என்று சொல்லும் தொகை உண்மையில் எவ்வளவுக்கு உயருமோ?

இந்த வரிகளை வருமான வரி, சொத்து வரி முதலிய நேரடி இனங்களாகவும், விற்பனை வரி முதலிய மறைமுக இனங்களாகவும் விதிப்பார்கள். விற்பனை வரி முதலியவற்றைத்தான் தாங்கள் தாங்குவதாகவும், வருமான வரி ஆகியவற்றைப் பணக்காரர்களே செலுத்துவதாகவும் மக்கள் கருதுகிறார்கள். உண்மை இதல்ல. நேரடியாகத் தாங்கள் தரவேண்டிய வரிகளைச் செலுத்திய பின்னும் தங்களுடைய இலாபம் குறையக் கூடாது என்று தொழிலதிபர்கள் உத்தேசமாகக் கணக்கிட்டு அதற்கேற்பவே உற்பத்தியையும், அவற்றின் விலையையும் மாற்றி அமைக்கிறார்கள். ராஜாஜி கூறியது போல் கழுதையின் மேல் நேரடியாகப் பளுவைச் சுமத்தினாலும் சரி, அல்லது அதன் மீது அமர்ந்திருப்பவன் மீது சுமத்தினாலும் சரி இறுதியில் அந்தச் சாது மிருகம்தானே முழு பாரத்தையும் தாங்கப் போகிறது? ஆனபடியால் குறைந்த வருவாயானாலும், ஏறுமுகமாக உள்ள விலை மட்டத்தாலும் ஏற்கனவே அவதியுறும் மக்கள் காங்கிரஸுக்குத் தக்க எதிர்ப்பில்லாவிடில் தங்கள் வயிற்றையும் வாயையும் இன்னும் இறுகக் கட்டவே வேண்டி வரும். மக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்!

நான்தான் கெடு'' என்று கூறிவிட்டுப் போய் விட்டார். பையன் முருகேசரின் தலையடியில் தனியாக உட்கார்ந்து கொண்டு கண்களில் நீர் சிந்திக் கொண்டு வந்து விசாரிப்பவர் களுக்கு நிலைமையை விளக்கிக் கொண்டிருந் தான். ரகசியமாக வக்கீலய்யா வந்து உயில் எழுதியது என்னமோ உண்மை. எப்படியோ அதை இந்த வேலுகூடத் தெரிஞ்சுக்கிட்டிருக் காரே என வியந்தான். வக்கீலய்யாவின் நினைவு வரவே உடனே பக்கத்து ஊரிலுள்ள வக்கீ லுக்கு ஆபத்தான நிலையை எப்படியோ எட்ட விட்டான். பையன் கெட்டிக்காரன். வக்கீல் உடனே விரைந்து வந்தார். அதற்குள் முரு கேச முதலியார் விண்ணுலகடைந்துவிட்டார். அவரது தலைமாட்டில் சிறுவன் சோமு கண் ணீர் விட்டுக் கொண்டிருந்தான்.

ஊர் முழுதும் கூடி விட்டிருந்தது. எல்லோ ரும் 'கசமுச' என்று ஏதேதோ பேசிக் கொண் டிருந்தனர். யார் கொள்ளி போடுவது என்ப தைப் பற்றியதுதான் அந்தப் பேச்சு. சிலர் ''சோமுமீதுதான் அவருக்குப் பிரியம். வேலு வைக் கண்டாலே கட்டோடு பிடிக்காது. வக்கீலய்யாகூட வந்து அவன் மீது எல்லாச் சொத்துக்களையும் உயில் எழுதி வைச்சுட்டா ராமே'' என்று எதிர்த்த வீட்டு ஒட்டுத் திண்ணையில் உட்கார்ந்தபடியே பேசிக்கொண் டிருந்தனர்.

ஒருவர் ''என்னதான் தம்பி ஆயிரம் கெட்ட வனாயிருந்தாலும் அவன் சொத்தையெல்லாம் பிடுங்கிக் கொண்டு நடுச் சந்தியிலே இப்படியா நிக்கவைக்கிறது? சேசே, ரொம்ப கல்நெஞ்சுக் காரரு. ரத்த பாசம் கூட அத்தவரு. யாரோ ஊர்ப் பையன் மேலே எழுதி வெச்சதிலே என்னய்யா லாபம்? இப்ப பாருங்க ஒருகுரல் அழறவங்ககூட இல்லாமே அனாதையாகக் கிடக்கிறாரு. ம். மனிசனுக்குக் கோவிந்தா கொள்ளிதான் கொடுப்பனே'' என்றார்.

இப்படி இரண்டு கட்சிகளுக்கும் பண மில்லாமலேயே வக்காலத்து வாங்கி வாதாடிக் கொண்டிருந்தவர் பலர்.

இந்த நேரத்தில் தான் கோடி வீட்டுத் திண்ணையில் வடிவேலுக்கும் அவன் மனைவி மீனாட்சிக்கும் கடுமையான வாய்ப் போர் நடந்து கொண்டிருந்தது.

கையிரண்டையும் கோத்துத் தலைக்கு மேலாக வைத்துக் கொண்டு சாய்மனையில் சாய்ந்தபடியே கால்களை முறுக்கித் தூணை உதைத்துக் கொண்டு கண்களில் இப்போறி பறக்க இரைந்து கொண்டிருந்தான் வேலுத் தம்பி.

''ஏய், மீனாட்சி! இதோ பாரு. எனக்கு இல்லாதது உனக்கு என்னடி வந்திடுச்சு? நீ அங்கே போறதுன்னு போ. அப்படியே.. வீட்டு வழி வந்தியோ மறுபடியும் அண்ணன் போன வழிதான் உனக்கு. சாக்கிரதை.பாவிக் குக் கோவிந்தா கொள்ளிதான் கொடுத்து வெச்சது. சும்மா இடை. வயிற்றெரிச்சலைக் கிளப்பாதே. ம்! படுபாவி! என் சொத்து முழு வதையும் அநியாயமாய்ப் பிடுங்கி ஊர் பேர் தெரியாத அனாதைக்குக் கொடுத்த மகாபாவி முகத்திலேயா போய் முளிக்கச் சொல்றே?'' என்று கத்திக் கொண்டிருக்கும் போதே வடி வேலு எதிரே வக்கீல் வந்து நின்றார். கவனிக் கவே இல்லை அவன்.

அவன் முன்னே வந்தவர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே நிதானமாக ''தம்பி! எழுந்துவா. நீ எண்ணியது அவ்வளவும் தப்பு, தம்பி. உனக்காகவே வாழ்ந்தாரு உங்க அண்ணன்தை. உனக்காகவே மறுதாரம் கட்டிக்கக் கூட மறுத்தாரு. உன்னைச் சின்ன வயசுலேந்து எவ்வளவோ வளர்த்துக் கொண்டு வந்துடணும்னு பார்த்தும் பயனில்லேன்னு எண்ணியே குடும்பச் சொத்து வெளியிலே போகக் கூடாதுன்னு உனக்குக் கடன்கொடுப் பது போல நடித்துக் குடும்பச் சொத்தைத் தன்னிடத்திலேயே வைச்சுக்கிட்டாரு. இதோ பார். உயில் யார்பேருக்கு பாத்தியா? எல்லாச் சொத்தும் உன் பேருக்குத்தான். இந்தக் கடிதத்தையும் பார். கடைசி வரியைக் கவனி. 'இனி மேலாவது பொறுப்பா சொத்தை வெச்சுக்கிட்டு விருத்திசெய்வாய் என என்னு கிறேன்' என்று எழுதியிருப்பதைப் பாரு. பத்து நாட்களுக்கு முன்பு 'என் உடம்பு ஒரு மாதிரியா இருக்கு. ஓர் உயில் எழுதிடுங்க' என் ஞரு. நான்தான் எழுதினேன். உங்க அண்ணி, மறைவா அப்பப்போ உங்களுக்கு உதவி பண் ணினதுகூட அவர் சொல்லிச் செஞ்சது தாம்பா. அதுக்கெல்லாம் கூடக் கணக்கு வைச்சிருக்காரு. காட்டுறேன் பாரு. அப்படி இல்லேன்னு சொத்து நிக்காது தம்பி.

''இவ்வூர் முருகன் கோவிலுக்கு ஓர் ஆயிர மும் இரவு பகலாகப் பாடுபட்ட அந்த ஏழைப் பையன் சோமுவுக்கு நீ இஷ்டப்பட்டால் ஓர் ஆயிரமும் கொடு என்று எழுதியிருப்பதைப் பாரப்பா. வாய் மூச்சு போகச்சே கூடக் கண்ணைத் திறந்து வேலு வந்தானு, வந்தானு என்று நாத் தழுதழுக்கக் கேட்டாருன்னு சோமு சொல்லி அழுறது. என்ன இருந்தாலும் ரத்த பாசம் போகுமா, தம்பி? எழுந்திரு. அண்ணனின் சவக் கடனை முடி'' என்று கூறிக்கொண்டே காகிதக் கத்தைகளை யெல் லாம் அவன் முன் பிரித்தார்.

முருகேச முதலியார் என்று முத்து முத்தா கப் போட்டிருந்த அண்ணனின் கையெழுத் தைப் பார்த்தான். ''ஐயோ அண்ணா!'' என்றான் வேலுத்தம்பி. ஆவேசம் வந்தவனைப் போல அப்படியே உருண்டு கீழே விழுந்தான். தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டான். பொருமினான். பரபர என ஓடி வந்து அண்ண னின் சடலத்தின் அருகே வீழ்ந்தான். வாய்க் குள் மேல் துண்டை அடைத்துக் கொண்டு, ''அண்ணா! அண்ணா!'' எனக் கதறினான். சோமுவை அப்படியே அணைத்துக் கொண் டான். ''தம்பி சோமு! நீதான்டா கொடுத்து வெச்சவன். எங்கண்ணனின் உண்மைத் தம்பி நீதான்டா. நான் பாவி. எங்க அண்ணனின் பெருமையறியாத மாபாவி. என்னை மன் னித்து விடு. தம்பி, மன்னித்து விடு'' என்று அவன் ஓலமிட்டதில் அந்த வீடே அதிர்ந்தது.

கூடத்தில் இருந்தவர்களுக்கு, வக்கீல் என்னதான் அப்படிச் சொன்னார் எப்படி இப்படி ஒரேயடியா இவனை மாற்றி விட்டார் என்று ஒன்றுமே புரியவில்லை. சிறிது நேரத் துக்கெல்லாம் உண்மை ஊர் முழுதும் பரவி விட்டது. ''என்ன இருந்தாலும் ரத்த பாசம் விடுமாண்ணே?'' என்றனர் எல்லோ ரும் ஒருமுகமாக.







நான் பலவீனமடைந்து களைப்புற்று வீட்டு வேலைகள் செய்ய முடியாமல் சிரமப் பட்டேன்.

எங்கள் அடுத்த வீட்டு மாமி தினமும் இரண்டு வேளை போர்ன்-வீடா அருந்தவேண்டுமென்று சொன்னாள்.







அவர்களுடைய டாக்டரும் அதையேதான் சொன்னாராம். நானும் அதைக் கடைபிடித்தேன். சக்தியும் பலமும் பெற்றேன்.

இப்பொழுது உடம்பும் முன்போல நன்றாகிவிட்டது.

எல்லாம் போர்ன்-வீடா தந்த சக்தி.




நான் என் வேலைகளை சக்தியுடன் செய்து வருவதற்குக் காரணம்



Cadbury's

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்

''வெவ்வெவ்வே.....''

ராஜாதான் அப்படி அழகு காட்டினான். பொறுக்க முடியாத கோபம் பொங்கி வழிந்தது அவன் உள்ளத்தில். அழுது அழுது கண்கள் கோவைப்பழமாய்ச் சிவந்திருந்தன. வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எதிர் வீட்டை நோக்கினான். அங்கு,—

கன்னத்துக்குக் கைகளைத் தாங்கி, கால்களை மடக்கிக் கொண்டு திண்ணை விளிம்பில் 'மோட்டு மோட்'டென்று உட்கார்ந்திருந்தாள் பிரேமி. வருத்தமா, வேதனையா என்று உணர முடியாத கலவரம் முகத்தில் வழிந்தது. கிட்டத்தட்ட அழத் தயாரா 'வனி' போல் வரவே அவனையு மறியாமல் உடல் குலுங்கியது. மலைத்து நின்று விட்டாள். போகலாமா, வேண்டாமா?

அவன் வருவான் என்று நினைத்துத்தானோ என்னவோ அடுத்த விநாடி காமிரா அறைக்கு ஓடி விட்டான் ராஜா. நுழைந்தவன் எதிரே யிருந்த அலமாரியில் கீழ்த் தட்டை நோக்கினான். மூலையில் பாண்டி ஆடும் ஓட்டாஞ் சில்லுகள் இரண்டு கிடந்தன.

''இதுதானே எனக்கு அடி வாங்கி வைத்தது. கழுதை பிரேமி வேண்டுமென்றே விளையாடக் கூப்பிட்டு அடி வாங்க வைத்து விட்டாள். சனியன் இனிமேல் இந்த ஆட்டமே

# பதிலுக்குப் பதில்



சிதம்பரம் ராஜகோபாலன்

வேண்டாம்!'' ஆத்திரத்துடன் சில்லுகளை எடுத்து வெளியே எறிந்தான். ஜன்னல் வழியே தெருவில் வந்து விழுந்தன அவை.

ஜன்னல் வழியே தலையை நீட்டிப் பார்த்தான். பிரேமி அப்படியேதான் இன்னும் நின்றுகொண்டிருந்தாள்.

தோன்றியது முக பாவம். மை இட்டிய விழிகளை உருட்டி ராஜாவையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இருடி, உன்னைப் பார்த்துக்கறேன். நான் என்ன தப்பு செஞ்சேன்? பந்தயம் போட்டபடி தானே நடந்தேன். அநியாயமா என்னை அடி வாங்க வைச்சு.....'' இப்படி உள்ளூர அவன் கறுவியபொழுது துக்கம் தாளாமல் கேவிக் கேவி அழ ஆரம்பித்து விட்டாள்.

ராஜா அழுவதைப் பிரேமியால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. எப்படியாவது சமாதானம் செய்து விட வேண்டுமென்று படிகளில் இறங்கினாள்.

''இனிமேல் அவளோடு சேர்ந்தியோ தொலைச்சேன்... ஜாக்கிரதை!'' — அப்பா போட்ட அதட்டல் திடீரென்று நினைவுக்கு

எவரும் சொல்லிக் கொடுக்காத,—அடுத்தவர் பார்த்து ஆச்சரியப்படுமளவுக்கு இருவரிடையே ஒரு பரிச்சயம். அப்படிப்பட்ட ஒற்றுமையில் இன்றென்ன விரிசல்?.மாற்றம்! .....அது ஒரு கதைதான்.!

ராஜா நான்காவது படிப்பவன். பக்கத்துத் தெருவிலுள்ள பேசி பாடசாலையில் தான் அவன் படிக்கிறான். எதிர்வீட்டிலிருக்கும் சந்திர சேகரனின் மகள் பிரேமியும் அவன் வகுப்புத்தான். ஒரு வித்தியாசம். ராஜா 'ஏ' கிளாஸ். அவள் 'பி' கிளாஸ்.

மற்றப்படி இரண்டு பேரும் ஒன்றாய்த்தான் பள்ளிக்கூடம் போவார்கள். வருவதும் அப்படியே. வீட்டுப் பாடம் எழுதுவது, கணக்குப் போடுவது, விளையாடுவது யாவும் இருவரின்றி இயங்காது.

வீடு தனித்தனியே இருந்து விட்டதால் சேர்ந்து இருக்க முடியவில்லையே என்ற குறை ஒன்றுதான் அவர்களுக்கு. எந்த நேரத்திலும் இருவர் நினைவிலும் இருவரும் சுழன்றுகொண்டிருப்பார்கள். அவ்வளவு ஒற்றுமை.

ராஜாவின் தந்தை செல்லப்பா பிரபல வக்கீல் குமாஸ்தா. டவுனில் மதிப்புள்ளவர். பிரேமியின் அப்பா பாங்கில் காஷியராக இருந்தார். பிஞ்சு உள்ளங்களின் தெய்வீகச் சேர்க்கையில் இவர்களும் நண்பர்களாகிவிட்டனர்.

அன்று மாலை நான்கு மணிக்கே பள்ளிக்கூடம் விட்டாயிற்று. ராஜாவும் பிரேமியும் என்ன விளையாட்டு விளையாடலாம் என்று ஆளோடியில் உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தனர்.

பிரேமிதான் கேட்டாள்: ''கண்ணாமூச்சி விளையாடலாமாடா....தாத்தாவைப் பொத்தச் சொல்லலாம்!''

''நான் வல்லே அந்த ஆட்டத்துக்கு.''

''சரி.... நொண்டி ஆடலாமா?''

''அய்யய்ய .... போயும் போயும் நொண்டி அடிக்கணுமா? அதுவும் வேண்டாண்டி.''

''அப்ப, கல்லா, மண்ணா விளையாடுவோமா?'' ஆர்வத்தோடு கேட்டாள் பிரேமி.

''ஊஹூம். அந்த ஆட்டம் வேண்டாம். வேகமா ஓடினால் கால் ஒடிஞ்சு போயிடும். அப்புறம் அம்மா உதைப்பா......''

எது சொன்னாலும் வேண்டாம் வேண்டாமென்கிறானே? விளையாட இஷ்டமா இல்லையா? பிரேமியின் முகம் சுருங்கியது.

''என்னடா நீ. எதுவும் வேண்டாம் வேண்டாம்ங்கிறே. எதுதான் நல்ல விளையாட்டு? நீயேதான் சொல்லேன்.''

பிரேமியின் மன ஆறுதலுக்காகவாவது, விளையாடித்தானாக வேண்டுமென்று முடிவு செய்தான் ராஜா. என்ன விளையாட்டு விளையாடலாமென்று புரியவில்லை அவனுக்கு. அதற்குள் பிரேமியே பட்டென்று சொல்லிவிட்டாள்.

''பாண்டி ஆடலாமே?''

மீண்டும் முடியாதென்று விடுவானோ என்ற பயத்தில் அவன் முகத்தையே உற்று நோக்கிப் பதிலை எதிர்பார்த்தாள்.

''ஓ...ரைட்! அதுவே விளையாடலாம். நீ

பெஸ்ட்!'' என்ற ராஜா கையில் சில்லொன்றை எடுத்துக் கொண்டு தெருவில் குதித்தான்.

''பாண்டின்னு உடனே இம்மிதியே... பெண்கள் ஆடற ஆட்டம்தான் உனக்குப் பிடிக்குமா? நான் நல்லா பாண்டி ஆடுவேன். என்னை ஜெயிக்க முடியாது. தெரியுமா?''

''பார்க்கலாமா? நான் உன்னை ஜெயிச்சுடறேன். எல்லாப் பழத்தையும் நானே எடுத்துடறேன். என்ன பந்தயம்?''

''நீ ஒரு பழம் எடுத்தா என்னை நானு குட்டு குட்டணும். நான் எடுத்தா உன்னைக் குட்டுவேன். சரிதானே?''

''சரி சரி, ஏரோப்ளேன் பாண்டியா?''

''ம்க்கும்'' என்ற பிரேமி ஒரே நிமிஷத்தில் பாண்டி போட்டு விட்டாள். இருவரும் மும்முரமாய் விளையாடினார்கள். பிரேமி தன் ஆட்டத்தின் போது சில்லை வேகமாக உதைத்து விடவே, தூரத்தில் போய் விழுந்து விட்டது. தாண்ட முடியாமல் ஒற்றைக்காலில் தவித்தாள்.

''ராஜா. ஆனைக்கால் ஒண்ணு தாடா..''

''ஆனைக்காலும் இல்லே. குதிரைக் காலும் இல்லே. தாண்ட முடிலேன்னு ஆட்டம் போச்சு. அவ்வளவுதான்!'' என்றான் ராஜா.



> ஒரு வீட்டில் நான்கு பிள்ளைகள் இருக்கிறார்கள். மூன்று பேருக்குக் காலில் ஊனம். ஒருவன் மட்டும் நல்ல நிலையில் இருக்கிறான். ஊனமுள்ளவர்களைக் குணப்படுத்த முயலுவதுதான் நியாயம். அந்தவீட்டு, 'மூன்று பேருக்குக் குறைபாடு இருக்கும்போது ஒருவன் நன்றாக இருக்கலாமா? அவனையும் முடமாக்க வேண்டும்' என்று சொல்வது பொருந்துமா? நாட்டில் சிலர் பணக்காரர்களாகவும், மற்றவர்கள் ஏழைகளாகவும் இருந்தால் பிந்தைய வகுப்பினரின் செல்வ நிலையை உயர்த்துவதுதான் நியாயம். ஆனால் காங்கிரஸின் சோஷலிஸமோ 'ஏழைகள் இவ்வளவு பேர் இருக்கும்போது சிலர் மட்டும் பணக்காரர்களாக இருப்பதாவது? அவர்களையும் ஏழைகளாக்குவோம்' என்கிறது.
>
> — ராஜாஜி

ராஜா ஓரே போடு போட்டு விட்டான். பிரேமி ஒற்றைக் காலைக் கீழே வைக்காமல் கெஞ்சிப் பார்த்தாள். முடியவில்லை, பாவம்! கண்களைக் கசக்கிக் கொண்டு வெளியே வந்து விட்டாள்.

அடுத்த ஆட்டம் ராஜா ஆடினான். ஒரே மூச்சில் எமத் தாண்டலாய்த் தாண்டி எல்லாப் பழத்தையும் எடுத்து விட்டான். பிரேமி பேச முடியாமல் திகைத்து நின்று கொண்டிருந்தாள்.

''தோத்துப் போயிட்டியே... உன்னைக் குட்டலாமா?''

பிரேமிக்கு அழுகை வெடித்துக் கொண்டு வந்து விட்டது. பாவாடையால் முகத்தை மூடிக் கொண்டாள். இந்த மாதிரி எந்தத் தடவையும் ஒரு பழம் கூட எடுக்காமல் தோற்றதில்லையே என்ற ஆதங்கம் வேறு. மௌனமாய்த் தலையை மட்டும் ஆட்டினாள்.

கையை நாக்கில் தொட்டுக் கொண்டு ரெடியானான் ராஜா குட்டுவதற்கு.

''ஒன்று...இரண்டு ... மூன்று ...'' என்று வாய் முணுமுணுக்கப் பிரேமியின் தலையில் 'நறுக் நறுக்'கென்று குட்டு விழுந்து கொண்டிருந்தது. ஒன்றின் மேல் ஒன்று விழ வலி தாங்காமல்பெரிதாய் அழுதுவிட்டாள் அவள்.

அழுகைச் சத்தம் கேட்டவுடன் சந்திரசேகரன் வெளியே ஓடி வந்து விட்டார். ராஜா மட்டும் குட்டுவதை நிறுத்தவில்லை.

''ஏண்டா மடையா, மூளை இருக்கா உனக்கு? ஆட்டம் தப்பா ஆடினா அதுக்குன்னு இப்படியா குட்டறது?'' என்றவர் அவன் முதுகில் ஒன்று வைத்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் வக்கீல் குமாஸ்தாவிடம் விட்டு விட்டார்.

தோற்றுவிட்ட வெட்கம். குட்டில் விளைந்த ஆத்திரம் இரண்டும் பிரேமியை அழவிட்டு வேடிக்கை பார்த்தன.

ராஜாவுக்குச் சரியான உதை கிடைத்தது. 'பிரேமியுடன் சேர மாட்டேன். பேச மாட்டேன்' என்று சொல்லச் சொல்லித் தோப்புக் கரணமும் போட வைத்து விட்டார்.

பிரேமியை மட்டும் அவன் அப்பா உதைக்காமல் விட்டு விட்டார்.

''மண்டு, மண்டு! அவன் தலையில் தேங்காய் உடைக்கிற மாதிரி குட்டுகிறான். பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு வாயைப் பிளக்கிறாயே. திரும்ப நாலு வைப்பதில்லை. இனிமேல் அவனோடு சேர்ந்தாயோ தொலைச்சேன். ஆமாம்!''

ராஜா குட்டக் குட்டப் பொறுமையாய்த் தலையைக் காட்டிக் கொண்டிருந்த காரணம் அவருக்கு எப்படித் தெரியும்?

இதுதான் நடந்த கதை. 'அப்படி இப்படி' என்று ஒரு வாரமும் ஓடி விட்டது.

பிரேமியைக் கண்டாலே பிடிக்கவில்லை ராஜாவுக்கு. அவளைக் கண்டாலே ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது.

ராஜாவுடன் பேசாமல் படிக்காமல் விளையாடாமலிருப்பது விளக்கெண்ணெய் குடித்தது போலிருந்தது பிரேமிக்கு. அவனுக்கு விழுந்த அடியைப் பற்றி நினைப்பு வந்து விட்டால் அழுதே விடுவாள். சென்ற ஒரு வாரமாய்ச் சரியாகச் சாப்பாடுகூடப் பிடிக்கவில்லை அவளுக்கு.

'பிள்ளையாரப்பா. இன்னிக்குப் பள்ளிக்கூடத்தில் எப்படியாவது ராஜாவைப் பார்க்க வேண்டும், பேச வேண்டும். கருணை புரிய மாட்டாயா?....' தினமும் இதுதான் அவள் பிரார்த்தனை!

அரை மணி முன்பாகவே பள்ளிக்கூடம் விட்டுக் கிளம்பி விட்டான் ராஜா. புஸ்தகப் பையுடன் எதிரிலுள்ள மரத்தினடியில் நின்று கொண்டிருந்தான்.

எப்பொழுதும் பிரேமியுடன் வந்து அவன் அங்குதான் உட்கார்ந்து விளையாடுவது வழக்கம். பள்ளிக்கூடம் விட்டதும் அங்கு சந்தித்து விட்டு திரும்புவார்கள்.

அன்று தனியாய் நின்று கொண்டிருந்தது ஏதோ குறையாகவே பட்டது அவனுக்கு. பிரேமி வந்தாலும் வந்திருப்பாள். இரண்டாவது மணி அடித்தவுடன் போய் உட்கார வேண்டும். இல்லையேல் பேச்சுக் கொடுத்தாலும் கொடுப்பாள்.

ராஜா தெரு முனையை நோக்கினான். இரட்டைப் பின்னல் போட்டுத் தலை நிறையப் பூ வைத்துக் கொண்டு பிரேமி வருவது தெரிந்தது. வேறு பக்கம் திரும்பிக்கொண்டு விறைப்பாக நின்றான்.

''ராஜா....என்னோடு பேச மாட்டாயா?.. என்றாள் தானே.........''

அதற்குள் ஆத்திரத்துடன் குறுக்கிட்டான் ராஜா. ''போதும்மா. என்னோடு பேசாதே. பந்தயத்திலே தோத்ததற்காகக் குட்டினான்னு சொல்லியிருந்தா உங்கப்பா தான் என்னை அடிப்பாரா?.... இல்லே முட்டித் தோப்புக் கரணம்தான் போடுவேனா? உன்னோடு 'காய்' தான். இனிமேல் என்கிட்டேயே வராதே!''

''ஏய்....ஏய்.... என்னோடு 'பழம்'னு சொல்லுடா. இனிமே அந்த மாதிரியெல்லாம் செய்ய மாட்டேன். இந்தா உனக்காகக் 'கமர் கட்' வாங்கிண்டு வந்திருக்கேன்.''

அந்த நேரம் பார்த்துத்தான் விச்சு ஓடி வந்தான். பிரேமியின் கையில் மிட்டாய் இருப்பதைப் பார்த்துவிட்டான். ''எனக்கு ஒண்ணு தாயேண்டி....'' என்று பல்லைக் காட்டிக் கெஞ்சினான். கடைசிவரையில் அவனை விரட்டி




# பரிசீலனைக்குப் பின் விநியோகம்

மோட்டார் உறுப்புகள் உற்பத்தியாளர் நம் நாட்டில் பலர். உறுப்புகள் விநியோகத்தை மேற்கொள்ளுமுன், நாங்கள் ஒவ்வொரு உறுப்பையும் தரம், நயம், உழைப்பு முதலியவற்றிற்கு பரிசீலனை செய்து, பின்புதான் ஏற்றுக்கொள்கிறோம். இக்காரணத்தினால்தான், "டிவிஎஸ் விநியோகிக்கும் உறுப்பு, உழைப்பில் சிறந்தது" என்பது பழமொழிபோல் உலவுகிறது.

**நாங்கள் விற்பனை செய்யும் இந்தியாவில் தயாரித்த உறுப்புகளில் சில:**

'ஸ்டாண்டர்ட்' பாட்டரி; 'அல்லைட்' பல்புகள்; 'பெரோடோ' பிரேக் லைனிங்; 'பென்னர்' பான் பெல்டுகள்; 'டபின் லைப்' சேஸிஸ் பாகங்கள்; 'எச் அண்ட் டி' பிரேக் டிரம்கள்; 'மைகோ' பியூயல் இஞ்செக்ஷன் பாகங்கள்: 'டிரான்கோ' (இந்தியன்) வால்வுகள்; 'கானரா' ஸ்பிரிங், லீவுகள்; QHL - RANE டை ராடு எண்டுகள் ; 'ஹெல்லா' ஹாரன்கள் (இந்தியன்)

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்.**

மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்-கோயமுத்தூர்




**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**

மதராஸ்-பெங்களூர்-செகந்திராபாத்

**மதராஸ் ஆட்டோ சர்விஸ் பிரைவேட் லிமிடெட்**

மதராஸ்-பெங்களூர்

JWT, TVS-14994

அடித்து விட்டு அவன் ராஜாவிடம் கெஞ்சினான். ''ராஜா...... ஒண்ணே ஒண்ணு எடுத்துக்கோடா....''

''போடி. உன் கமர்கட் ஒண்ணும் எனக்கு வேண்டாம். உன்னைப் பதிலுக்குப் பதில்...'' என்றவன் மேலே சொல்லாமல் நிறுத்தினான்.

பிரேமி தன்னுடன் பேச வேண்டுமென்று எவ்வளவோ வாதாடினாள். கெஞ்சினாள்... ஒன்றுக்கும் ராஜா அசைந்து கொடுக்காமல் ஓடி விட்டான்.

'பதிலுக்குப் பதில்....' என்று சொல்லி ராஜா, பட்டென்று நிறுத்தியது அவள் இளம் மனத்தை ரொம்பவும் வேதனைப் படுத்தியது. அவன் பட்டது போல் நானும் அடிபட வேண்டுமா? அப்பொழுது தான் திருப்தி அடைவானா? பின்புதான் என்னோடு பேசுவானா?...

வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்தாள் பிரேமி.

வகுப்புக்கு டீச்சர் வரவில்லை. பிரேமிதான் மானிட்டர். யார் பேசினாலும் குட்ட வேண்டுமென்பது கட்டளை.

தவறி வாய் பேசி விடுமோ என்று பயந்து வாயைப் பொத்திக் கொண்டார்கள் சிலர். நிலவியிருந்த அமைதிக்குப் பங்கம் விளைவித்தவர்கள் பிரேமியின்கையால் குட்டுப்பட்டனர்.

மேஜையின் அருகில் நின்று கொண்டு இரு வகுப்பையும் நோட்டம் விட்டுக் கொண்டிருந்தாள், பிரேமி. கடைசியில் யாரோ பேசும் சத்தம் கேட்டு அருகில் சென்று குட்டுவதற்குக் கை ஓங்க, அது ராஜாவாக இருக்கவே அவள் கை தாழ்ந்து விட்டது.

எப்ப குட்டு விழுந்து விடும் என்ற பயத்தில்தான் தலை குனிந்தவாறே இருந்தான் ராஜா. ஆனால் பிரேமி மௌனமாய்த் திரும்பியது பெருத்த ஆச்சரியமாக இருந்தது.

'அவள் ஏன் என்னைக் குட்டவில்லை? நான் தான் பேசினேனே.... ஓகோ! என்னோடு தான் பேச மாட்டாளே.... அதனால் குட்ட முடியவில்லையாக்கும்!'

அடுத்த விநாடி இதர பையன்கள் எல்லாம் 'காச் மூச்' என்று கத்த ஆரம்பித்து விட்டார்கள். பிரேமி எவ்வளவோ அடக்கிப் பார்த்தாள். முடியவில்லை. அதற்குள் டீச்சரே வந்து விட்டார்.

விச்சு எழுந்து படபடவென்று கூறினான். எவ்வளவோ கெஞ்சியும் கமர்கட் கொடுக்க முடியாதென்று கூறிவிட்டானே என்ற ஆத்திரம் அவனுக்கு.

''சார்.... எங்களை யெல்லாம் மொட்டு மொட்டென்று குட்டினா சார். ஆனால் ராஜா மட்டும் பேசினபோது குட்டாமலே திரும்பி வந்து விட்டாள் சார். ஏன் தெரியுமா சார்? அவன் மிட்டாய் வாங்கிக் கொடுத்தான்னு தான். எனக்குத் தெரியும். பையில்கூட மிட்டாய் வைத்திருக்கிறான்.''

டீச்சர் பிரேமியைக் கூப்பிட்டார். நடுங்கிக் கொண்டே போய் நின்றாள்.

''ராஜா பேசினானா?''

''ஆமாம், சார்.''

''நீ குட்டினாயா?''

''இல்லே சார், வந்து....''

''அவனுக்கும் தண்டனை கொடுக்க வேண்டியதுதானே? ஏன் குட்டவில்லை, சொல்.''

''.........''

''மிட்டாய் வாங்கிக் கொடுத்தான்னு குட்டவில்லை. அப்படித்தானே?''

பிரேமி மௌனமாக நின்று கொண்டிருந்தாள். ராஜாவுக்கோ உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது. எனக்கும் சேர்ந்து உதை விழுமோ?

''சொல்கிறாயா, இல்லையா இப்பொழுது?'' டீச்சர் அதட்டினார். அவர் கையில் ஆடிய பிரம்பைக் கண்டவுடன் உடம்பெல்லாம் எரிந்தது பிரேமிக்கு.

''கமர்கட் வாங்கிக் கொடுத்தான். அதனாலே......''

''ஓகோ, மிட்டாய் வாங்கிக் கொடுத்தால் குட்டக் கூடாதா? இங்கே வா. இனிமேல் இப்படிச் செய்வாயா? செய்யாதே....செய்யாதே....!'' என்று சொல்லிக் கொண்டே 'பட்பட்' என்று பிரம்பால் இழுத்து விட்டார் டீச்சர். தேம்பித் தேம்பி அழுது கொண்டு நின்றாள் பிரேமி.

''சார்... நான் மிட்டாய் வாங்கித் தரவில்லை. பொய், பொய்'' என்று பெரிதாகக் கத்த வேண்டும் போல் இருந்தது ராஜாவுக்கு. ஆனால் பயத்தில்தான் உடலே உதறிக் கொண்டிருந்ததே!

''போ... போய்ப் பெஞ்சி மேல் நில்!''

பள்ளிக்கூடம் விட்டாயிற்று.

'பிரேமிக்கு நான் எப்பொழுது மிட்டாய் வாங்கிக் கொடுத்தேன்? ஏன் பொய் சொன்னாள்? எதற்காக டீச்சரிடம் உதை வாங்கிக் கொண்டு பெஞ்சி மேல் நின்றாள்? இதற்கெல்லாம் நான்தான் காரணமோ?...நானா... நான் என்ன செய்தேன்?' ராஜாவின் சிந்தனை பலமாக இருந்தது.

எப்பொழுதும் பிரேமியைச் சந்திக்கும் மரத்தடி வந்து விட்டதைப் பிறகுதான் உணர்ந்தான். பிரேமி எதிரில் பரிதாபமாக நின்று கொண்டிருந்தாள்.

ராஜா அவளைப் பார்ப்பதற்கே கூசினான். அந்த ஒருகணம் அவன் மனம் என்னென்னவோ நினைத்தது. பிரேமி என்ன எதிர்பார்த்தா நிற்கிறாள்? பேசப் போகிறாளா?

''ராஜா. இனி மேலாவது என்னோடு பேசுவாயா?'' என்று கெஞ்சினாள் பிரேமி.

அவன் பேசவில்லை. எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான்.

''என் மேலே உனக்கு இன்னும் அதிகம் கோபமாகத்தான் இருக்கும். டீச்சரிட்டே வேணும்னுதான் பொய் சொன்னேன். ஆட்டத்திலே தோத்துப் போயிட்டேன்னு நீ குட்டினே. அது தெரியாமல் எங்கப்பா உன்னை அடிச்சார் நான் அழுகையை நிறுத்திட்டு உண்மையைச் சொல்லியிருந்தால் உனக்கு அடி விழுந்திருக்காது. அப்படி செய்யலே. அந்தத் தப்புக்காக உன் கண் முன்னாலே தண்டனை வாங்கிண்டுட்டேன். பதிலுக்குப் பதில் சரியாய்ப் போச்சு. இனி மேல் என்னோட பேசுவியா? காயா பழமா?''— தொண்டை கரகரக்கக் கேட்டாள் பிரேமி.

''பிரேமி....என்னை மன்னிச்சுடு....''— என்று கத்திய ராஜாவால் அதற்கு மேலும் பேச முடியவில்லை. விழிகள் இரண்டும் கண்ணீரால் உருண்டன. அடுத்த விநாடி அன்புப் பிரவாகம் பொங்கிப் பெருகிக் கன்னங்களில் வழிந்தது. அன்பில் பிணைந்த உள்ளங்கள் உணர்ச்சியில் மூழ்கின ஒரு நிமிடம்!




## காமனை வென்ற கண்

குற்றாலம் முதலிய பொதிகைமலைச் சூழலில் பசுமையான வருணனைகளும், விறுவிறுப்பான சம்பவங்களும் அமையும்படி கவி அவர்கள் இந்த நாவலைப் பின்னியுள்ளார்கள்.

முத்தையன், பாண்டித்துரை, செண்பகம், எல்லாரும் வளமையுள்ள கதாபாத்திரங்களாக வந்து போகின்றனர்.

லக்ஷ்மிக் குட்டி கதை படிக்கிறவர்களையும் சேர்த்தே மயக்கி விடுகிறாள். கோபால வாரியரோடு நாமும் அவ்வப்போது இரயிலில் பயணம் செய்வது போலிருக்கிறது. திரைப்படத்தில் தமிழகத்திலே ஏது இல்லை என்று வருந்துகிறார்களோ அது இந்த நாவலில் நிரம்பியுள்ளது. அதாவது பசுமையான வெளிப்புறக் காட்சி வருணனைகள்; படிக்கச் சுவை தருகிற கதைதான்.

ஆசிரியர்: கவி சுப்பிரமணியன், வெளியீடு: குயிலன் பதிப்பகம், சென்னை 17, விலை ரூ. 2.

## 'தேவன் வருவாரோ'

'உலகையே ஒரு விசித்திரமாய் விழித்து நோக்கித் திகைப்போடு உங்களைப் பார்த்தும் 'களுக்'கென இதழ்கள் மலரச் சிரித்து உங்களை நோக்கிக் கைகளை நீட்டித் தாவும் இனிமையான குழந்தைக் கதைகளும் இதில் உண்டு' என்று இந்தக் கதைத் தொகுதியின் நயமான முன்னுரையில் ஓர் இடத்தில் ஜெயகாந்தன் கூறுகிறார். ஆசிரியரே கூறுவது போல இந்தத் தொகுதியில் கோவை செய்யப் பட்டிருக்கும் கதைகள் அனைத்தும் ஏதோ ஒரு வகையில் குழந்தைகளோடு சம்பந்தமுள்ள கதைகள் தாம்.

ஒவ்வொரு குழந்தையும் அதன் பெற்றோர்களுக்கு மட்டுமல்லாமல் — கதைகளுக்குப் பொருளாவதோடு மட்டுமல்லாமல் — ஒரு சமுதாயப் பிரச்னையாகவும் உருவெடுக்கிறது என்பதைச் 'சோற்றுச் சுமை', 'முச்சந்தி' 'யந்திரம்' ஆகிய கதைகளோடு நன்றாக இணைத்து மீண்டும் மீண்டும் சிந்திக்க முடியும். அப்படிச் சிறப்பாக அமைந்த கதைகள் அவை.

பொம்மை என்கிற கதையில் வருகிற சிவகாமி, 'மோதிர விரலையும் நடுவிரலையும் வாயில் விட்டுச் சப்பிக் கொண்டு முகமே கண்களாய் விரியப் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு' — ரங்கம்மாளுக்கு முன் நிற்பதைக் கதை படித்த பின் எவ்வளவு நாளானாலும் மறக்க முடியாது. 'முகமே கண்களாய் விரிய' என்று இந்த இடத்தில் விழுந்திருக்கிற வார்த்தைப் பிரயோகம் வெகு நயம். குறைப்பிறவி, இரண்டு குழந்தைகள், பேதைப் பருவம் எல்லாமே ஓரோரு விதத்தில் நல்ல கதைகள். இந்தத் தொகுதியிலேயே பெரிய சிறுகதையான துறவு குழந்தைக் கதை மட்டுமல்ல. குழந்தைப் பருவம் முடிந்தும் குழந்தைத்தனமாயிருந்த ஒரு கதாபாத்திரத்தைப் பற்றிய அழகிய கதை. சோமுவைக் குழந்தை என்று சொல்ல எனக்கு மனம் வரவில்லை. 'தோத்தோ'வில் வருகிற குழந்தை நாய் சிறைப் பட்டதற்காக வருந்திய வருத்தத்தைச் சொல்ல மொழியும் வாக்கியமும், பேச்சும் இன்றித் தவித்திருக்கும். கதை படிக்கிறவர்களுக்கும் எவ்வளவோ உணர்ச்சிகளுக்கு ஆளாய்ப் பேச வராத அநுதாப மிகுதியை இந்தச் சிறு குழந்தைக் கதை அளிக்கிறது. இந்தத் தொகுதியிலுள்ள பதினொரு கதைகளையும் அவசியம் படிக்க வேண்டும். படிக்கத் தொடங்கு முன் இதை எழுதியவரின் முன்னுரையைப் படிப்பது போலவே பதினொரு கதைகளைப் படித்த பின்பும் மீண்டும் ஒருமுறை முன்னுரையைப் படிக்க வேண்டும். படித்ததில் புதிய அழகுகள் புரிய அது துணை செய்யும்.

ஆசிரியர்: ஜெயகாந்தன்; வெளியீடு: மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. விலை ரூ. 3.

## ஸ்துதிகுஸுமாஞ்சலி

'விளங்கும் துறைகள் பலப்பல ஆக்கி, மதி விகற்பால் பிணங்கும் சமயம் பலப் பல ஆக்கி, அவை அவைதோறும் அணங்கும் பலபல ஆக்கி நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்' என்று ஆழ்வார் இறைவனைப் போற்றினார். இன்று இந்தப் புண்ணிய பூமியில் பக்தி குறைவுபட்டிருக்கலாம். என்றாலும் அதே சமயம் சமயத் துறையில் மதி விகற்பத்தால் பிணங்கும் பேத புத்தியும் குறைந்து வருவது மகிழ வேண்டிய விஷயம். இந்த சமரஸ மனப்பான்மையை வளர்க்கும் வகையில் இறைவனின் பலப் பலவான மூர்த்திகளையும் குறித்த ரமணீயமான சுலோகங்களைத் தொகுத்தளித்திருக்கிறார் நூலாசிரியர்; எளிய தமிழில் பொருளும் தந்திருக்கிறார்.

ஆசிரியர்: அ. ஸுப்பராமன்; கிடைக்குமிடம்: இந்தியன் இண்டஸ்ட்ரியல் கம்பெனி லிமிடெட், 263, எஸ்பிளனேட், சென்னை-1.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited. at the Kalki Press. Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# கூந்தலை நன்றாக வாரி முடிவதின் வனப்பு

கூந்தலை வழவழப்பாகவும், பொலிவுடனும் விளங்கச் செய்யும்
**ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி**
வாரினால் உங்கள் கூந்தல் அழகாகத் தோற்றமளிக்கும்.






கூந்தல் அலங்காரத்தைச் செய்யும் விதம்:

ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி கூந்தலை நன்றாக இழைய வாரவும். அடியில் ரிப்பனினால் கூந்தலை நன்றாகக் கட்டவும். மேல்புறத்தைநோக்கி கூந்தலை வளையமாக மடித்து, பின்செய்து, எஞ்சியுள்ள கூந்தலை இடதுபுறம் தொங்கும்படி விடவும். (படம் 1.) எஞ்சியுள்ள கூந்தலை வளையமாகச் சுற்றி, நுனிப் பாகத்தை உள்ளே சொருகிவிடவும். (படம் 2.) கொண்டையை நன்றாகப் பின்செய்து, நகைகளினால் அலங்கரிக்கவும்.

**ஸ்வஸ்திக் ஹெயர் ஸ்டைல் "அலங்கார்"**

**ஸ்வஸ்திக்**
ஆயில் மில்ஸ்
லிமிடெட்
பம்பாய்.

Shilpi S.O.M. 16-A TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon